# கீதா மகரந்தம்

[சுவாமி வித்யா பிரகாஸானந்தா]

## முதற் பகுதி

(முன்னுரை மற்றும் முதல் அத்தியாயம்)

தமிழாக்கம்:

*பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்*



திருமலை திருப்பதி தேவஸ்தானம்

திருப்பதி.

GITA MAKARANDAM - Vol. I
By
SWAMY VIDYAPRAKASHANANDA

Tamil Translation :
Dr. K. SARVOTHAMA RAO

T.T.D. Religious publication Series No. 574



T.T.D. First Edition :1999

Copies : 2,000

Price :

Cover Page Art: Sri P. Narayanagiri Dattu

Published by :
Dr. I.V. Subba Rao, I.A.S.,
Executive Officer,
Tirumala Tirupati Devasthanams,
Tirupati.

Printed at :
Students Offset Printers
Tirupati.

# பதிப்புரை

"எதனைத் தின்ருல் பித்தம் தெளியும்" என்ற நிலையில் மனிதன் இன்று விளங்குகின்ருன். ஆம், பிரச்சனைகளே அவனது வாழ்க்கையாக விளங்கிவிட்டது. எது பிரச்சனை? பிரச்சனைகளுக்கு யார் காரணம்? பிரச்சனைகள் தீர வழி என்ன? எனும் கேள்விகளை மனிதன் ஒருநாளும் நடுவுநிலையில் நின்று தன்னைக் கேட்டுக் கொண்டதில்லை. அதுபோது அவனே அவனுக்கு ஒரு பிரச்சனையாகத் திகழ்கின்ருன்! அவ்வாறின்றி ஒருமுறை அமைதியாக அவன் தன்னைப்பற்றி அறிந்து கொள்ள முயற்சித்தானாயின் வாழ்க்கை அவனுக்கு ஒரு பூந்தோட்டமாக விளங்கிவிடும். அன்பு, இரக்கம், தியாகம், பொறுமை, கடமை, நேர்மை எனும் பண்புக்கூறுகள் அவனுள் இல்லாவிட்டால், அவற்றை தன்னுள் வளர்த்துக் கொள்ளாவிட்டால் பொருமை, கோபம், ஏமாற்றம், தோல்வி ஆகியனவே அவனிடம் குடிகொள்ளும். இதனால் உறவுகள் கசந்திடும்; காண்பனவும், கேட்பனவும் எரிச்சலையே தரும். இறுதியில் இவற்றின் விளைவாக அவன் பிறர்க்கும் தனக்கும் பிரச்சனைகளின் மொத்த உருவமாக இருந்திடுவான்.

ஏதோ மனிதனின் பிரச்சனைகள் இந்த யுகத்தில் மட்டுமே ஏற்பட்டன என்பது இல்லை. உலகம் தோன்றியது முதல், அவனுள் ஆசைகள் பிறந்ததுமுதல், அவ்வாசைகளை அடக்கத்தவறியது முதல் பிரச்சனைகள் தோன்றின என்றே கூறவேண்டும். ஆம் ஆசைகளை அடக்கத்தவறியதால் கடமையை மறந்தான்; கோபத்தைத் துறக்க மறந்ததால், பெருமையை இழந்தான்; அன்பினைக் காட்டத் தவறியதால் வன்முறைக்கு வழிதந்தான். இதனால் தவறுகளை செய்து கொண்டே போக, சுயநலத்திற்கு அடிமையாகி தீவிரவாதத்திற்குத் துணையாகி ஏமாற்றங்களுக்கு இருப்பிடமாகி இறுதியில் அவன் ஒரு 'சமூக பிரச்சினை'யாக விளங்கி விட்டான்.

அத்தகு மனிதனை திருத்திடும்வகையில் அவனுள் இறைநம்பிக்கையினையும், தன்னம்பிக்கையினையும், கடமை உணர்வினையும் விளங்கச் செய்து அவனுக்குத் தியாகத்தின் பெருமையினையும், அன்பின் அருமையினையும், தொண்டின் சீர்மையினையும், ஆன்றோர் மற்றும் சான்றோர் நட்பின் அவசியத்தையும் உணர்த்தி அவன் தன் பிறவி பயனுள்ளதாகத் திகழவே அக்கண்ணபெருமான் 'கீதை' எனும் வாழ்க்கை இலக்கண அமுதினை, போர்க்களத்தில் கடமையை மறந்து, பாசத்திற்கும் இடையில் அகப்பட்டு அமைதி இழந்து, குழப்பத்தின் உச்சியில் இருந்த அர்ச்சுனனுக்கு உபதேசிக்கும் முகத்தான், நமக்கு அளித்துள்ளான்.

அத்தகு பெருமைமிகு கீதைக்குக் காலம் காலமாக ஆசார்யர்களும், அடியார்களும் , அறிஞர்களும் பல மொழிகளில் பல விளக்கவுரைகளை வழங்கி அக்கீதைக்கு உயர்வு தந்து தங்களை இனங்காட்டிக் கொண்டனர்.

இனிப்பு என்றாலே நமக்கு உடன் நினைவுக்கு வருவது தேன் ஆகும். பல மலர்களிலிருந்து சேகரித்துப் பெறப்படும் தேன் ஒரு மருந்தாகவும் பயன்படுகிறது. அதை உண்பதற்கு வயது வரம்பில்லை. அத்தகு தேனாக - இந்து சமயத்தேனாக - ஒப்பற்ற ஆன்மீகத்தேனாக - வாழ்க்கை இலக்கணத் தேனாக கீதைக்கு ஓர் அருமையான விளக்கவுரையினை 'கீதா மகரந்தம்' எனும் தலைப்பில், திருப்பதி அடுத்துள்ள திருக்காளத்தி நகரை ஒட்டி ஓடிடும் ஸ்வர்ணமுகி நதிக்கரையில் அமைந்துள்ள ஸ்ரீசுகப்பிரம்ம ஆஸ்ரமத்தின் ஸ்தாபகரும், அதன் தலைவருமாக விளங்கி ஒப்பற்ற சமயத்தொண்டினைத் தன் இறுதி மூச்சு உள்ள வரை மேற்கொண்டு, அண்மையில் மறைந்த ஸ்ரீவித்யா பிரகாஸானந்த சுவாமிகள் நமக்கு வழங்கி, அதனால் படித்து அறிந்து நாம் உயர்ந்திட, நமக்கு ஓர் அரிய வாய்ப்பினை நல்கியுள்ளார். அவர்தம் மூல நூலான இத்தெலுங்கு கீதா மகரந்தத்தினை டாக்டர். எம். சர்வோத்தமராவ் அவர்கள் தமிழில் தெளிவாகவும், எளிமையாகவும் மொழிபெயர்த்து

தமிழர்களின் ‘கீதா தாகத்’தினை தீர்த்து வைத்துள்ளார் எனில் அது மிகையாகாது. இந்நூலுக்கு நூலாசிரியர் தந்துள்ள முன்னுரையே ஒரு நூல் அளவில் வெளியிடும் அளவிற்கு கீதையின் பெருமையும், சிறப்பும் பரக்கப்பேசப் பெற்றுள்ளன. கீதை எனும் மாளிகையின் அடித்தளமாக சுவாமிகளின் முன்னுரை அமைந்துள்ளது.

வேதங்களின் சாரமாகத் திகழ்ந்திடும் கீதையின் பெருமை பேசும் இக்கீதா மகரந்தம் எனும் இந்நூலினை திருப்பதி தேவஸ்தானம் தன் வெளியீடாக வெளிக்கொணர்வதில் மிகவும் பெருமிதம் கொள்கிறது. ஒவ்வொரு தமிழர் வீட்டிலும் இருக்கவேண்டிய இந்நூலினை அனைவரும் பெற்றுப் பயன்பெறுவார்களேயாயின் அதுவே தி.தி. தேவஸ்தானம் தனது சமய நூல் வெளியீட்டுப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டதில் முழு வெற்றி அடைந்துள்ளது என்றே கருதும்.

செயலாட்சித்தலைவர்
திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# மொழி பெயர்ப்பாளர் முகவுரை

இருபதாம் நுற்றாண்டில் பகவத்கீதை பிரச்சாரத்தில் ஈடுபட்ட சான்றோர்களில் சுவாமி சின்மயானந்தா, மலையாள சுவாமிகள், அவரின் சீடரான காளஹஸ்கி ஸ்ரீ வித்யா பிரகாசானந்த சுவமிகள் ஆகியோர் குறிப்பிட்டத்தக்கவர்கள்.

ஸ்ரீ வித்யா பிரகாசானந்த சுவாமிகள், பல இந்திய மொழிகளிலும் உள்ள கீதை விரிவுரைகள் அனைத்தையும் நன்கு ஆராய்ந்து பாமர மக்களுக்கு எளிதில் புரியும் வகையில் சொற்பொழிவுகள் ஆற்றியவர் அன்னார், சொற்பொழிவுகளாக மட்டுமின்றி அவற்றை புத்தக வடிவிலும் கொணர்ந்து அனைவருக்கும் பயன்படும் வகையில் ஆக்கி வைத்துள்ளார்கள். அவருடைய 'கீதாமகரந்தம்' இதுவரை பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினர், ஸ்ரீ வித்யா பிரகாசானந்த சுவாமிகளின் தெலுங்கு மொழியில் அமைந்துள்ள 'கீதாமகரந்தத்தைத்' தமிழிலும் இந்தியிலும் மொழிபெயர்ந்து வெளியிடக் கருதினர். திருமலை திருப்பதி தேவஸ்தான முன்னாள் காரிய நிர்வாக அதிகாரி திரு எம்.வி.எஸ். பிரசாத், ஐ.ஏ.எஸ் அவர்கள், தமிழில் மொழி பெயர்க்கும் பெரும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். இந்த மொழி பெயர்ப்பின் இடையே ஏற்பட்ட ஐயங்களைப் போக்கி உதவியவர்கள், பேராசிரியர் திரு. சௌரிராஜன், டாக்டர் ஜே. முனிரத்தினம் முதலியோர் பகவத் கீதையின் மொழிபெயர்ப்பின் ஆரம்பம் முதல் இறுதி வரை கருத்துரையாடலில் பங்கு கொண்டது மட்டுமின்றி கையெழுத்து பிரதி எழுதி உதவியர் திருமதி இராதா இராமநாதன், எம்.ஏ.எம்.பில். அவர்கள். இம் மொழி பெயர்ப்பிற்குத் துணை நின்றோர் இன்னும் பலர் திருமலை

திருப்பதி தேவஸ்தான பொதுத் தொடர்பாளர் திரு. ராவுல சூரிய நாராயண மூர்த்தி அவர்கள், 'சப்தகிரி' ஆசிரியர் திரு. கே. சுப்பாராவ் அவர்கள், பேராசிரியர் திரு. எஸ்.பி. ரகுநாதாச்சாரியார் அவர்கள், திரு. கோபால சுவாமி அவர்கள் ஆகியோர்.

இம் முயற்சியில் என்னை ஊக்குவித்து உற்சாகப்படுத்திய இன்னும் பல நண்பர்கள், அறிஞர்கள், அதிகாரிகள் ஆகிய அனைவர்க்கும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்
கே. சர்வோத்தம ராவ்,
பேராசிரியர், வெங்கடேசுவரா பல்கலைக் கழகம்
தெலுங்கு மொழித் துறை,
திருப்பதி - 517 502

திருப்பதி,
தேதி : 11.09.97



**சேதோ ப்ருங்க ப்ரமசி வ்ருதா**
**பவ மருபூமௌ விரசாயாம்**
**பிப பிப கீதா மகரந்தம்**
**யதுபதி முக கமல பவாட்யம்**

*மனமெனும் வண்டே! சாரமற்ற இந்த உலகியல் பாலைவனத்தில் ஏன் வீணாகச் சுற்றுகிறாய்? இனி இவ்வாறு அலைவதை விட்டு தாமரையிலிருந்து வெளிப்பட்ட மேன்மை பொருந்திய கீதா மகரந்தத்தை அருந்துவாயாக!*

**"விரிந்தபொருளிலும் ஆழ்ந்தகருத்திலும் சமத்துவத்திலும் கீதைக்கு ஈடான புத்தகம் வேறொன்று இல்லவேயில்லை".**

*-மகரிஷி மலையாள சுவாமிகள்*

"Those of you know Sanskrit should tomorrow, if possible today, buy the Gita and begin to study the book. Those of you who do not know Sanskrit should study Sanskrit, if only for the sake of the Gita. I tell you that it contains treasures of knowledge of which you have no conception what so ever."

***-Mahatma Gandhi***

உங்களில் வடமொழி தெரிந்தவர்கள் நாளை, இல்லையேல் முடிந்தால் இன்றே, ஒரு கீதை புத்தகத்தை வாங்கிப் படிக்க ஆரம்பித்துவிடுங்கள். வடமொழி அறியாதவர்கள் கீதைக்காகவாவது வட மொழியைப் பயிலுங்கள் - நான் உள்ளதை உள்ளபடி கூறுகிறேன் - நீங்கள் கண்டும் கேட்டும் அறியாத விலை மதிப்பற்ற அறிவுப் பொக்கிஷம் கீதையில் உள்ளது.

*-மகாத்மா காந்தியடிகள்*

## GITA

Truths beautifully arranged together in their proper places like a fine garland or a boquet of choicest flowers.

***-Swami Vivekananda***

அழகான பூமாலை போல் அல்லது கருத்தைக் கவரும் பூச்செண்டு போல் முறையாக மிக அழகாகத் தொகுக்கப்பட்ட தருமங்களின் தொகுப்பு கீதை.

*- சுவாமி விவேகாநந்தர்*

### *Message of the Gita*

### "BE FEARLESS"

**க்லைப்யம் மா ஸ்ம கமஹ் பார்த்த**

**நைதத் த்வய் யுபபத்யதே**

**க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யம்**

**த்யக்த்வோத்திஷ்ட்ட பரந்தப**

அர்ஜுனா! அதைரியம் கொள்ளாதே., கோழைத்தனம் உனக்குத்தகாது., இழிவான இந்த இதய பலவீனத்தை விட்டொழித்து எழுவாயாக. கடமை தொடங்குவாயாக.

"If one read this one sloka he gets all the merits of reading the Gita for in this sloka lies imbedded the whole message of the Gita".

***-Swami Vivekananda***

இந்த ஒரு சுலோகத்தைப் படித்தால் கீதை முழுவதையும் படித்த நலனை மனிதன் பெறுவான். ஏனெனில் கீதை தரும் செய்தி முழுவதும் இந்த ஒரு சுலோகத்திலேயே அடங்கியுள்ளது.

*-சுவாமி விவேகானந்தர்*

## GITA - A MIRACULOUS REMEDY FOR LIFE'S TRAGEDY

"When doubts haunt me, when disappointments stare me in the face and when I see not one ray of light on the horizon I turn to Bhagavadgita and find a verse to comfort me and I immediately begin to smile in the midst of overwhelming sorrow. My life has been full of external tragedies and if they had not left any visible and indelible effect on me I owe it to the teachings of Bhagavadgita".

***-Mahatma Gandhi***

ஐயங்கள் என்னை அணுகும்போதும் சங்கடங்கள் சூழும் போதும் ஆசை தோன்றும் போதும் ஊக்கம் குன்றும் போதும் நான் கீதையைத் திறந்து பார்ப்பேன். அதில் ஏதோ ஒரு சுலோகம் என்னை தேற்றும். அதன் விளைவாக மிகவும் ஆபத்தான நிலையிலும் என் முகத்தில் புன்னகை பூக்கும். என் வாழ்க்கை பற்பல ஏற்றத் தாழ்வுகளுடன் அமைந்திருந்தாலும் கோரமான சங்கடங்களை அனுபவிக்க நேர்ந்தாலும் அவை யாவும் என் மனதில் சிறிதேனும் அமைதியின்மையை உண்டாக்குவதில்லை. இதெல்லாம் கீதோபதேசத்தின் நல்ல பலனேயாகும்.

*-மகாத்மா காந்தியடிகள்*



# அறிமுகம்

மகரந்தம் என்றால் தேன். கீதை தேன் போன்று இனியது மகிழ்ச்சியளிக்க வல்லது. துன்பத்தைப் போக்கவல்லது. தேனுக்கு நோய்தீர்க்கும் தன்மை உள்ளது ஆதலின் ஔடதங்களில் அதனை அதிகமாகப் பயன் படுத்துவார்கள். அதைப்போல் கீதை எனும் தேனை உட்கொண்டவர்களுக்குப் பிறவிப்பிணி பூரணமாகக் குணமாகும். தும்பி பல பூக்களிலிருந்து தேனைத்திரட்டுவது போல் கண்ணன் உபநிடதங்கள் என்னும் பலவித பூக்களிலிருந்து கீதை எனும் தேனை உலகிற்கு உவந்தருளினார். அறத்து அமுது இது என ஆண்டவனே இதனை அருளிச் செய்தார். ஆதலின் அமுதத்தை ஒத்த பிறப்பு இறப்பு எனும் பிறவிப்பொருள் துயரைப் போக்கும் பெருமான் திருவாயிலிந்து வெளிப்பட்ட கீதா மகரந்தத்தை வீடு பேற்றை விரும்புவோர் வேண்டிய மட்டும் பருகிப் பயன்பெறுவார்களாக.

தட்சிணகாசி என்று புகழ்பெற்ற திருக்காளத்தித் திருத்தலத்தில் சுவர்ணமுகி ஆற்றங்கரையில் சுகப்பிரம் மாஸ்ரமம் என்னும் ஓர் அழகிய ஆசிரமத்தை நிறுவி ஆன்மீகத் தொண்டாற்றி வரும் திருவித்தியா பிரகாசானந்தகிரி சுவாமிகள் கீதா மகரந்தம் எனும் பெயரால் கீதைக்கு விரிவான பொழிப்புரை அருளியுள்ளார். அதனை நூல்வடிவமாக வெளியிடுகிறோம். இந்நூலின் மூலம். சொற்பொருள். கருத்துரை, விளக்கவுரை மட்டுமின்றி கீதையைப் படிப்போர்க்கு மிகவும் தேவைப்படும் பிற செய்திகளும் தெரிவிக்கப்பட்டுள்ளன. தொடக்கத்தில் வழக்கிலுள்ள (வ்ராக புராணத்திலிருக்கும்) கீதாமகாத்மியம் மட்டுமின்றி ஸ்காந்தம், மகாபாரதம், வைணவீய தந்திர சாரம் ஆகிய நூல்களிலுள்ள கீதா மகாத்மியங்களும் சேர்த்து கருத்துரைகளுடன் தரப்பட்டுள்ளன. மற்றும் கீதையை ஜெபிக்கும் முறை பாராயணம் செய்யும் பாங்கு ஆகியவையெல்லாம் இதில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

கீதையிலுள்ள ஒவ்வொரு சுலோகமும் ஒரு மகா மந்திரமே. எந்தெந்த சுலோகத்தை எத்தனை முறை எவ்வளவு நாள் ஜெபம் செய்தால் எந்த நலன் கிட்டுமோ அவை, இந்நூலில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. உலகியல், ஆன்மீகப் பலன்களுக்குத் தேவையான ஜெப சாதனங்கள் வெவ்வேறாக இங்குக் கூறப்பட்டிருப்பினும் வீடு பேற்றை விரைவில் அடைய விரும்புவோர், வைராக்கியத்தை மேற்கொண்டு உலகியற் பலன்களை ஒதுக்கித் தள்ளி ஆன்மீகப் பலன்களுக்காகவே தீவிர முயற்சிகளை மேற்கொள்ளுதல் வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது. நாள்தோறும் நினைவில் கொள்வதற்குச் சில கீதா வாக்கியங்களும் தனியாக இதில் கொடுக்கப்பட்டுள்ளன. அத்தியாயங்களின் வாரியாக பத்மபுராணத்தில் கூறப்பட்டுள்ள கீதை ஓதும் பலன்களை காதைகள் வாயிலாக இங்குச் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. இந்த நூலின் துவக்கத்தில் தவத்திரு சுவாமிகள் அருளிய முன்னுரையும் உள்ளது. அதில் கீதையின் நோக்கம், தத்துவம், கீதை கூறிய சாதனங்கள் முதலியவை அனைத்தும் நன்றாகத் தெளிவாக்கப்பட்டுள்ளன. வாசகர்களின் நலனை முன்னிட்டு நூலின் இறுதியில் சுலோகங்களின் அகராதி இணைக்கப்பட்டுள்ளது.

இப்பெரு நூலை வெளியிடுவதில் ஒத்துழைப்பு நல்கிய சான்றோர்கள் அனைவருக்கும் எங்கள் உளமார்ந்த நல்வாழ்த்துக்களையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறோம். எல்லாம் வல்ல இறைவனின் அருளால் மிகவும் கருணை பொருந்திய மகரிஷிகளின் அருளாலும் கீதை ஞானம் உலகில் நாலா பக்கமும் பரவி அதன் விளைவாக மானிடர்களின் அகவிருள் விலக, ஆன்மீகப் பேரொளி வழி காட்ட அனைவருக்கும் முழு அமைதி கிடைக்கும் என்று நம்புகிறோம்.

இப்படிக்கு

பதிப்பாசிரியர்.

# கீதாஞ்சலி

**கீதா கல்பதரும் பஜே பகவதா க்ருஷ்ணேன ஸம்ரோபிதம்**
**வேத வியாச விவர்திதம் சுருதிசிரோ பீஜம் ப்ரபோதாங்குரம்**
**நாநா சாஸ்த்ர ரஹஸ்ய சாக மரதி சாந்தி ப்ரவாலாங்கிதம்**
**க்ருஷ்ணாங்க்ரி த்வய பக்திபுஷ்ப சுரபிம் மோக்ஷப்ரதம்ஞானினாம்.**

கீதை எனும் கற்பகத்தருவை நான் சேவிக்கிறேன் அது பகவானாகிய கண்ணபிரானால் ஊன்றப்பட்டது. உபநிடதங்கள் அதன் விதை ஆன்மபோதனையே அதன் முளை-பற்பல சாத்திர இரகசியங்கள் அதன் கிளைகள் - வைராக்கியமும் பொறுமையும் அதன் தளிர்கள் கண்ணபிரானின் திருவடித் தாமரைகளின்பாற்பட்ட பக்தி அதன் மலர்மணம் மற்றும், இது ஞானியருக்கு வீடு பேற்றை அளிக்க வல்லது.

# கீதை உயிர்களுக்கு உயர்நிதியம்

**விவேகானந்தர்**

கீதையில் கண்ணன் அர்ஜுனனுக்கு உரைத்தது வெறும் சொற்களல்ல' ஞானச்சுடர்கள். வாழ்க்கைக் குறிக்கோள் அனைத்தும் அங்கு கூறப்பட்டது. உபநிடதப் பூங்காவிலிருந்து ஆன்மீக உண்மைகள் என்னும் மலர்களை பொறுக்கிக்கோத்த மாலையே பகவத்கீதை.

**காந்திமகான்**

துயரம்மிகுந்தநிலையிலிருந்தாலும் அத்துயரம் என்னை அணுகாமலிருப்பதற்குக் காரணம் கீதையே.

**திலகர்**

உலக இலக்கியங்கள் அனைத்திலும் கீதைக்கு ஈடான நூல் மற்றொன்று இல்லை., எளிமையான விலைமதிப்பற்ற

இரத்தினம் அது., பரமானந்த நிலைக்கு நம்மை இட்டுச்செல்லும் ஒரு அபூர்வ கருவி.

**மகரிஷி மலையாளசுவாமிகள்**

பிறவிப் பெருங்கடலைக் கடந்து கடைத்தேற கீதையைப் படிப்பதும் அதன்படி நடப்பதும் போதுமானது.

**அரவிந்தயோகி**

மனிதன் தனது மேதை முழுவதும் பயன் படுத்தினாலும் கீதை ஞானத்தில் ஒரு சிறு கூறை மட்டுமே அறிந்து, பிறருக்கு அறிவிக்க வல்லவனாவான்.

**சிவானந்த சுவாமிகள்**

உலக இலக்கியங்களில் கீதைக்கு ஈடான பெருநூல் மற்றொன்று இல்லவேயில்லை. அது அறிவின் பொக்கிஷம்., குறையாத செல்வம், ஆனந்தக் கடல்.

**வினோபா பாவே**

என் உடல் வளர்ச்சிக்குத் தாய்ப் பால் எப்படிப் பயன்பட்டதோ அது போல் என் அறிவு வளர்ச்சிக்குக் கீதை அதை விட அதிகமாகவே பயன்பட்டது.

**மாளவியா**

எனக்குத் தெரிந்தவரையில் உலக இலக்கியத்தில் கீதைக்கு ஈடான நூல் மற்றொன்று இல்லை. அது இந்துக்களுக்கு மட்டுமல்லாமல்அனைத்து மனித கோடிகளுக்கும் அறப்பொக்கிஷமாக உள்ளது.

**எட்வின் ஆர்னால்ட்**

இந்த கீதை காப்பிய இயல்பு கொண்டதத்துவ (Philosophical) நூல். இந்தியர் அனைவரும் விரும்பும் நூல். இந்நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் படாமல் இருந்தால் ஆங்கில இலக்கியமே அரை குறையாக இருந்திருக்கும்.

**வாரன் ஹேஸ்டிங்ஸ்**

உயர்ந்த நிலைகளை எட்டிப் பிடிக்க விரும்பும் மனிதர்களுக்கு கீதோபதேசம் இணையற்றது.

**பங்கிம் சந்திரர்**

கீதையில் உள்ளது போல் அபூர்வமான வியாக்யானம் எந்நாட்டிலும் எக்காலத்திலும் யாரும் கண்டும் கேட்டும் இருக்க முடியாது.

# கீதா தேவி பிரார்த்தனை

தாயே! கீதையே! ஜகந்மாதாவே! ஒளிவடிவே! பிறவிப்பெருங்காட்டில் இடம் தெரியாமல் இன்னலுறும் எங்களுக்கு ஒருதிசை காட்டி வழிஅருளிச் செய்தாய். எங்கள் பிறவித்துன்பங்களை தாபத்ரயம்-அழிப்பதற்காக நீ கங்கணம் கட்டிக்கொண்டாய். கோடிக்கணக்கான பிறவிகள் அறியாமைக் காரிருளில் அடங்கியிருந்தாலும் என் நல்வினைப் பயனாக இந்தப்பிறவியில் உன் தொண்டாற்றும் பெருமை பெற்றதனால் எங்கள் இதயம் இன்பத்தினால் எழுச்சி கொள்கிறது. உன் அருட்கண்பார்வையால் மக்களுக்கிடையில் ஞான ஒளி தோன்றியதால் அறியாமை அடியோடு அழிந்து விடுகிறது. பிறவிப் பேரிருள் நீங்கிவிடுகிறது. இருள்சூழ்ந்த இவ்வுலகத்தில் நீ எங்களுக்குப் பேரொளி காட்டினால் தாயே உனக்கு எவ்வழியில்நாங்கள் கைம்மாறு செய்ய முடியும் ? உனக்கு எங்களது எண்ணிலடங்கா வணக்கங்கள்.

கீதாம்பிகையே! கண்ணபிரான் தன் அவதாரத்தை முடித்துக் கொண்டு வைகுண்டம் செல்லும் சமயத்தில் எமக்கு உன்னைக் காட்டிச் சென்றார். ஆதலின் நீ கண்ணனிண் பிரதிநிதியாக இருக்கின்றாய். அல்ல அல்ல, நீயே அந்த பகவான். கீதா தேவி ! நீயே எமக்குப் புகலிடம். எங்கள் இதயம் கனிந்த நல் வணக்கங்களைப் பெற்றுக்கொள்.

அறிவு வள்ளலே ! தன்னைப் படைத்த ஆண்டவனையும் தனக்கு அறிவுறுத்திய சாத்திரத்தையும் தன்னையே வாழ்வித்த நெறியையும், எக்காலத்திலும் மறக்கக் கூடாதென்பது சான்றோர் நல்லுரை. எனவே ஈடு இணையற்ற உன் போதனைகளால் எங்களை மேலும் ஈடேற்றம் கொண்டு வரமுயற்சிக்கும் உன்னை என்றென்றும் நினைவில் நிறுத்திக் கொள்ளுதல் எங்கல் கடமை.

ஒரு இனத்தையாயினும் ஒரு சமயத்தையாயினும் ஒரு சம்பிரதாயத்தையாயினும் பழிக்காமல் அனைத்தையும் ஒருங்கிணைக்கும் முறையில் நீ எங்களுக்குப் போதனை செய்தாய். பாவிகளும் கெட்ட நடத்தை உடையவரும் என்றாகிலும் நல்லோர் ஆவார்கள் என்று பேரிகை முழக்கிப் பறை சாற்றினாய். உயிர்களின் உள்ளங்கள் தூய்மையடைய எண்ணற்ற வழிகளைக் காட்டினாய்.

உலக அன்னையே ! நீ ஆற்றிய உதவியை எங்களால் எப்படி மறக்க முடியும். உனது அரிய போதனைகளை மறவாமல் இருக்கும்படி அருள்வாயாக. உனது அன்புக் குழந்தையாகிய எங்களைக் கரையேற்றி வாழ்த்துவாயாக.

திக்கற்றோரை ஆதரிப்பவளே! கருத்தைக் கவரும் உனது நல்ல போதனைகளை எங்கள் இதயத்தில் ஆழப்பதித்து முற்பிறவிகளின் தீய பண்புகளை உருக்குலைத்து ஞானோதயம் உண்டாகும்படி அருள்வாயாக.

தீனர்கள், நாதியற்றோர். துன்புறுவோர், வாழ்க்கையில் தவறியவர், பிறவிச் சேற்றில் அமிழ்ந்திருப்போர் ஆகியோரை ஆட்கொள்வதற்காக கங்கணம் கட்டிக் கொண்ட தேவியே! உலகத்தை உண்டாக்குபவளே! பதினெட்டு அத்யாயங்களைக் கொண்டவளே ! அம்பிகையே! உனக்கு எங்களுடைய அஞ்சலி, ஏற்றுக் கொள்வாயாக.

அனைத்து உபநிடதங்களின் சாரமே! பிறவிப் பெருங்கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கும் எங்களுக்கு நீ ஒரு படகு ஆவாய். உன்னை அடைக்கலம் நாடினோம். கரை சேர்ப்பாயாக, பக்தி, ஞானம், வைராக்கியம் முதலிய

வீடுபேற்றை அடையச் செய்யும் சாதனங்களை எங்களுக்குக் கிடைக்கும் வண்ணம் அருள்வாயாக! இராப்பகலும் தொண்டு செய்வதற்குரிய சக்தி, சாமர்த்தியங்களைக் கருணையோடு கொடுப்பாயாக. உன் பிறப்பிடமாகிய பகவானிடத்தில் சேர்ப்பாயாக. இதுவே எங்கள் வேண்டுகோள். அருள்வாயாக. உன் அருட்பார்வையை எங்கள் மேல் பொழிவாயாக, எங்களைக் காப்பாற்று. காப்பாற்று. காப்பாற்று.

## கீதையின் உயர் புகழ்

*(மகா பாரதத்திலிருந்து)*

1. **கீதா சாஸ்த்ரமிதம் புண்யம் யஹ் படேத் ப்ரயதஹ் புமான்**
   **விஷ்ணோஹ் பதமவாப்நோதி பயசோகாதி வர்ஜிதஹ**

மிகவும் தூய்மையான இந்த கீதை என்னும் சாத்திரத்தை எவன் ஒருவன் படிப்பானோ அவன் அச்சமும் துயரமும் அற்ற விஷ்ணு நிலையை அடைவான்.

2. **கீதாத்யன ஸீலஸ்ய ப்ராணாயாமபரஸ்ய ச**
   **னை வசந்திஹி பாபானி பூர்வஜன்ம க்ருதானிதச**

கீதையை நாள்தோறும் வாசிப்பவனுக்கும் ப்ராணாயாமம் செய்பவனுக்கும் முன் பிறவியில் செய்த பாவங்கள் அனைத்தும் அழிந்து விடுகின்றன.

3. **மல நிர்மோசனம் பும்சாம் ஜலஸ்நானம் தினேதினே**
   **ஸக்ருத் கீதாம்பஸி ஸ்நானம் சம்சார மல நாசனம்**

தண்ணீரில் தினமும் குளிப்பதால் மானிடர்களுக்கு உடல் அழுக்கு நீங்கிவிடுகிறது. ஆனால் கீதாஞானம் என்னும் தண்ணீரில் ஒருமுறை குளிப்பதால் மட்டும் பிறவி அழுக்கெல்லாம் அகன்று விடுகின்றது.

**4. பாரதாம்ருத ஸர்வஸ்வம் விஷ்ணோஹ் வக்த்ராத் விநிஸ்ருதம்
கீதா கங்கோதகம் பீத்வா புனர்ஜன்ம ந வித்யதே**

மகாபாரதத்தின் அமுதமும் விஷ்ணுவின் திருவாயிலிருந்து வெளிப்பட்டதுமான கீதை எனும் கங்கையின் நீரை அருந்தினால் மறுபிறவி இருக்காது.

**5. சர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தனஹ
பார்தோ வத்ஸஹ் சுதீர் போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத்**

உபநிடதங்கள் அனைத்தும் பசுக்கள். நந்தனின் மைந்தனாகிய கண்ணன் பால் கறப்பவன், அர்ஜுனன் கன்று. சிறந்த அமுதமாகிய கீதாம்ருதம் பால் போன்றது. நல்ல மனம் படைத்த ஞானவேட்கை உடையவரே அப்பாலை அருந்துவோர்.

**6. கீதா ஸுகீதா கர்தவ்யா கிமந்யைஹ் ஸாஸ்த்ர சங்ரஹைஹி
யா ஸவ்யம் பத்மநாபஸ்ய முகபத்மாத் விநிஸ்ருதா**

கீதையை நன்றாக இசைக்க வேண்டும். பிற சாத்திரங்களின் சேர்க்கையால் என்ன பயன்? ஏன் என்றால் கீதை கண்ணனின் திருமுகத் தாமரையிலிருந்து வெளிப்பட்டது.

**7. ஸர்வ ஸாஸ்த்ரமயீ கீதா சர்வதேவமயோ ஹரிஹ
ஸர்வ தீர்த்தமயீ கங்கா ஸர்வவேதமயோ மனுஹு.**

அனைத்து சாஸ்த்திரங்களின் வடிவம் கீதையாகும். அனைத்துக் கடவுளரைத் தன்னகத்தே கொண்டிருப்பவர் விஷ்ணு ஆவார். கங்கை எல்லாத் தீர்த்தங்களையும் தன்னுள் கொண்டுடிருக்கிறது. மனு அனைத்து வேதங்களின் உருவே ஆவார்.

**8. கீதா கங்கா ச காயத்ரீ கோவிந்தேதி ஹ்ருதிஸ்திதே
சதுர்ககார ஸம்யுக்தே புனர்ஜன்ம ந வித்யதே**

கீதை, கங்கை, காயத்ரி, கோவிந்தன் என்று நான்கு 'க' வுடன் தொடங்கும் இந்த கீதையை எவன் ஒருவன்

இதயத்தில் நிறுத்துகிறானோ அவனுக்கு மறு பிறவி கிடையாது.

**9. பாரதாம்ருத ஸர்வஸ்ய கீதாய மதிதஸ்யச**
**ஸாரமுத்ருத்ய கிருஷ்ணேன அர்ஜுனஸ்ய முகே ஹுதம்**

மகாபாரதம் என்னும் அமுதத்தின் மொத்த வடிவமே கீதை. பாரதத்தைக் கடைந்து சாரமாகிய கீதையைப் பிழிந்து கண்ணன் அதனை அர்ஜுனனின் முகத்தில் வேள்வியாகச் செய்தார்.

## நன்றிக் கடன்

கீதை

யைப் போதித்த கண்ணபிரானுக்கு
பிறப்பிற்குக் காரணமாக அர்ஜுனனுக்கு
யை வெளியிட்ட வேதவியாசருக்கு
யை எழுதிய விநாயகருக்கு
யை முதன் முதலாக பரப்பிய சஞ்சயனுக்கு
யைப் பரப்புவதற்குப் பிள்ளையார் சுழி போட்ட சஞ்சயனுக்கு
யின் ஓலைச்சுவடிகள் காலக்கருவில் கலந்துவிடாமல் பாதுகாத்து அருளிய புண்ணியவான்களுக்கு
யை தெளிவாக்கிக் கொண்டிருக்கும் உரையாசிரியர்களுக்கு
யை வீடுவீடாகப் பரப்பிக் கொண்டிருக்கும் தொண்டர்களுக்கும்
உலகம் கடமைப்பட்டிருக்கிறது.

கீதையை மிகுந்த ஈடுபாட்டுடன் படித்து அதனுள்ளிருக்கும் கருத்துக்களை நடைமுறையில் நன்றாகக் கடைப்பிடிப்பதன் வாயிலாக மட்டுமே இவர்களுக்கு கைம்மாறு செய்வது மேற்கூறப்பட்டோருக்கு நமது கடமை.

# கீதையின் மகிமை

*(ஸ்காந்த புராணத்திருந்து)*

**பகவானின் உரை**

**கீதாஸாரமிதம் சாஸ்த்ரம் ஸர்வசாஸ்த்ரசுநிஸ்சிதம்**
**யத்ர ஸ்திதம் ப்ரஹ்ம ஞானம் வேத சாஸ்த்ர சுநிஸ்சிதம்**

*அனைத்து சாத்திரங்களிலும் நன்றாக உருவாக்கப்பட்ட கோட்பாடுகளை கீதா சாத்திர சாரமாகிய இந்நூல் தன்னகத்தே கொண்டுள்ளது. அதில் வேத சாத்திரங்களில் முடிவு செய்து உரைக்கப்பட்ட பிரம்ம ஞானம் மிளிர்கின்றது*

2. **இதம் சாஸ்த்ரம் மயா ப்ரோக்தம்**
   **குஹ்ய வேதாந்த தர்பணம்**
   **யஹ் படேத் ப்ரயதோ பூத்வா ச**
   **கச்சேத் விஷ்ணு சாஸ்வதம்**

*என்னால் உரைக்கப்பட்ட இந்த கீதா சாத்திரம் மர்மமான மறைபொருள்களைக் கண்ணாடியைப்போல் காட்டுகின்றது, எவன் ஒருவன் முயற்சியுடன் படிப்பானோ அவன் விஷ்ணு நிலையை அடைவான்.*

3. **ஏதத் புண்யம் பாபஹரம்**
   **தன்யம் துஹ்கப்ரணாசனம்**
   **படதாம் ஸ்ருண்வதாம் வாபி**
   **விஷ்ணோஹ் மாஹாத்ம்யமுத்தமம்**

*விஷ்ணுவின் கீதை சாத்திரம் படிப்போருக்கும் கேட்போருக்கும் நன்மையைச் சேர்க்கின்றது. பாவங்களை அழிக்கிறது. பூரிப்பை அளிக்கிறது. துயரங்களைப் போக்குகின்றது.*

4. **அஷ்டாதசபுராணானி நவவ்யாகரணானி ச**
**நிர்மத்ய சதுரோ வேதான் முனினா பாரதம் க்ருதம்**

5. **பாரதோததி நிர்மத்ய கீதா நிர்மதிதஸ்ய**
**ஸார முத்த்ருத்ய க்ருஷ்ணேன அர்ஜுனஸ்ய முகே த்ருதம்**

*பதினெட்டுப் புரணங்களையும் ஒன்பது இலக்கணங்களையும் நான்கு மறைகளையும் நன்றாகக் கடைந்து வியாசர் மகாபாரதத்தைப் படைத்தார் அப்படிப்பட்ட பாரதத்தைக் கடைந்து அதன் சாரமாகிய கீதையை எடுத்து கண்ணபிரான் அர்ஜுனனின் வாயிலாக அருளினான்.*

6. **மல நிர்மோசனம் பும்சாம்**
**கங்கா ஸ்நானம் தினே தினே**
**ஸக்ருத் கீதாம்பஸி ஸ்நானம்**
**ஸம்சார மலமோசனம்**

*அன்றாடம் குளிக்கும் குளியல் மனிதனின் உடல் அழுக்கைப் போக்குகிறது. ஆனால் கீதை என்னும் நீரில் ஒருமுறை குளித்தாலே பிறவி அழுக்கு அனைத்தும் அகன்று விடுகிறது.*

7. **கீதா நாம ஸஹஸ்ரேண**
**ஸத்வ ரஜோ விநிர்மிதஹ**
**யஸ்ய குக்ஷௌ ச வர்தேத**
**ஸோபி நாராயணஹ் ஸ்ம்ருதஹ**

*கீதைக்கான ஆயிரம் பெயர்கள் கொண்ட துதியை எவனொருவன் மனதில் நினைக்கின்றானோ அவன் நாராயணனின் வடிவமாகவே கருதப்படுவான்.*

8. **பாதஸ்யாப்யர்த்த பாதம் வா**
**ஸ்லோகம் ஸ்லோகார்த்தமேவ வா**
**நித்யம் தாரயதே யஸ்து**
**ஸ மோக்ஷமதிகச்சதி**

கீதையின் ஒரு சுலோகத்தையோனும் அரை சுலோகத்தை யேனும், சுலோகத்தின் ஒரு அடியையாயிவம் ஓரடியில் பாதியை யாயினும் எவன் என்றும் நினைவில் நிறுத்துகின்றானோ அவன் வீடு பேற்றை அடைவான்.

**9. ஸர்வவேதமயீ கீதா**
**ஸர்வதர்ம மயோ மனுஹு**
**ஸர்வதீர்த்தமயீ கங்கா**
**ஸர்வதேவமயோ ஹரிஹி**

கீதை அனைத்து மறைகளின் முழுவடிவமேயாகும் மனுபகவான் அனைத்து அறங்களுக்கும் அடைக்கலமாவார் கங்கை தீர்த்தங்களனைத்தும் தன்னகத்தே கொண்டுள்ளது. எல்லா தேவர்களும் விஷ்ணுவில் இருக்கின்றார்கள்.

**10. க்ருஷ்ண வ்ருக்ஷ ஸமுத்பூதா**
**கீதாம்ருத ஹரீதகீ**
**மானுஷைஹ் கிம் ந காத்யேத**
**கலௌ மல விவேசினீ**

கிருஷ்ண மூர்த்தி என்னும் மரத்தினின்று வெளிப்பட்ட கீதா என்னும் அமிர்தமயமான கடுக்காய் என்று மக்கள் ஏன் தின்பதில்லை? அதைத் தின்றால் அது நம் கலி மலத்தை அகற்றும்.

**11. கங்கா கீதா ததா பிக்ஷுஹு**
**கபிலாஸ்வத்த ஸேவனம்**
**வாசாம் பத்மநாபஸ்ய**
**பாவனம் கிம் கலௌயுகே**

கலியுகத்தில் கங்கை, கீதை, துறவி, கரும்பசு, அரச மரம் இவற்றிற்க்குச் செய்யப்படும் தொண்டு விஷ்ணு பகவானுக்கு மிகவும் எற்ற ஏகாதசி போன்ற சிறப்பு நாட்கள்-இவற்றை விட சிறந்தவை எங்கு உள்ளன?

**12. கீதா ஸுகீதா கர்த்தவ்யா**
**கிமந்யைஹ் சாஸ்த்ர ஸங்கரைஹி**
**யா ஸ்வயம் பத்மநாபஸ்ய**
**முகபத்மாத் விநிஸ்ருதா**

*கீதையை நன்றாகப் படிக்கவேண்டும். பிற சாத்திரங்களால் பயன் என்ன? கீதை கண்ணபிரானின் திருமுகத் தாமரையிலிருந்து வெளிப்பட்டது.*

**13. ஆபதம் நரகம் கோரம்**
**கீதாத்யாயீ ந பஸ்யதி**

*கீதையை ஓதுபவனை விபத்துக்களும் கொடுமையான நரகமும் ஒரு போதும் அணுகவே அணுகாது.*

## ஒரு சுலோகத்தில் கீதை

**யத்ர யோகேஸ்வரஹ் க்ருஷ்ணஹ்**
**யத்ர பார்த்தோ தனுர்தரஹ**
**தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிஹ்**
**த்ருவா நீதிர் மதிர் மம**

*(பகவத்கீதை 18.78)*

*எங்கே யோகிகளின் இறைவனாகிய கண்ணனும் வில்லாளிகளில் ஒருவனான அர்ஜுனனும் இருக்கின்றார்களோ அங்கே செல்வம், வெற்றி, நிதி இவை கண்டிப்பாக இருக்கும் என்பது எனது கருத்து.*

*- சஞ்சயன்*

# கீதையின் பதினெட்டுப் பெயர்கள்

**கீதா கங்கா ச காயத்ரீ**

**ஸீதா ஸத்யா ஸரஸ்வதீ**

**ப்ரஹ்மவித்யா ப்ரஹ்மவல்லீ**

**த்ரிசந்த்யா முக்திகேஹிநி**

**அர்தமாத்ரா சிதாநந்தா**

**பவக்நி ப்ராந்திநாசினி**

**வேதத்ரயீ பராநந்தா**

**தத்வார்த்த ஞான மஞ்சரீ**

**இத்யேதானி ஜபேந்நித்யம்**

**நரோ நிஸ்சல மானசஹ்**

**ஞான சித்திம் லபேத் சீக்ரம்**

**ததாந்தே பரமம் பதம்**

*கீழ்க்கண்டவை கீதையின் பெயர்கள்*

*1. கீதை 2. கங்கை 3. காயத்ரி 4. சீதா 5. சத்யா 6. சரஸ்வதி 7. பிரம்மவித்யா 8. பிரம்மவல்லி 9. திரிசந்தியா 10. முக்தி கேஹினி 11. அர்த்த மாத்ரா 12. சிதானந்தா 13. பவக்நி 14. ப்ராந்தி நாசினி 15. வேதத்ரயி 16. பரா 17. ஆனந்தா 18. தத்வார்த்த ஞானமஞ்சரி.*

*இந்த பதினெட்டு கீதையின் பெயர்களை எவன் எப்போதும் மனத்தில் நினைப்பானோ அவனுக்குச் சிறந்த ஞானமும் இறுதியில் கடவுளின் சேர்க்கையும் கட்டாயம் கிட்டும்.*

# கீதையிலுள்ள சுலோகங்களின் எண்ணிக்கை

மகாபாரதத்தில் பீஷ்ம பருவத்தில் கீதை முடிந்த பிறகு கீதையிலுள்ள சுலோகங்களின் எண்ணிக்கை குறித்து வேதவியாசர் கீழ்க் கண்டவாறு கூறினார்!

**ஷட் சதானி ச விம்சானி ஸ்லோகானாம் ப்ராஹ கேசவஹ**
**அர்ஜுனஹ் பஞ்சாசத் சப்த பஞ்சாசத் ச சஞ்சயஹ**
**த்ரிதராஷ்ட்ரஹ் ஸ்லோகமேகம் கீதாய மான முச்யதே**

*பாரதம் - பீஸ்ம பருவம் 43.4*

கீதையில் கண்ணபிரான் 620 சுலோகங்களையும், அர்ஜுனன் 57 சுலோகங்களையும், சஞ்சயன் 6 சுலோகங்களையும், திருதராஷ்ட்ரன் ஒரு சுலோகத்தையும் கூறியிருக்கிறார்கள். மொத்தம் 745 சுலோகங்கள். ஆனால் அர்ஜுனன் 84 சுலோகங்களையும், சஞ்சயன் 40 சுலோகங்களையும், திருதராஷ்ட்டிரன் 1 சுலோகத்தையும் ஆக 700 கூறியுள்ளதாக இருக்கிறது. பாரதத்திலே கீதையின் சுலோகங்கள் மொத்தம் 745 கூறப்பட்டிருப்பினும் வழக்கிலுள்ள கீதையில் 700 சுலோகங்கள் மட்டுமே உள்ளது. சில பிரதிகளில் 13 ஆம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் "ப்ருக்ருதிம் புருஷம் சைவ" என்ற வினா வடிவமான அர்ஜுனனின் சுலோகம் ஒன்று காணப்படுகின்றது. அதனையும் சேர்த்து 701 சுலோகங்கள் ஆகின்றன. எஞ்சிய 44 சுலோகங்கள் என்னவாயின என்று ஆராய்ந்து அறிந்தவர் மிகச் சிலரே. இராஜஸ்தானின் கத்தியவார் பகுதியில் சில ஆய்வாளர்கள் கீதையின் பல ஓலைச் சுவடிகளை நன்றாக அலசி ஆராய்ந்து இறுதியில் 755 சுலோகங்கள் உடைய ஒரு கீதைப் பிரதியைக் கண்டனர். ஏனினும் அது பாரதத்தில் கூறப்பட்ட எண்ணிக்கைக்குப் பொருந்தவில்லை. எப்படியிருப்பினும் பாரதத்தில் கூறியுள்ளவாறு 44 அல்லது 45 கீதை சுலோகங்கள் காலவோட்டத்தில் கலந்து விட்டதாகத் தெளிவாகத் தெரிகிறது. இதைப் பற்றி ஆய்வாளர்கள் ஆராய்ச்சி செய்வது மிகவும் அவசியம்.

# கீதை உபநிடதங்களின் சாரம்

*உபநிடதங்கள் என்னும் பசுக்களின் பாலே கீதையாகும். மிகவும் சிக்கலான உபநிடதங்களின் கோட்பாடுகளை கீதை அனைவருக்கும் புரியும் வண்ணம் சொரிந்தது. ஆதலின் உபநிடதங்களுக்கும் கீதைக்கும் பற்பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. அவற்றுள் சில திட்டவட்டமாகக் கூறப்படுகின்றன.*

*1. தனது ஐயங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக சீடன் குருவை அணுகி வினவுகிறான்.*

**1 தத் விஞ்ஞானார்தம் ச குரு மேவாபிகச்சேத்**
**ஸமித்பாணிஹ ஸ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்**
**தஸ்மை ச வித்வான் உபன்னாய ஸம்யக்**
**ப்ரஸாந்தசித்தாய ஸமாந்விதாம் யேநாக்ஷரம்**
**புருஷம் வேதஸத்யம் ப்ரோவாச தாம் தத்வதஹ**
**ப்ரஹ்ம வித்யாம் (முண்ட 1,2,12,13).**

**2. சௌனகஹ ஆங்கீரஸம் விதிவத்**
**உபபன்னஹ பப்ரச்ச (மு - 1.3)**

**3. ப்ருகுஹ்வை வாருநிஹ வருணம் பிதர**
**முபசசார (தைப்ரு - 1)**

**4. அதீஹி பகவன் இதிஹோபசபாத் நாரதஹ ஸநத்குமாரம்**
**(சாந் 7 - 1)**

*2. கீதை. கார்ப்பண்யஹ, தோஷோபஹதஹ பக. 2.7 ப்ரஹ்ம வித்யா துயரையும் மோகத்தையும் அகற்றுகிறது*

*உப 1. தத்ர கோ மோஹஹ கஹ சோக ஏகத்வ மனுபஸ்தஹ்யது (இ - 7)*

*2. தரதி சோக மாத்மவித் (சா - 7.3)*

*3. அபயம் வை ஜனக ப்ராப்தோஸி (ப்ரு - 4.2.4)*

கீதை 1. மோஹோயம் விகதோ மம (ப்-கு-11.1)

2. நஷ்டோ மோஹஹ (18.73)

*3. வேள்வி, ஈகை, தவம் ஆகிய முறைகளில் செய்யப்படும் நல்வினை மனத்தைத் தூய்மையாக்கி ஞானம் தோன்ற உதவுகின்றன ஆதலின் வீடு பேற்றை விரும்புவோர் முதலில் அவற்றைப் பின்பற்ற வேண்டும்.*

**உப.ததேதம் வேதானுவசனேன ப்ராஹ்மனா விவிதிஷந்தி யக்ஞேன தானேன தபசா நாசகேன ஏதமேவ விதித்வா முனிர்பவதி (ப்ரு -4, 4-22)**

கீதை 1. ந கர்மணா மநாரம்பான் னைஷ்கர்ம்யம்

2. யக்ஞோ தானம் தபஸ்சைவ

3. ஸந்யாஸஸ்து மஹாபாஹோ துஹ்கமாப்து மமோகதஹ

4. ஸ்வகர்மணா தநுஹ் அப்யர்ச்ச

4. ஞானத்தால் அறியாமை அழிந்து வீடு பேறு கிடைக்கும்.

உப: 1. தமேவம் வித்வானம்ருத இஹ பவதி பந்தா வித்யதே (நா-2)

2. தமேவ விதித்வாதிம்ருத்யு மேதி நான்யஹ் பந்தா வித்யதே யனாய (ஸ்வேத 3-8)

3. ஸயோ ஹ வை தத்பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி (முந் - 3-2-6)

4. யதா சர்மவதாகாசம்
வேஷ்டயிஷ்யந்தி மாநவாஹா
ததா தேவ மவிஞ்ஞாய
து: கஸ்யாந்தோ பவிஷ்யதி (ஸ்வே -6-20)
ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசைஹி
(ஸகே -2.15)

ஞாத்வா சிவம் காந்தி மத்யந்த மேதி (4-14)
நிசாய்ய தம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே (கா)

கீதை 1 ஞானேந து ததஞானம்
2. யந்ஞாத்வா ந புநர்மோஹம்
3. ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி
4. ஞானம் லப்த்வா பராம் சாந்திம்

*5. மோட்சம் நிலையானது.,*

உப: 1. ந ச புனராவர்ததே

கீதை: 1 மாமுபேத்ய புனர்ஜன்ம
2. யத்த்யக்த்வா ந நிவாதந்தே

*6. விண்ணப்பங்களுடன் கூடிய வினை பழிக்கத் தக்கது*

உப: 1. ப்லவா ஹ்யேதே அத்ருடா யக்ஞருபா
2. லங்கவய மானாஹ் பரியந்தி மூடா (மு - 1,2,8)

கீதை: 3. யாமிமாம் புஷ்பிதாம் வாசம்

*7. சுவர்க்கத்திலிருந்து மீண்டும் வருதல் நிகழும்*

உப: 1. நாகஸ்ய ப்ருஷ்டே தே ஸுக்ருதே நுபூத்வா
இமம் லோகம் ஹீனதரம் வா விசந்தி (மு-1,2,10)

கீதை: 1. த்ரை வித்யா மாம் சோமபாஹா
2. தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்

*8. ஞானத்தினால் ஐயத்தெளிவும் வினையழிவும் ஏற்படும்.*

உப: பித்யதே ஹ்ருதயக் கந்திஹி (மு - 2-2-8)

கீதை: 1. யதைதா சி ஸிமிதோக்நிஹி

*9. ஞானத்தினால் அனைத்து பாவங்களின் அழிவும் ஏற்படும்*

உப: 1. ஸர்வே பாப்மா நோதோ நிவர்தந்தே

2. தம் விதித்வா ந லிப்யதே (ச - 8.4.2)
கர்மணா பாபகேன (ப்ரு - 4,41,2)

கீதை: அபி சேதஸி பாபேப்யஹ் ஸர்வேப்யஹ

*10. ப்ரணவ உபாசனை:*

முண்டகம், ப்ரஸ்ந, கட, தைத்ரீய, சாந்தோக்ய முதலிய உபநிடதங்களில் ப்ரணவ உபாசனை கூறப்பட்டிருக்கிறது. கீதையிலும் இது உள்ளது.

கீதை: ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம

*11. எல்ல நல்வினைகளின் பலனும் ஞானத்தில் அடங்கும்*

உப: ஸர்வம் தத‌பி ஸமேதி யத்கிஞ்ச ப்ராஜஹ
ஸாதுஹ் குர்வந்தி

கீதை: 1. யாவா நர்த உதபானே

2. ஸர்வம் கர்மாகிலம் பார்த்த
வேதேஷு யக்ஞேஷு தபஹ்சைவ

*12. ஞான சித்திக்கும் மோட்சம் அடைவதற்கும் விண்ணப்பங்களை விட்டு விடுதல் மிகவும் அவசியம்.*

உப: யதா ஸர்வே ப்ரமுச்யந்தே
காமா யேஸ்ய ஹ்ருதி ஸ்திதாஹா

கீதை: ப்ரஜஹாதி யதா காமான்.

# கீதையிலுள்ள உபநிடத வாக்கியங்கள்

கீதையில் உபநிடத வாக்கியங்கள் உள்ளவை உள்ளபடியே இடம் பெற்றிருக்கின்றன.

1. ந ஜாயதே ம்ரியதே வா கதாசித் (220)
2. உபௌ தௌ ருவிஜாநீதோ நாயம்
   ஹந்தி ந ஹந்யதே (2-19)
3. ஆஸ்சர்யவத் பஸ்யதி (2-29)
4. யதக்ஷரம் வேதவிதோ வதந்தி (8,11)
5. ஸர்வதஹ் பானிபாதம் தத் (13,14)
6. ஸர்வேந்த்ரிய குணா பாசம் (13,15)
7. தூரஸ்தம் சாந்திகே சதத் (13,16)
8. ஊர்த்வமூலமதஹ் சாகம் (15-1)

# கீதையின் மகிமை

(வைஷ்ணவிய தந்த்ர சாரத்திலிருந்து)

**சௌனக உவாச**

**1. கீதாயாஸ்சைவ மாஹாத்ம்யம் யதாவத் சூத மே வத**
**புரா நாராயணக்ஷேத்ரே வ்யாஸேன முனிநோதிதம்**

சௌனகர் கேட்டார் ; ஓ முனிவரே முன்பு ஒரு நாள் நாராயண திருத்தலத்தில் வியாச முனிவர் அருளிச் செய்த கீதையின் மகிமையை உள்ளது உள்ளபடியே எனக்கு கூறுங்கள்

**சூத உவாச**

**2. பத்ரம் பகவதா ப்ருஷ்டம்**
**யத்தி குப்ததமம் பரம்**
**சக்யதே கேன தத்வக்தும்**
**கீதா மாஹாத்ம் யமுத்தமம்**

சௌனகரே ! நீர் பயனுள்ள கருத்தைக் கேட்டீர். ஆனால் மிகவும் இரகசியமானதும் அனைத்திலும் சிறந்ததுமான கீதை மகிமை முழுமையாகக் கூற வல்லார் யார்?

**3. க்ருஷ்நோ ஜாநாதி வை ஸம்யக் கிஞ்சித் குந்தீ சுதஹ் பலம் வ்யாஸோவா வ்யாஸபுத்ரோ வா யாக்ஞ்வல்க்யோத மைதிலவா**

கீதையின் மகிமையை முழுமையாக அறிந்தவன் கண்ணபிரான் ஒருவன். அர்ச்சுனனுக்கு அதைப் பற்றி ஓரளவு மட்டுமே தெரியும். அவ்வாறே வியாசர், சுகமகரிஷி, யாக்ஞ வல்கியம், ஜனகர் ஆகியோர் சிறிதளவே உணர்ந்திருக்கின்றனர்

**4. அன்யே ஸ்ரவணைதஹ் ச்ருத்வா லேசம் சங்கீர்தயந்தி ச தஸ்மாத் கிஞ்சித் வதாம்யத்ர வ்யாஸ ஸ்யாந் மயா ஸ்ருதம்**

ஏனையோர் கீதையின் மகிமையைப் பாரம்பரியமாகக் கேட்டு ஓரளவுக்கு மட்டுமே சொல்கிறார்கள். இப்படி வியாசர் வாயிலாகக் கேட்டதை உமக்குக் கூறுகிறேன் கேள்.

**5. ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபாலநந்தனஹ பார்தோ வத்ஸஹ்சுதீர் போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத்**

அனைத்து உபநிடதங்களும் பசுக்கள், கண்ணன் தான் பாலைக் கறப்பவன். அர்ச்சுனன் கன்று, சிறந்த கீதை அமிர்தமே பாலாகும். நல்லெண்ணம் கொண்டவரே அப்பாலை பருகுவோராவர்.

**6. ஸாரத்யமர்ஜுனஸ்யாதௌ குர்வன் கீதாம்ருதம் ததௌ லோகத்ரயோபகாராய தஸ்மை க்ருஷ்னாத்மனே நமஹ**

முன்பு எந்த மகான் அர்ச்சுனனுக்குத் தேரோட்டிக்கொண்டு மூவுலகங்களுக்கும் உதவும் பொருட்டு கீதை அமுதத்தை அர்ச்சுனனுக்கு அளித்தாரோ அந்தக் கண்ணபிரானை நான் வணங்குகிறேன்.

**7. ஸம்சார ஸாகரம் கோரம் தர்த்துமிச்சதி யோ நரஹ கீதா நாவம் ஸமாஸாத்ய பாரம் யாதி சுகேன சஹ**

கொடிய பிறவிப் பெருங்கடலைக் கடந்து கரையேற நினைப்பவர் கீதை எனும் கப்பலை அடைந்தால் மிகவும் எளிதாக அக்கரை அடைவார்.

**8. கீதா ஞானம் ஸ்ருதம் நைவ சதைவாப்யாஸ யோகதஹ**
**மோக்ஷ மிச்சதி மூடாத்மா யாதி பாலக ஹாஸ்தாம்**

எவன் இடைவிடாது பயின்று கீதை ஞானத்தைத் தன் அனுபவத்துக்குக் கொண்டு வராமல் மோட்சத்தை விரும்புவானோ அப்படிப்பட்ட மூடன் சின்னஞ்சிறு குழந்தைகளுக்கிடையிலும் நகைப்புக்கு ஆளானவன்.

**9. யே ச்ருன்வந்தி படந்த்யேவ கீதாசாஸ்த்ரமஹர்நிசம்**
**ந தேவை மானுஷா ஞேயா தேவ ரூபா ந சம்சயஹ**

எவன் கீதா சாத்திரத்தை இரவும் பகலுமாகக் கேட்டுக் கொண்டும் படித்துக் கொண்டும் இருப்பானோ அவனை சாதாரண மனிதனாகக் கருதலாகாது. ஐயத்திற்கிடமின்றி அவன் தேவர் வடிவினனே ஆவான்.

**10. கீதா ஞானேன ஸம்போதம்**
**கிருஷ்ணஹ் ப்ராஹார்ஜுநாயவை**
**பக்தி தத்வம் பரதத்ரம்**
**ஸகுணம் சாத நிர்குணம்**

கண்ணபிரான் அர்ச்சுனனுக்குக் கீதோபதேசத்தின் வாயிலாகப் பரந்த கீதோபதேசத்தின் உயர்ந்த பக்தி தத்துவத்தையும் அதிலும் அருவ, உருவ, சொரூபங்களைப் பற்றியும் நன்றாக உபதேசித்தார்.

**11. ஸோபானஷ்டாதசை ரேவ**
**புக்தி முக்தி சமுச்ரிதைஹி**
**க்ரமஸஹ் சித்தசுத்திஹ் ஸ்யாத்**
**ப்ரேம பக்த்யாதி கர்மஸு**

உணவு, வீடுபேறு, ஆகியவற்றை அளிக்க வல்ல பதினெட்டு அத்தியாயங்கள் எனும் படிகளால் அன்பு

பக்திகளுடன் கூடிய நல்வினைகளால் உயிர்களுக்கு உள்ளத் தூய்மை கிட்டும்.

**12. ஸாது கீதாம்பஸி ஸ்நானம்**
**ஸம்சார மல நாசனம்**
**ஸ்ரத்தா ஹீனஸ்ய தத்கார்யம்**
**ஹஸ்தி ஸ்நானம் வ்ருதைவ தத்**

கீதை எனும் நீரில் குளிப்பது சாலச் சிறந்தது. ஏனெனில் அது பிறவி அழுக்கை நீக்கவல்லது. ஆயினும் சிரத்தை இல்லாதவனுக்கு அது யானைக் குளியலே ஆகும்.

**13. கீதாயாஸ்யோ ந ஜானாதி**
**படனம் நைவ பாடனம்**
**ஸ ஏவ மானுஷே லோகே**
**மோக கர்மகரோ பவேத்**

கீதையைப் படிப்பதும், பிறரைப் படிக்கச் செய்வதும் அறியாதவன் இவ்வுலகில் பயனற்ற செயல்களைச் செய்பவனே ஆவான்.

**14. யஸ்மாத் கீதாம் ந ஜானாதி**
**நாதமஸ்தத்பரோ ஜனஹ**
**திக் தஸ்ய மானுஷம் தேஹம்**
**விஞ்ஞானம் குல சீல தாம்**

கீதையை உணராதவனைக் காட்டிலும், இழிவான மனிதன் மற்றொருவன் இருக்க முடியும். அப்படிப்பட்டவனின் மனித உடலுக்கும், ஞானத்திற்கும், ஒழுக்கத்திற்கும் கேடு உண்டாகும்.

**15. கீதார்த்தம் ந விஜாநாதி**
**நாதாமஸ் தத்பரோ ஜனஹ**
**திக் சரீரம் சுபம் சீலம்**
**விபவம் தத்க்ருஹாஸ்ரமம்**

கீதைப் பொருளை உணராதவனைக் காட்டிலும் அற்பன் வேறொருவன் இருக்க முடியாது. அப்படிப்பட்டவனின் அழகிய உடலுக்கும் ஒழுக்கத்திற்கும் இல்லறத்திற்கும் கீழ்மை உண்டாகட்டும்.

**16. கீதாசாஸ்த்ரம் ந ஜானாதி**
**நாதமஸ்தத்பரோ ஜனஹ**
**திக் ப்ராரப்தம் ப்ரதிஷ்டாம் ச**
**பூஜாம் மானம் மஹத்தமம்**

கீதை எனும் சாத்திரத்தை அறியாதவனைக் காட்டிலும் நீசன் மற்றொருவன் இருக்கமாட்டான். அப்படிப்பட்டவனின் ஊழ்வினைக்கும், புகழுக்கும், பூசைக்கும், சன்மானத்திற்கும் கேவலம் உண்டாகட்டும்.

**17. கீதா சாஸ்த்ரே மதிர் நாஸ்தி**
**ஸர்வம் தன்னிஹ்ஃபலம் ஜகுஹ்**
**திக் தஸ்ய ஞான தாதாரம்**
**வ்ரதம் நிஷ்டாம் தபோ யஸஹ**

கீதை சாத்திரத்தில் மனம் பொருந்தாதவர்களுக்கு மேற்கூறிய அனைத்தும் வீணேயாகும். கீதையிலுள்ள அறத்திற்கு மாறாகப் போதிப்பவனின் விரதத்திற்கும், நிட்டைக்கும், தவத்திற்கும் புகழுக்கும் அழிவு உண்டாகட்டும்.

**18. கீதார்த்த படனம் நாஸ்தி**
**நாதமஸ்தத்பரோ ஜனஹ**
**கீதாகீதம் ந யக்ஞானம்**
**தத்வித்யாஸஃர சம்பவம்**

கீதைப் பொருளைப் பயிலாதவனைக் காட்டிலும் கீழ்த்தரமானவன் வேறொருவன் இருக்கமாட்டான் கீதைக்குப் புறம்பான ஞானம் அரக்க இயல்புடையோரின் புத்தியிலிருந்து உதித்ததேயாகும்.

**19. தந்மோஹம் தர்மரஹிதம்**
**வேத வேதாந்த கர்ஹிதம்**
**தஸ்மாத் தர்மமயீ கீதா**
**ஸர்வ ஞான ப்ரயோஜிதா**
**ஸர்வ சாஸ்த்ர ஸாரபூதா**
**விசுத்தா சா விசிஷ்யதே**

*கீதைக்கு முரண்பட்ட மோகம் வேத வேதங்களால் பழிக்கப்பட்ட தேயாகும். அது அறத்திற்கு மாறானது. பயனற்றது. அனைத்து அறங்களுக்கும் இருப்பிடம் அனைத்து ஞானத்தையும் புகட்டவல்லது. எல்லா சாத்திரங்களுடைய சாரமானது, தூய்மையானது. இந்த குணங்களினால் கீதை மிகவும் மேன்மையானதாக விளங்குகின்றது.*

**20. யோதீதே விஷ்ணுபர்வாஹே**
**கீதாம் ஸ்ரீ ஹரி வாஸரே**
**ஸபஞ்சாக்ஷ்ச்நலம் ஸ்திசடத்**
**சத்ருபிஹ் ந ச ஹீயதே**

*விஷ்ணுவை வழிபடும் நாட்களிலும் ஏகாதசி முதலிய விரதநாட்களிலும் கீதையை எவன் ஓதுவானோ அவன் உறங்கிக் கொண்டிருந்தாலும் விழித்துக் கொண்டிருந்தாலும் நடந்து கொண்டிருந்தாலும் உட்கார்ந்து கொண்டிருந்தாலும் பகைவர்களால் அவமானத்தை அடையமாட்டான்.*

**21. சாலக்ராம சிலாயாம் வா**
**தேவாகாரே சிவாலயே**
**தீர்த்தே நத்யம் படன்**
**கீதாம் ஸௌபாக்யம் லபதே த்ருவம்**

*சாலகிராம சிலையருகிலும் கோயில்களிலாயினும், தீர்த்தங்களிலாயினும் நதிக்கரைகளிலும் எவன் கீதையை ஓதுவானோ அவனுக்கு எல்லாவிதமான சௌபாக்கியங்களும் கிட்டும்.*

**22. தேவகீ நந்தனஹ் க்ருஷ்ணோ**
**கீதா பாடேன துஷ்யதி**
**யதா ந வேதைஹ் தானேன**
**யக்ஞ தீர்த்த வ்ரதாதிபிஹி**

*தேவகியின் மைந்தனான கண்ணபிரான் கீதையை ஓதுவதால் அடையும் மகிழ்ச்சி மற்றைய மறைகளாலும் வேள்வியாலும் தீர்த்தங்களாலும் பெறும் விரதங்களாலும் அடையமாட்டான்.*

**23. கீதாதீதா ச யேனாபி**
**பக்தி பாவேன ஸோத்தமா**
**வேத சாஸ்த்ர புராணானி**
**தேன அதீதானி ஸர்வைஹி**

*மிகச் சிறந்த இந்த கீதாசாத்திரத்தைப் பக்தியுடன் ஓதுபவன் அனைத்து வேதங்களையும் சாத்திரங்களையும் புராணங்களையும் கற்றவனே ஆவான்.*

**24. யோகிஸ்தானே சித்தபீடே**
**சிலாக்ரே ஸத்ஸபாஸ ச**
**யக்ஞே ச விஷ்ணு பக்தாக்ரே**
**படன் சித்திம் பராம் லபேத்**

*யோகியரின் இருப்பிடத்திலும் சித்த பீடத்திலும் சாலகிராம சிலை அருகிலும் நல்லோரிடத்திலும் விஷ்ணு பக்தர்களின் முன்னிலையிலும் கீதையைப் படிப்பவன் சிறந்த பவன்களை அடைவான்.*

**25. கீதா பாடம் ச ஸ்ரவணம்**
**யஹ் கரோதி தினேதினே**
**க்ரதவோ வாஜிமேதாத்யான்**
**க்ருதாஸ்தேன ச தக்ஷிணாஹா**

*எவன் அன்றாடம் கீதையைப் படிப்பானோ கேட்பானோ அவன் தட்சிணையுடன் அதிக எண்ணிக்கையில் அஸ்வமேத வேள்விகளை இயற்றியவனே ஆவான்.*

**26. யஹ் ஸ்ருணோதி ச கீதார்த்தம்**
**கீர்தயத்யேவ யஹ் பரம்**
**ஸ்ராவயேச்ச பரார்த்தம் வை**
**ச ப்ரயாதி பரம் பதம்**

எவன் கீதையின் பொருளைக் கேட்பானோ, அதைப்பிறருக்கு விவரித்துக் கூறுவானோ அதிலுள்ள சிறந்த கருத்துக்களை மற்றோருக்கு எடுத்துரைப்பானே அப்படிப் பட்டவன் பரம் பொருளை அடைவான்.

**27. கீதாயாஹ் புஸ்தகம் சுத்தம்**
**யோ அர்ப்யத்யேவ ஸாதராத்**
**விதினா பக்தி பாவேன தஸ்ய**
**பார்யா ப்ரியா பவேத்**
**யசஹ் ஸௌபாக்யமாரோக்யம்**
**லபதே நாத்ர ஸம்சயஹ**
**தயிதாநாம் ப்ரியோ பூத்வா**
**பரமம் சுகமஸ்னுதே**

எவன் தூய்மையான கீதை நூற் பிரதியை அன்புடன் பக்தியுடனும் முறையாகவும் பிறருக்குச் சமர்ப்பிப்பானோ அப்படிப்பட்டவனின் மனைவி அவனுக்கு மிகவும் அனுகூலமாக இருப்பாள். மற்றும் அந்த கீதா நூலை வழங்கியவன் புகழ், செல்வம், ஆரோக்கியம் அடைந்தே தீருவான். தனது அன்பு மனைவி முதலியோருடைய அன்புக்கும், ஆதரவுக்கும் உரியவனாக இருந்து உயர்ந்த சுகங்கள் அடைவான்.

**29. அபிசாரோத்பவம் துஹ்கம்**
**வர சாபாகதம் ச யத்**
**நோபசர்பந்தி தத்ரைவ**
**யத்ர கீதார்ச்சனம் க்ருஹே**

எந்த வீட்டில் கீதை நூல் பூசிக்கப்படுகிறதோ அந்த வீட்டில் அபிசாரத்தால் விளையும் துக்கங்களோ,

பெரியவர்களின் சாபங்களால் நேரும் துன்பங்களோ அணுகமாட்டா.

**30. தாபத்ரயோத்பவா பீடா**
**நைவ வ்யாதிர் பவேத் க்வசித்**
**ந சாபோ நைவ பாபம் ச**
**துர்கதிஹ் நரகம் ந ச**

*கீதையைப் பூசிக்கும் வீட்டில் தாபத்ரயங்களால் விளையும் துன்பங்களோ, ரோகங்களோ ஏற்படமாட்டா. சாபமோ, இழிநிலையோ நரகமோ அவ்வீட்டாருக்கு இருக்க மாட்டா.*

**31. விஸ்போடகாதயோ தேஹே**
**ந பாதந்தே கதாசன**
**லபேத் க்ருஷ்ண பதே தாஸ்யம்**
**பக்திம் சாவ்யபிசாரிணீம்**

*கீதையை அன்றாடம் பயில்வோனுக்கு உடலின் மேல் கொப்புளங்கல், புண்கள், எப்போதும் பாதிக்கமாட்டா. மேலும் அப்படிப்பட்டவன் கண்ணபிரானுடைய திருவடித் தொண்டையும் சலனமற்ற பக்தியையும் அடைவான்.*

**32. ஜாயதே ஸததம் ஸக்யம்**

**33. ஸர்வஜீவ கணைஹ் ஸஹ**
**ப்ராரப்தம் புஞ்சதோ வாபி**
**கீதாப்யாச ரத யஸ்ச**
**ச முக்தஹ் ச ஸுகீ லோகே**
**கர்மணா நோபலிப்யதே**
**மஹாபாபாதி பாபானி**
**கீதாத்யாயீ கரோதி சேத்**
**ந கிஞ்சித் ஸ்ப்ருஸ்யதே தஸ்ய**
**நளினீதள மம்பஸா**

*கீதையைப் பயில்பவன் ஊழ்வினையை அனுபவித்துக் கொண்டிருந்தாலும் எல்லா உயிர்களிடத்தும் நட்பு*

கொண்டிருப்பான். மேலும் அவன் எல்லாவற்றிலிருந்து விடுபட்டவனும் சுகமுடையவனும் ஆவான். வினைகளால் தீண்டப்படாமல் இருப்பான். தாமரை இலை தண்ணீர் போல் பாவங்கள் அவனைப் பற்றிக் கொள்ள மாட்டா.

**34. அநாசாரோத்பவம் பாப**

**33. மவாச்யாதிக்ருதம் ச யத்**
**அபக்ஷ்ய பக்ஷ்யஜம் தோஷம்**
**அஸ்ப்ருஸ்ய ஸ்பர்சஜம் ததா**
**ஞானாஞான க்ருதம் நித்யம்**
**இந்திரியைஹ் ஜனிதம் ச யத்**
**தத் ஸர்வம் நாசமாயாதி**
**கீதா பாடேன தத்க்ஷணாத்**

அநாசாரங்களும் கடுஞ் சொற்களைப் பேசுவதும் உண்ணக் கூடாதனவற்றை உண்ணுவதும் தீண்டக் கூடாதவற்றைத் தீண்டுதலும் அறிந்தும் அறியாமலும் செய்பவைகளும் புலன்களால் நாள்தோறும் ஏற்படும் துன்பங்களும் இப்படிப் பட்ட அனைத்தும் கீதையைப் படிப்பதால் நொடிப் பொழுதில் தீர்ந்து விடுகின்றன.

**36. ஸர்வத்ர ப்ரதிபோக்தா ச**
**ப்ரதிக்ருஹ்ய ச ஸர்வஸஹ**
**கீதா பாடம் ப்ரகர்வாணோ**
**ந லிப்யேத கதாசன**

எல்லா இடங்களிலும் உண்ணுபவன் எல்லாரிடத்தும் இரந்து பொருளைப் பெறுபவன் கீதையைப் படிப்பானே யாயின் மேற் கூறியவற்றால் விளையும் பாவங்களால் எப்போதும் தீண்டப்படாமலே இருப்பான்.

**37. ரத்ன பூர்ணாம் மஹீம் சர்வாம்**
**ப்ரதி கிருஹ்யா விதானதைஹி**
**கீதா பாடேன சைகேன**
**சுத்த ஸ்படிகவத் ஸதா**

*இரத்தினங்கள் நிறைந்த பார் முழுவதையும் முறையற்ற வகையில் ஈகையாகப் பெற்றாலும் கீதையை ஒரு முறை படித்த போதுதான் தூய படிகத்தைப் போல அப்பழுக்கற்றவனாக என்றும் நன்றாக விளங்குவான்.*

**38. யஸ்யாந்தஹ்கரணம் நித்யம்**

**39. கீதாயாம் நமதே ஸதா**
**ச சாக்நிகஹ் ஸதா ஜாபீ**
**க்ரியாவான் ச ச பண்டிதஹ்**
**தர்சநீயான் ச தனவான் ச**
**யோகீ ஞானவானபி**
**ச ஏவ யாக்ஞிகோ யாஜி**
**ஸர்வ வேதார்த்த தர்சகஹ**

*எவனுடைய உள்ளம் கீதையில் இலயித்து இருக்குமோ அவனே அக்கினியைத் தொழுபவன், அவனே இடைவிடாமல் ஜெபிப்பவன். அவனே நல்வினையில் நாட்டம் கொள்பவன். அவனே புலவன். மேலும் அப்படிப்பட்டவனே தரிசிக்கத் தக்கவன். தனவான். யோகி. ஞானவான். வேள்வி செய்பவன். முதலாளி. எஜமானனின் மறைபொருள் அனைத்தும் உணர்ந்தவன் ஆவான்.*

**40. கீதாயாஹ் புஸ்தகம் யத்ர**
**நித்ய பாடஸ்ச வர்ததே**
**தத்ர ஸர்வாணி தீர்த்தானி**
**ப்ரயாகாதீனி பூதலே**

*கீதை நூல் நாள் தோறும் எங்கு ஓதப்படுகின்றதோ அங்கு பிரயாகை முதலிய எல்லா தீர்த்தங்களும் வந்து சேருகின்றன.*

**41. நிவஸந்தி ஸதா தேஹே**
**தேஹ சேஷே பி ஸர்வதா**
**ஸர்வே தேவாஸ்ச ருஷயோ**
**யோகினோ தேஹ ரக்ஷகாஹா**

கீதையை ஓதுபவனின் உடலில் எல்லா தீர்த்தங்களு என்றும் நிலை பெற்று இருக்கும். எல்லா தேவர்களு யோகியரும் இருடிகளும் கீதையை ஓதுபவனின் உடலை பாதுகாத்துக் கொண்டிருப்பர்.

**42. கோபாலோ பாலக்ருஷ்ணோபி**
**நாரத த்ருவ பார்ஷணதஹா**
**மோததே தத்ர பகவான்**
**க்ருஷ்ணோ ராதிகயா ஸஹ**

எவ்விடத்தில் கீதையை ஓதுவதும் போதிப்பது சிந்திப்பதும் நிகழ்கின்றனவோ அவ்விடத்திற்குக் கடவுளாகி கண்ணபிரான் ராதையுடன் வருகை தந்து மகிழ்ந்திருப்பா

**44. கீதா மே ஹ்ருதயம்**
**பார் த கீதா மே ஸாரமுத்தமம்**
**கீதா மே ஞானமத்யுக்ரம்**
**கீதா மே ஞானமவ்யயம்**

கடவுள் கூறினார்: அர்ஜுனனே கீதையே என் இதயம் கீதையே எனது உன்னத தத்துவம். கீதையே என்னுடை ஒளி பொருந்திய அழிவற்ற ஞானமாகும்.

**45. கீதா மே சோத்தமம் ஸ்தானம்**
**கீதா மே பரமம் பதம்**
**கீதா மே பரமம் குஹ்யம்**
**கீதா மே பரமோ குருஹ்**

கீதையே எனது மேன்மையான இடம். கீதையே எனக்குரிய சிறந்த நிலை. கீதையே என்னுடைய பரம ரகசியம் கீதையே எனது பரம குருவாகும்.

**46. கீதாஸ்ரயோஹம் திஷ்டாமி**
**கீதா மே பரமம் க்ருஹம்**
**கீதா ஞானம் ஸமாஸ்ரித்ய**
**த்ரிலோகீம் பாலயாம்யஹம்**

நான் கீதையை ஆதாராமாகக் கொண்டுள்ளேன். கீதை என்னுடைய மேன்மை பொருந்திய இல்லம். கீதை ஞானத்தின் அடிப்படையில் மூவுலகங்களையும் நான் ஆட்சி செய்கிறேன்.

**47. கீதா மே பரமா வித்யா**
**ப்ரஹ்ம ரூபா ந ஸம்சயஹ**
**அர்த மாத்ரா பரா**
**நித்யாஸ்ச நிர்வாச்ய பதாத்மிகா**

கீதையே எனது சிறந்த கல்வி. அதுவே ப்ரம்மத்தின் வடிவமாகும். பிரணவத்தின் நான்காம் அடியாகும். நிலையான தன்மை உடையது. இயம்புதற்கரிய உருவம் கொண்டது. இதில் எவ்விதமான ஐயமும் இருக்க முடியாது.

**48. கீதா நாமானி வக்ஷ்யாமி**
**குஹ்யானி ஸ்ருணு பாண்டவ**
**கீர்த்தனாத் ஸர்வ பாபாநி**
**விலயம் யாந்தி தத் க்ஷணாத்**

பாண்டுவின் புதல்வனான அர்ஜுனனே! இரகசியமாக வைக்கத் தக்க கீதையின் பெயர்களை உனக்கு இப்போது கூறுகிறேன். அவற்றை உச்சரிப்பதால் அனைத்துப் பாவங்களும் அழிந்து விடுகின்றன.

**49.50, 51**

**கங்கா கீதா ச காயத்ரீ**
**ஸீதா ஸத்யா ஸரஸ்வதீ**
**ப்ரஹ்மவல்லீ ப்ரஹ்மவித்யா**
**த்ரிசந்த்யா முக்திகேஹினீ**

**அர்தமாத்ரா சிதானந்தா**
**பவக்நீ ப்ராந்திநாசினீ**
**வேதத்ரயீ பரா நந்தா**
**தத்வார்த்த ஞான மஞ்சரீ**

**இத்யேதானி ஜபேந்நித்யம்**
**நரோ நிஸ்சலமானஸஹ**
**ஞான சித்திம் லபேத் நித்யம்**
**ததாந்தே பரமம் பதம்**

*மேற்கூறிய கீதையின் நாமங்களை மனிதன் நாள்தோறும் சலனமற்ற மனத்துடன் ஜபிக்க வேண்டும். அந்த ஜெபத்தால் அசைக்க முடியாத ஞானத்தைப் பெற்று இறுதியில் பரம பதத்தை அடைவான்.*

**52. பாடே சமர்த்தஹ் ஸம்பூர்ணே**
**ததர்த்தம் பாட மாசரேத்**
**ததா கோதானஜம் புண்யம்**
**லபதே நாத்ர ஸம்சயஹ**

*கீதையை முழுமையாகப் படிக்க முடியாதவன் பாதியையாவது படிக்க வேண்டும். அதனால் பசு தானம் செய்த பலன் அவனுக்குக் கிடைத்து விடும்.*

**53. த்ரிபாகம் படமானஸ்து**
**ஸோமயாக பலம் லபேத்**
**ஷடம்சம் ஜபமானஸ்து**
**கங்காஸ்நான பலம் லபேத்**

*கீதையை நான்கில் மூன்று பங்கு படிப்பவனுக்கு சோம வேள்வியின் பயன் கிட்டும். கீதையின் ஆறாம் பாகத்தைச் ஜெபிப்பவனுதக்குக் கங்கையில் நீராடிய பலன் கிடைக்கும்.*

**54. ததாத்யாய த்வயம் நித்யம்**
**படமானோ நிரந்தரம்**
**இந்த்ரலோகமவாப்நோதி**
**கல்பமேகம் வசேத் த்ருவம்**

*கீதையின் இரண்டு அத்தியாயங்களை நாள்தோறும் படிப்பவன் இந்திரலோகத்திற்குச் சென்று ஒரு கற்பகாலம் வரை அங்கேயே இருப்பான்.*

**55. ஏக மத்யாயகம் நித்யம்**
**படதே பக்தி ஸம்யுதஹ**
**ருத்ரலோகமவாப்நோதி**
**கணோபூத்வா வஸேச் சிரம்**

*நாள்தோறும் ஒரு அத்தியாயம் படிப்பவன் உருத்திர லோகத்திற்குச் சென்று அங்கு உருத்திர கணங்களில் ஒருவனாக நீண்ட நாட்கள் நீடித்து இருப்பான்.*

**56. அத்யாயார்தம் ச பாதம் வா**
**நித்யம் யஹ் படதே ஜனஹ**
**ப்ராப்னோதி ரவிலோகம் ச**
**மன்வன்தரசமாஹ் சதம்**

*கீதையின் பாதி அத்தியாயத்தையாவது, கால் பகுதி அத்தியாயத்தையாவது ஒவ்வொரு நாளும் படிப்பவன் பகலவன் உலகில் 100 மன்வந்தரங்கள் வசிப்பான்.*

**57. கீதாயாஹ் ஸ்லோக தசகம்**
**ஸப்த பஞ்ச சதுஷ்டயம்**
**த்ரித்வேகமேகமர்தம் வா**
**ஸ்லோகானாம் யஹ் படேத் நரஹ**
**சந்த்ரலோகமவாப்னோதி**
**வர்ஷாணாமயுதம் ததா**

*கீதையில் உள்ள 10,7,5,4,3 இல்லை அல்லது பாதி சுலோகத்தையாயினும் நாள்தோறும் படிப்பவன் 10 ஆயிரம் ஆண்டுகள் சந்திரன் உலகில் நிலைத்து இருப்பான்.*

**58. கீதார்தமேகபாதம் ச**
**ஸ்லோக மத்யாயமேவ ச**
**ஸ்மரம் ஸ்த்யக்த்வா ஜனோ தேஹம்**
**ப்ரயாதி பரமம் பதம்**

*கீதையில் உள்ள ஒரு அத்தியாயத்தின் அல்லது ஒரு சுலோகத்தின் அல்லது அதில் உள்ள ஓர் அடியின் பொருளை நினைத்தபடி உடலைத் துறப்பவன் பரம்பொருளை அடைவான்.*

**59. கீதார்தமபி பாடம் வா**
**ஸ்ருணுயாதந்தகாலதஹ**
**மஹாபாதகயுக்தோபி**
**முக்திபாக் பவேத் ஜனஹ**

*எவன் தனது இறுதிக் காலத்தில் கீதையினுடைய மூல சுலோகங்களையாயினும் அவற்றின் பொருளையாயினும் கேள்வியுறுவானோ அவன் கொடுமையான பாவங்களைக் கொண்டவனேயாயினும் மோட்சம் அடைவான்.*

**60. கீதா புஸ்தக ஸம்யுக்தஹ**
**ப்ராணாம் ஸ்த்யக்த்வா ப்ரயாதி யஹ**
**ஸ வைகுண்ட மவாப்னோதி**
**விஷ்ணுநா ஸஹ மோததே**

*கீதையை நூலுடன் எவன் பிராணனை விடுகிறானோ, அவன் வைகுந்தம் சென்று விஷ்ணுவோடு இருந்து மகிழ்கின்றான்.*

**61. கீதாத்யாய ஸமாயுக்தோ**
**ம்ருதோ மானுஷதாம் வ்ரஜேத்**
**கீதாப்யாஸம் புநஹ க்ருத்வா**
**லபதே முக்திமுத்தமாம்**

*கீதையை ஓதியவாறு உயிர் துறப்பவன் மீண்டும் தூயமனித ஜென்மத்தை அடைவான். கீதையை மீண்டும் பயில்வான். மிகச் சிறந்த மோட்சத்தை அடைவான்.*

**62. கீதேத்யுச்சார ஸம்யுக்தோ**
**ம்ரியமாநோ கதிம் லபேத்**
**யத்யத்கர்ம ச ஸர்வத்ர**
**கீதா பாட ப்ரகீர்திதம்**
**தத்தத் கர்ம ச நிர்தோஷம்**
**பூத்வா பூர்ணத்வமாப்நுயாத்**

கீதை என்ற சொல்லை உச்சரித்தவாறு இறப்பவன் 'சத்கதி' அடைவான் கீதையின் படனம், சங்கீர்த்தனம் செய்தபடி எந்த 'கர்மா' செய்யப்படுகிறதோ அவை எல்லாம் குற்றம் இல்லாமல் முழுமை அடையும்.

**63. பித்ரூ நுத்திஸ்ய யஹ்**
**ஸ்ராத்தே கீதா பாடம் சுரோதி ஹி**
**சந்துஷ்டாஹ் பிதரஸ்தஸ்ய**
**நிரயாத்யாந்தி ஸ்வர்சுதிம்**

ஸ்ராத்த காலத்தில் 'பித்ரு' தேவதைகளை உத்தேசித்து எவன் கீதையைப் படிப்பானோ அவருடைய 'பித்ருக்கள்' மனம் நிறைந்து நரகத்தில் இருந்து ஸ்வர்கம் செல்வர்.

**64. கீதா பாடேன சந்துஷ்டாஹ்**
**பிதரஹ் ஸ்ராத்த தர்பிதாஹா**
**பித்ருலோகம் ப்ரயான்த்யேவ**
**புத்ராசீர்வாத தத்பராஹா**

ஸ்ராத்தம் செய்வதால் திருப்தி அடைந்த "பித்ரு தேவதைகள்" கீதா படனத்தினால் மனம் நிறைந்து நமது பிள்ளைகளை ஆசீர்வதித்து பித்ரு லோகம் செல்வார்கள்.

**65. கீதா புஸ்தக தானம் ச**
**தேனு புச்ச ஸமன்விதம்**
**க்ருத்வா ச தத்தினே ஸம்யக்**
**க்ருதார்த்தோ ஜாயதே ஜனஹ**

பசுவின் வாலைப் பிடித்து கீதையை கையில் எடுத்துக் கொண்டு பசுவை தானம் செய்பவன் அந்நாளே தன் கோரிக்கைகளை அடைவான். கீதை நூலைக் கையில் ஏந்தியவாறு உயிர் துறப்பவன் வைகுண்டத்தை அடைந்து விஷ்ணுவுடன் சேர்ந்து பேரின்பத்தை அனுபவிப்பான்.

**66. புஸ்தகம் ஹேம ஸம்யுக்தம்**
**கீதாயாஹ் ப்ரகரோதி யஹ**
**தத்வா விப்ராய விதுஷே**
**ஜாயதே ந புனர்பவம்**

பொன்னோடு கீதையைப் பிரம்ம நிஷ்டனாகிய ஓர் அந்தணனுக்குத் தானம் செய்பவன் மீண்டும் இவ்வுலகில் மறுபிறவி எடுக்க மாட்டான்.

**67. சத புஸ்தக தானம் ச**
**கீதாயாஹ் ப்ரகரோதி யஹ**
**ஸ யாதி ப்ரஹ்ம ஸதனம்**
**புனராவ்ருத்தி துர்லபம்**

நூறு கீதை பிரதிகளை முறைப்படி தானம் செய்பவன் மீளாத பிரம்ம நிலையை அடைவான்.

**68. கீதா தான ப்ரபாவேந**
**ஸப்த கல்ப மிதாஹ் சமாஹா**
**விஷ்ணு லோக மவாப்யாந்தே**
**விஷ்ணுநா சஹ மோததே**

கீதையைத் தானம் செய்ததின் விளைவாக மனிதன் வாழ்க்கையின் இறுதியில் விஷ்ணு லோகத்தை (வைகுந்தத்தை) அடைந்து அங்கே ஒரு கல்பம் வரையில் விஷ்ணுவோடு ஆனந்தமாக இருப்பான்.

**69. ஸம்யக் ஸ்ருத்வா ச கீதார்த்தம்**
**புஸ்தகம் யஹ் ப்ரதாபயேத்**
**தஸ்மை ப்ரீதஹ் ஸ்ரீ பகவான்**
**ததாதி மனஸேப்ஸிதம்**

கீதையின் பொருளை நன்றாக அறிந்து எவன் ஒருவன் கீதையைத் தானம் செய்வானோ அவனுக்குப் பகவான் மிக்க ப்ரீதியுடன் அவனுடைய கோரிக்கைகளை நிறைவேற்றுவார்.

**70. தேஹம் மானுஷ மாஸ்ரித்ய**
**சாதுர்வர்ணேஷு பாரத**
**ந ஸ்ருணோதி ந படதி**
**கீதாமம்ருதரூபிணீம்**
**ஹஸ்தாத் த்யக்த்வாம்ருதம்**
**ப்ராப்தம் ச நரோ விஷ மஸ்நுதே**

*மனிதனாகப் பிறந்தும், நான்கு வருணங்களுக்கும் அமுத வடிவமான கீதையை எவனொருவன் கேட்க மாட்டானோ படிக்க மாட்டானோ அப்படிப்பட்டவன் கையிலிருந்த பாயசத்தை நழுவ விட்டு விட்டு விஷத்தைக் குடிப்பவன் ஆவான்.*

**71. ஜனஹ் ஸம்சார துஹ்கார்த்தோ**
**கீதா ஞானம் சமா லபேத்**
**பீத்வா கீதாம்ருதம் லோகே**
**லப்த்வா பக்திம் சுகீ பவேத்**

*பிறவி துன்பங்களினால் அவதியுறும் மனிதன் கீதா ஞானத்தை அடையவேண்டும். இவ்வாறே கீதை அமிழ்தத்தைப் பருகி பகவானிடத்தில் பக்தியை மேற்கொண்டு இவ்வுலகில் சுகமாக (நலமாக) வாழ வேண்டும்.*

**72. கீதா மாஸ்ரித்ய பஹவோ**
**பூபுஜோ ஜனகாதயஹ**
**நிர்தூத கல்மஷா லோகே**
**கதாஸ்தே பரமம் பதம்**

*இவ்வுலகில் கீதையை அடைந்து ஜனகர் முதலிய அரசர்கள் எத்தனையோ பேர் தங்களது பாவத்தைப் போக்கி உயர்தரமான கைவல்யத்தை அடைந்தனர்.*

| எண் | பலன் | மந்திரம் | அத்தியாயம் சலோகம் | காலம் | எண்ணிக்கை | தியானமூர்த்தி | சம்புடமுறை |
|---|---|---|---|---|---|---|---|
| 16. | இறையருள் | யத்கரோஷி | 9-27 | 1½ இல. | 50 நாட்கள் | பார்த்தசாரதி | |
| | | வக்துமர்ஹஸ்ய | 10-16 | 36 ஆயிரம் | 37 நாட்கள் | " | |
| 17. | கடவுளின் கனிந்த பார்வை | பிதாஸிலோகஸ்ய | 11-43 | 15 ஆயிரம் | 15 நாட்கள் | " | |
| 18. | தவறுகளை பகவான் மன்னித்தல் | தஸ்மாத் | 11-44 | 1½ இலட்சம் | 50 ஆயிரம் | " | |
| 19. | கடவுளைக் காண்பது | அத்ருஷ்ட | 11-45 | 1½ இல. | 50 நாட்கள் | " | |
| | | மாதே | 11-49 | 1½ இல. | 50 நாட்கள் | " | |
| | | இத்யாஜுன | 11-50 | 1 இல. | 50 நாட்கள் | " | |
| | | த்ருஷ்ட்வேதம் | 11-51 | 1½ இல. | 50 நாட்கள் | " | |
| | | சதுர்தர்ச | 11-52 | 1½ இல.. | 50 நாட்கள் | " | |
| | | நாஹம்வேதை | 11-53 | 1½ இல. | 50 நாட்கள் | " | |
| 20. | பாவங்கள் அழிதல் | யோமாமஜ | 10-3 | 1½ இலட்சம் | 50 நாட்கள் | " | |
| | | ஸ்ரேயோஹ | 12-12 | 15 ஆயிரம் | 21 நாட்கள் | " | |
| 21. | தவறுகள் இல்லாமை | அனேகசித்த | 16-16 | 10 ஆயிரம் | 11 நாட்கள் | " | |
| 22. | பகுத்தறிவு ஏற்படும் | அனேகபாஹுத்ர | 11-16 | 13 ஆயிரம் | 15 நாட்கள் | " | |
| | | யச்சாபஹாகஸ்த்த | 11-42 | 1½ இலட்சம் | 50 நாட்கள் | " | |
| | | அஹம்வைஸ்வானரோ | 15-14 | 1½ இலட்சம் | 15 நாட்கள் | " | |

| எண் | பலன் | மந்திரம் | அத்தியாயம் சலோகம் | காலம் | எண்ணிக்கை | தியானமூர்த்தி | சம்புடமுறை |
|---|---|---|---|---|---|---|---|
| 23. | அன்பு பெருக | த்வமாதி தேவஹ் | 11-38 | 15 ஆயிரம் | 15 நாட்கள் | பார்த்தசாரதி | |
| | | ஞானம் | 18-78 | 15 ஆயிரம் | 21 நாட்கள் | 〃 | |
| 24. | யோகத்துடன் இருத்தல் | தேஷாம்பூத | 10-70 | 36 ஆயிரம் | 31 நாட்கள் | 〃 | |
| 25. | போகத்தின் அழிவு | நமஹ்புரஸ்தாதத | 11-40 | 1½ இலட்சம் | 50 நாட்கள் | 〃 | |
| 26. | இறைவனை அடையும் தகுதி | தேஷாமஹம் | 12-7 | 1½ இலட்சம் | 50 நாட்கள் | 〃 | 100 |
| 27. | மரணத்தின் வாயிலில் | ஸர்வதர்மான் | 18-66 | 〃 | 〃 | 〃 | 100 |
| | கடவுளை நினைத்தல் | யதாஸத்வே | 14-14 | 1 இலட்சம் | 51 நாட்கள் | 〃 | 157 |
| 28. | சினம் தனிதல் | ஸர்வஸ்யகாஹம் | 15-15 | 1 இல. 10 ஆ. | 110 நாட்கள் | 〃 | |
| 29. | இடர்பாடுகள் நசிந்துப்போகும் | திவ்யமால்யாம் | 11-22 | 〃 | 〃 | 〃 | 51 |

**கீதையின் அமோக சக்திக்குக் காரணம்**




எவ்வாறெனின், கீதையைச் சொன்னவன் கண்ணன் என்பது அனைவருக்கும் தெரியும். கேட்டவன் அர்ச்சுனன். அர்ச்சுனனை கண்ணன் என்பது எப்படி பொருந்தும்? இச் சந்தேகத்தைப் பகவானே கீதையின் 10 ஆம் அத்தியாயத்தில் (விபூதி யோகத்தில்) தீர்த்துவைத்து விட்டார். 'பாண்டவர் ஐவரில் அர்ச்சுனனே நான்' என்று கூறியிருக்கிறார். எனவே அர்ச்சுனன் கண்ணனே யாவான். இனி எழுதியவரோ வியாசர். இந்த ஐயப்பாட்டையும் அந்த அத்தியாயத்திலேயே தீர்க்கப்பட்டுள்ளது. "முனீநாமப்யஹம் வியாஹ" முனிந்தீரர்க்ளில் ஸ்ரீ வேதவியாசன் நானே' என்று பகவான் வாக்களித்துள்ளார். எனவே வியாசர் சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணரின் ரூபமேயென்று தெரிகின்றது. இவ்வாறாக மூன்று கிருஷ்ணர்களின் திவ்ய தவ சக்தி ஒன்று கலந்து மகோன்னதமான நூலானதால் அதற்கு இத்துனை அமோக சக்தி ஏற்பட்டது எனலாம்.

**அதிருஷ்ட எண் 18**

*கீதையில் அத்தியாயங்கள் - 18*

*மகாபாரதப்போர் நிகழ்ந்த நாட்கள் - 18*

*போரில் ஈடுபட்ட படைகளின் எண்ணிக்கை - 18 (அக்குரோணி)*

*மகாபாரதத்தில் உள்ள பர்வங்களின் எண்ணிக்கை - 18*

அக்குரோணி

*21870 யானைகள்* - 2+1+8+7+0 - 18

*21870 தேர்கள்* - 2+1+8+7+0 - 18

*65610 குதிரைகள்* - 6+5+6+1+0 - 18

*109350 காலாட்கள்* - 1+0+9+3+5+0 - 18

உயிர்கள் - 5

மோக்ஷம் எனும் மாளிகையின் படிக்கட்டுகள்

அறிவுப்புலன்கள் - 5

வினைப்புலன்கள் - 5

அந்தக்கரணம் -1

தேகம் - 1

காட்சி - 1

1+5+5+5+1+1 - 18

**"த்ருஸ்யம் தேஹாம்ச வாகாதி ச்ரோத்தாதீந்த்ரிய பஞ்சகம் ப்ராணாதி பஞ்சகம் சைவ ததாபயன்தஹ் கரண மேவச முக்தி ஸௌதஸ்ய ஸோபானா அஷ்டாதச இதீரிதாஹ் ஏதான்க்ர மேண சாருஹ்ய ப்ரம்மாபூயாய கல்பதோ"ஞ**

**இதன் பொருள்:**

காட்சி, தேகம், ஐந்துகர்மேந்திரியங்கள், 5 ஞானேந்திரியங்கள் , ஐந்து பிராணன்கள் அந்தக்கரணம் - இவை 18ம் மோக்ஷ சாதனைக்கு உதவும் 18 படிகள், இவற்றை முறையாக ஒவ்வொன்றகத் தாண்டி முமுக்ஷு பரபிரம்ம ஸ்வரூபமாகவே ஆகிவிடுவான்.

மனிதன் 'மைனர்' (Minor) தீரும் வயது -18

திருக்கோயில் படிகள் - 18

வேள்வியில் ரித்விக்குகள் - 18

முதல் உபநிஷத்தான 'ஈசாவாஸ்யத்'தில் உள்ள சுலோகங்கள் - 18

'கீதையின் 2 ஆவது அத்தியாயத்தின் ஆத்மவர்ணனை சுலோகங்கள் - 18

கீதையின் 2ஆவது அத்தியாயத்தில் 'ஸ்திதப் ப்ரக்ஞன்' இலட்சண சுலோகங்கள் -18

துர்க்கா தேவியின் தோள்கள் -18

சாங்கிய மதத்தின்படி 18 எனும் எண் 'ஸோஹம்' என்ற பொருளைக் காட்டுகிறது என்றும், 'அஹம் ப்ரம்மாஸ்மி' (நானே பிரம்மன்) என்ற மஹா வாக்கியத்தின் பொருளையுணர்த்துகிறது என்றும் சான்றோர் கூறுவர்.

**அத்தியாய வரிசைப்படி கீதையில் தனிநபர்கள் கூற்றாக வரும் சுலோகங்களின் எண்ணிக்கை**

| அத்தியாயம் | திரிதராஷ்டிரன் | சஞ்சயன் | அர்ஜுனன் | ஸ்ரீகிருஷ்ணர் | அத்தியாயம் மொத்த | தனிநபர்களின் கூற்றின் மொத்த சுலோகங்கள் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1 | 25 | 21 | | 47 | |
| 2. | - | 3 | 6 | 63 | 72 | |
| 3. | - | - | 3 | 40 | 43 | |
| 4. | - | - | 1 | 41 | 42 | ஸ்ரீ கிருஷ்ணர் 574 |
| 5. | - | - | 1 | 28 | 29 | அர்ஜுனன் 85 |
| 6. | - | - | 5 | 42 | 47 | சஞ்சயன் 41 |
| 7. | - | - | - | 30 | 30 | திருதராஷ்ட்ரன் 1 |
| 8. | - | - | 2 | 26 | 28 | மொத்தம் 701 |
| 9. | - | - | - | 34 | 34 | |
| 10. | - | - | 7 | 35 | 42 | |
| 11. | - | 8 | 33 | 14 | 55 | |
| 12. | - | - | 1 | 19 | 20 | |
| 13. | - | - | 1 | 34 | 35 | |
| 14. | - | - | 1 | 26 | 27 | |
| 15. | - | - | - | 20 | 20 | |
| 16. | - | - | - | 24 | 24 | |
| 17. | - | - | 1 | 27 | 28 | |
| 18. | - | 5 | 2 | 71 | 78 | |
| | 1 | 41 | 85 | 574 | 701 | |

# கீதை சுலோகங்களின் யாப்பு விளக்கம்

கீதையில் ஐந்துவிதமான யாப்புகள் பயன் படுத்தப்பட்டுள்ளன. அவையாவன: அனுஷ்டுப், இந்திரவ்ரஜ, உபேந்திர ப்ரஜ, உபஜாதி, விபரீதபூர்வ' என்ற பெயர்கள் உடையவை அவை. எந்த அத்தியாயத்தில் எந்த சுலோகங்கள், எந்த யாப்பில் அமைக்கப் பட்டுள்ளன என்ற விவரங்கள் அனைத்தும் இங்கு கீழுள்ள அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன. இவையன்றி மற்றைய மிகுந்த சுலோகங்களனைத்தும் அனுஷ்டுப் யாப்பிலேயே அமைக்கப் பட்டுள்ளன. அவற்றின் மொத்த எண்ணிக்கை 646.

| (யாப்பு) சந்தஸ் | அத்தியாயம் | சுலோகங்களின் எண்ணிக்கை | மொத்தம் | | |
|---|---|---|---|---|---|
| இந்த்ரவ்ரஜ | 2 | 7,29 | 2 | | |
| " | 8 | 28 | 1 | | |
| " | 9 | 20 | 1 | | |
| " | 11 | 20,22,27,30 | 4 | | |
| " | 15 | 5,15 | 2 | | |
| உபேந்திரவ்ரஜ | 11 | 18,28,29,45 | 4 | அனுஷ்டுப் | 646 |
| உபஜாதி | 2 | 5,6,8,29,22,70 | 6 | இந்தரவ்ரஜ | 10 |
| " | 8 | 9,10,11 | 3 | உபேந்த்ரவ்ரஜ | 4 |
| " | 9 | 21 | 1 | உபஜாதி | 37 |
| " | 11 | 15,16,17,19,21,23, 24,25,26,31,32,33, 34,36,38,40,41,42, 43,46,47,48,49,50 | 24 | விபரீதபூர்வ | 4 |
| " | 15 | 2,3,4 | 3 | | |
| விபரீதபூர்வ | 11 | 35,37,39,44 | 4 | | |

# கீதா ஸ்தோத்ர கதம்பம்

1. **"இதம் கீதா சாஸ்த்ரம் பரம புருஷார்த்தைக நிலயம்
த்ரிகாண்டம் வேதார்த்தம் ஸகல மிஹ ஸங்க்ருஹ்ய கதிதம்
ஸ்வயம் ஸ்ரீ கிருஷ்ணேன ஸ்ருதி விசதத்வேன விபுனா
ஜபத்யான ஞான ச்ருதமபி பலத்யேவ சுதியாம்"**

**பொருள்:**

*கீதா சாத்திரம் மேன்மையான புருஷார்த்தமாகிய மோட்சத்திற்கு இருப்பிடம். மூன்று காண்டங்களையுடைய வேதங்களின் பொருள் முழுவதையும் திரட்டி, நீக்கமற நிறைந்திருக்கும் கண்ணபிரானால் விரிவாக எடுத்துரைக்கப் பட்டிருக்கிறது. எனவே இதனை ஜெபித்தாலும், தியானித்தாலும், கேட்டாலும், அதன் பொருளை அறிந்தாலும் அறிவாளிகள் நல்லபலனை அடைவர்.*

2. **"ரதாஹ் கேசித்யோகே விஜிதகரணாஹ் ஸம்யததியஹ்
க்ரியா ஜாலே கேசித் பெகல வாசாஸ்வாதன பராஹா
ரதாஹ் ஸாஸ்த்ராப்யாஸே விசிதமதயஸ் கேசிதஜடா
வயந்து ஸ்ரீ காந்தானனவசன மாஸ்வாத்ய க்ருதினஹ"**

**பொருள்:**

*சிலர் தம் புத்தியை ஒருநிலைப்படுத்தி, புலன்களை அடக்கி யோகத்தில் ஈடுபடுகின்றனர். மற்றும் சிலர் அல்ப சுகங்களுக்காக பல்வேறு வினைகளிலும் மூழ்கியிருக்கின்றனர். சில சிந்தனையாளர்கள் தம் புத்தியை தூய்மையாக்கிக் கொண்டு சாத்திரங்களைப் பயில்வதில் ஆர்வம் கொண்டுள்ளனர். ஆனால் நாங்களோ திருமகள் மணாளனன் ஸ்ரீ கண்ணபிரானின் முகத்தாமரையிலிருந்து வெளிப்பட்ட கீதா சாத்திரத்தைப் பருகி ஈடேற்றம் அடைந்தவராயினோம்.*

3. “**வார்ஷ்ணேய ப்ரஹ்மசைலாத்ருஜீ சதபதகா ஞான விக்ஞான கூலா**
**பார்த்தஸ்ய பார்த்தநாதஸ்சிரமம்ருதவஹா ப்ரத்யகாநந்த சிந்தும்**
**ஸம்ப்ராப்தார்த் ப்ரவாஹ ப்ரபதித விததா ஸ்வத்த முந்மூலயந்தீ**
**கீதா ஸ்பீதா நிமங்துக்கஹ் ஸகலகரிமலம் ஸ்வர்த்து நீயம் துனீதே**“

**பொருள்:**

*கீதை ஒரு தூய கங்கையின் ஓட்டம் ஆகும். கண்ணபிரான் என்னும் மலைமுகட்டிலிருந்து அர்ச்சுனனின் வேண்டுகோளுக்கு கேற்ப பிறந்தது. வளைவுகள் இல்லாத பல பாதைகள் கொண்டது. ஞானம், விஞ்ஞானம் எனும் தீர்த்தங்களைக் கொண்டது. நிலையான அமுத ஒட்டம் கொண்டது. அது ஆன்மா எனும் ஆனந்தக் கடல் அடைகின்றது. ஆன்மீக ஒட்டத்திற்குக் குறுக்கே நிற்கும் சம்சாரமெனும் அரச மரத்தை வேர்களுடன் அறுக்கவல்லது. தன்னிடத்தே நீராடுவோரின் ‘கலி' அழுக்குகளைக் கழுவுகின்றது.*

4. “**ஆசார்யாஹ் ஸன்தி குத்ராப்யதி விமலதியோ வேத சாஸ்த்ரகமானம்**
**துஷ்ப்ராபஸ் தாவதாஸ்தே த்ரிஜகதி நிதராமாத்மத்தவோப தேஷ்டா**
**ஏவம் ஸத்யர்ஜுனஸ்யாத்புத விகலவதோ வர்ண்யதே கின்னு பாக்யம்**
**யஸ்யாசார்யஸ்ய ஹேதோஹ் ஸ்வய முபநிஷதாமர்த்த ஆவிர்பபூவ**“

**பொருள்:**

*வேத சாத்திரங்களை உணர்ந்தோரும், மிகுந்த தூய்மையான உள்ளம் படைத்தவருமான ஆசிரியர்கள் அங்கங்கே கிடைக்கலாம். ஆனால் ஆன்மதத்துவம் ஒன்றை மட்டுமே போதிக்கும் மகான்கள் மூவுலகிலும் கிடைப்பது*

அரிது. இவ்வாறிருக்கையில் போர்க்களத்தில் உறவினர்களைப் பார்த்து நிலைகுலைந்த மனத்துடன் இருந்த அர்ச்சுனன் பெற்ற பெரும் பேற்றை என்னவென்று கூறுவது? ஏனெனில் அர்ச்சுனனுக்கு குருவின்வடிவில் கிருஷ்ணர் போதித்தது அனைத்தும் முழுமையான உபநிடதங்களின் சாரமே!

5. **க்வ சாஸ்த்ரம் கீதாக்யம் ஹரிமுக ஸரோஜாத்விகலிதம்**
   **க்வ சாஸ்மாகம் புத்திர் விஷயவிஷபங்க்கே நிபதிதா**
   **ததாபி ஸ்ரீ காந்த ஹ்ரஸ ரகுண லக்ஷ்மீ விரசிதம்**
   **கடாட்சம் ஸ்வட்சாச்சம் ஹ்யனுச்ருதவதாம் கிம் ந சுலபம்"**

**பொருள்:**

பகவானின் முகத்தாமரையிலிருந்து வெளிப்பட்ட கீதையெனும் இம்மகா சாஸ்திரம் எங்கே! விஷயங்களென்ற விஷ மூழ்கிவிடும் எங்கள் புத்தி எங்கே! ஆயினும் சத்குணங்கள் நிறைந்தவனும், தூய்மையானவனும் ஆன லக்ஷ்மீபதியின் கடாட்சத்தை பெற்றவனுக்கு மிக சுலபமாகவே கிரஹித்தல் கூடும்.

6. **வேதோததி ப்ரதிதம் வாகதேவ ஸமுத்ருதம்**
   **ஸந்தஹ் பிபந்தி ஸததம் கீதாம்ருத ரஸாயனம்"**

வேதங்களெனும் பாற்கடலினின்னும் கடைந்து கிருஷ்ணபரமாத்மா வெளிக்கொர்ந்த கீதாம்ருதத்தை சத்புருஷர்கள் எப்போதும் அருந்தி கொண்டே இருக்கிறார்கள்.

7. **"ஏகம் சாஸ்த்ரம் தேவகீபுந்ரத்கீதம்**
   **எகோ தேவோ தேவகீபுத்ர ஏவ**
   **ஏகோ மந்த்ரஸ்தஸ்ய நாமானி யானி**
   **கர்மாப்யேகம் தஸ்ய தேவஸ்ய ஸேவா"**

சாத்திரங்களனைத்திலும் தேவகீபுத்ரனான ஸ்ரீ கிருஷ்ணர் கானமிசைத்த கீதாசாஸ்த்ரம் ஒன்றே மேன்மையானது, தேவர்களில் தேவகிபுத்ரனான ஸ்ரீ கிருஷ்ணரே சிறந்தவர்,

மந்திரங்களனைத்தினும் கிருஷ்ணரின் நாமமே மிக உயர்ந்தது, செயல்களனைத்தினும் சிறந்தது ஸ்ரீ கிருஷ்ணரின் சேவையேயாகும்.

**8. "பாரதே ஸர்வ வேதார்த்தோ பாரதார்தஸ்ச க்ருத்ஸனஸஹ**
**கீதாயாடிஸ்தி தேநேயம் ஸர்வசாஸ்த்திரமயீ கீதா"**

**பொருள்:**

எல்லா வேதங்களின் சாரமும் மஹா பாரதத்தில் உள்ளது. பாரதத்தின் சாரம் கீதையில் உள்ளது. ஆதலின் கீதை எல்லா சாஸ்திரங்களின் வடிவம் எனக்கூறப்படுகிறது.

**9. "ஸ்ரீ கோவிந்த முகாரவிந்த மதுனாமிஷ்டம் மஹாபாரதே**
**கீதாக்யம் பரமம் ரஹஸ்யம்ருஷிணா**
**வ்யாசேன விக்யாமிதம்**
**வ்யாக்யாதம் பகவத்பதைஹ் ப்ரதிபதம்**
**ஸ்ரீ சங்கராக்யைஹ் புனர்**
**விஸ்பஷ்டம் மதுஸூதனேன முனினா**
**ஸ்வக்ஞான சுத்தய்யைக் க்ருதம்"**

கோவிந்தனான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் முககமலத்தினின்றும் வெளிப்பட்ட மிகவும் மதுரமானது மான கீதையெனும் பரம இரகசியம் மகாபாரதத்தில் வியாச மஹரிஷியால் எழுதப்பட்டது. ஸ்ரீ சங்கர பகவத்பாதர் விரிந்த உரை எழுதினார். மறுபடியும் மதுசூதனன் என்ற முனிவர் ஞான சுத்திக்காக அதன்பொருளை இன்னும் பிறருக்கு எழுதி வழங்கினார்.

**10. "பகவத்கீதா கிஞ்சிதத்தா**
**கங்கா ஜல லவ கணிகா பீதா**
**ஸக்ருதபி யேன முராரி ஸமர்ச்சா**
**தஸ்ய கரோதி யமோபி ந சர்ச்சாம்"**

எவரொருவர் பகவத்கீதையை ஒரு சிறிதேனும் அத்யயனம் செய்கிறார்களோ, கங்கா ஜலத்தை ஒரு துளியேனும்

குடிக்கிறார்களோ, விஷ்னு மூர்த்தியை ஒரு முறையேனும் பூசிக்கிறார்களோ, அத்தகையோரைக் குறித்து யமன் விவாதிக்க மாட்டான். (மரணமற்ற வாழ்வை அவன் பெறுவான் என்பது பொருள்)

11. **"கேயம் கீதா நாமஸஹஸ்ரம்**
**த்யேயம் ஸ்ரீபதிரூப மஜஸ்ரம்**
**நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்**
**தேயம் தீனஜனாய ச வித்தம்"**

பகவத் கீதையை, விஷ்ணுசகஸ்ர நாமத்தை படிக்க வேண்டும்" விஷ்ணுமூர்த்தியை எப்போதும் தியானிக்க வேண்டும். சத்புருஷர்களின் சங்மகத்தில் புத்தியைச் செலுத்த வேண்டும். தீனர்களுக்கும் ஏழைகளுக்கும் தனதானம் செய்ய வேண்டும்.

12. **"கீகாரம் த்யாகரூபம் ஸ்யாத் தத்வபோதம் தகாரகம்**
**கீதாவாக்ய மிதம் தத்வம் க்ஞேயம் ஸர்வ முமுக்ஷுபிஹி"**

'கீ' என்றால் தியாகம் 'த' என்றால் தத்வ ஞானம். இவ்வாறாக தியாகத்தையும் தத்வ ஞானத்தையும் போதிப்பதால் 'கீத' என்ற பெயர் ஏற்பட்டது என்பதை முமுக்ஷுக்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டும்.

**4. 'க' காரங்கள்**

**கீதா கங்கா ச காயத்ரீ கோவிந்தேதி ஹ்ருதிஸ்திதே**
**சதுர்க கார ஸம்யுக்தே புனர்ஜன்ம ந வித்யதே" - (மகாபாரதம்)**

கீதை, கங்கை, காயத்ரி, கோவிந்தன் எனும் 'க' காரத்துடன் முதலாகும் நான்கையும் எவன் அடை...கின்றனோ அவனுக்கு மறுபிறவி இல்லை. (அதாவது பிறப்பு இறப்புடன் கூடிய சம்சார துக்கத்திதனின்றும் விடுபட்டு வீடுபேற்றை அடைவான்) கீதையை ஓதுதல், கங்கையில் நீராடுதல், காயத்ரிமந்திரத்தை ஜபித்தல், கோவிந்தனின் தியானம் இவை வாழ்க்கையில் மிகமுக்கிய மானவையாகக் கருதவேண்டும்)

# கீதாச்சார்யனின் ஸ்தோத்ரம்

**1. "யஸ்ய க்ருபாகடாக்ஷேண ஸம்சாரோயம் ப்ரணஸ்யதி**
**ஸர்வகம் சச்சிதாத்மானம் தம் வந்தே பார்த்தஸாரதிம்"**

எவரின் அருட்பார்வையால் இந்த சம்சார துக்கம் நசித்துப்போகுமோ, அத்தகைய பரமாத்மாவும், எங்கும் நிறைந்தவனும், சச்சிதானந்த வடிவமானவனும், அர்ஜுனனின் தேரோட்டியும் ஆன கிருஷ்ண பரமாத்மாவுக்கு வணக்கம்.

**2. "வ்யவஹித ப்ருத நாமுகம் நிரீக்ஷ்ய**
**ஸ்வஜனவதா த்விமுகஸ்ய தோஷபுத்யா**
**குமதிமஹரதாத்மவித்யயா யஹ்**
**ஸ பவது மே பகவான் கதிர்முகுந்தஹ"**

**(பாகவதம் - பீஷ்மஸ்துதி)**

இருபுறமும் நிற்கும் சேனைகள் போருக்கு ஆயத்தமாவதைக் கண்டு அவர்களை வதைப்பது பாவம் என்று கருதி போர் வேண்டாம் என்று நின்ற அர்ஜுனனின் விபரீத எண்ணத்தைத் தன் உபதேசத்தால் அகற்றிய கண்ணன் என்னைக் காப்பாற்றுவானாக!

**3. க்திச்சாதரிம் ப்ராப்ய கீதாபயோதௌ**
**ந்யமஜ்ஜம் க்ருஹுதாதி சித்ரார்த்த ரத்னம்**
**ந சோத்தாது மஸ்மி ப்ரபுஹ் ஹர்ஷயோகாத்**
**ஸ மே கௌணுகீ நந்தஸூனுஹ் ப்ரியஹ் ஸ்யாத்"**

'பகவத் பக்தி' யெனும் படகைக் கொண்டு கீதை யெனும் கடலில் மூழ்கி அதிலுள்ள விசித்தரமான பல வண்ண ஞான ரத்னங்களை எடுத்துக் கொண்டு ஆனந்தப்பரவசத்தால் மேலே எழ முடியாமல் இருக்கிறேனோ அத்தகையோனான என்னை, பரமானந்த உருவான ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா எனக்கு அன்பை அருளட்டும்.

**4. ரோக பங்க நிமக்னம் யஹ் ஸாங்க்ய யோகோபதேசதஹ்**
**உஜ்ஜஹாரார்ஜுனம் பக்தம் ஸ க்ருஷ்ணஹ் சரணம் மம**

*துக்கம் என்ற சேற்றில் மூழ்கி வெளிவர இயலாமல் தவித்த அர்ஜுனனை எவர்தன் உபதேசத்தால் காப்பாற்றினாரோ அத்தகைய கண்ணனே எனக்கு அடைக்கலம்.*

**5. "பீதம் வாஸோ ததானம் விஜயரதகதம்**
**ப்ரஹ்மருத்ராதி வந்த்யம்**
**பூமோபாரம் ஜிஹீர்ஷும் நவஜலதருசம்**
**சங்க சக்ராப்த ஹஸ்தம்**
**பார்த்த வ்யாஜேன லோகம் நிகம மனு**
**ஸ்ருதெள யோஜயந்தம் மஹேசம்**
**த்யாயே நித்யம் ஸுஸேவ்யம் ஸுஜனமதி**
**க்ருஹம் க்ருஷ்ணமானந்தகந்தம்"**

*மஞ்சள் நிற ஆடையை அணிந்தவனும், அர்ச்சுனனின் தேரோட்டியும், பிரம்ம ருத்ராதி தேவர்களின் வணக்கத்திற்குரியவனும், பூமியின் பாரத்தைத் தீர்க்க அவதரித்தவனும், நீலமேகத்தின் ஒளியுடையவனும், சங்கு, சக்கரம், கதை பத்மம் ஆகியவற்றை கையிலேந்தியவனும், அர்ஜுனனின் வாயிலாக உலகிற்கு 'வேத நீதி' யை எடுத்துக் காட்டியவனும், மஹேஸ்வரனும், நல்லோரின் இதயத்தே உறைபவனும், சேவிக்கத்தக்கவனும் ஆனந்தத்தின் உறைவிடமுமான கண்ணனை எப்போதும் தியானிக்கிறேன்.*

**6. "காண்ட த்ரயாத்மகம் சாஸ்த்ரம் கீதாக்யம் யேன நிர்மிதம்**
**ஆதிமத்யாந்த ஷட்கேஷு தஸ்மை பகவதே நமஹ"**

*முதல், இடை, கடையில் ஆறு அத்தியாயங்களாக மொத்தம் 18 அத்தியாயங்கள் உள்ள கீதையெனும் ஆன்மீக சாஸ்திரத்தை எவன் போதித்தானோ அத்தகைய கிருஷ்ணபகவானுக்கு வணக்கம்.*

**7. அக்ரே க்ருத்வா கமபிசரணம் ஜானு நைகேன் திஷ்டன்**
**பஸ்சாத் பார்த்தம் ப்ரணய ரச ஜுஷா**
**சக்ஷுஷா வேக்ஷ மானாஹ்**
**ஸவ்யே தோத்ரம் கரசரஸிஜே தக்ஷிணே**
**ஞான முதானாம்**
**ஆபிப்ராணோ ரத மதிவஸன் பாது நஹ்**
**ஸூத வேஷஹ"**

*ஒரு காலை முன்வைத்து மற்றெரு காலை ரதத்தின் மேல் அமர்ந்தவனும், பின்னால் இருக்கும் அர்ஜுனனை அன்புநிறைந்த கண்களுடன் நோக்குபவனும், இடது கரத்தால் கடிவாளத்தை இழுத்துப் பிடித்திருப்பவனும் வலது கையில் ஞான முத்திரை ஏந்தியவனுமான தேரோட்டி வேடம் பூண்ட கண்ணன் நம்மைக் காப்பாற்றுவானாக.*

## கீதா விநோதம்

*1. கீதையை நேரில் கேட்டவன் அர்ச்சுனன் மட்டுமல்ல. மேலும் மூவர் உளர். அர்ச்சுனனின் தேர்க் கொடியில் அமர்ந்தவாறு அனுமார் கேட்டார், வியாசரும் கேட்டார். வியாசரின் அருளால் சஞ்சயனும் கேட்டார். எனவே கீதையை நேரில் கேட்டவர் நால்வர்.*

*2. போரின் தொடக்கத்தில் அர்ச்சுனனுக்கு ஏற்பட்ட அஞ்ஞானத்தின் வடிவமான மோகம் கண்ணனின் வாயிலாகக் கீதையைக் கேட்டவுடன் அழிந்தது என்று மக்கள் நினைப்பர். அதற்குக் கீதா சுலோகத்தை மேற்கோள் காட்டுவர். அது உண்மைதான். ஆனால் கீதையின் 11ஆவது அத்தியாயத்தின் தொடக்கத்திலேயே அர்ச்சுனன் கீழ்க் கண்ட வாக்கியங்களைக் கூறியுள்ளான்.*

**"மதனுக் க்ரஹாய பரமம்**
**குஹ்ய மத்யாத்ம சம்ஞிதம்**
**யத்வயோக்தம் வசஸ்தேன**
**மோஹோ(அ)யம் விகதோ மம" - (11 1)**

மகானே! என்பால் உள்ள பேரருளால் தாங்கள் போதித்த இந்த ரகசியமான ஆன்மீக ஞானத்தால் என் அறியாமை அகன்று விட்டது. அர்ச்சுனனின் இந்த வாக்கியத்தால் அவனின் மோகப் பிரமை 10 அத்தியாயங்கள் கேட்கும் போதே அகன்று விட்டது என்பது தெளிவாகிறது.

3. 'கீதா' என்பதை மாற்றிப் படித்தால் தாகீ என்றாகும். இதனை 'தாகீ' என்ற விரைவாகக் கூறினால் 'தியாகி' என ஒலிக்கும். தியாகி ஆக வேண்டுமென்பதே கீதையின் மையப் பொருள்.

4. 'அசோச்யான்' - (2-11) என்று தொடங்கி நத்வம் சோசிது மர்ஹஸி' (2-27) என்ற எச்சரிகையுடன் தொடர்ந்து இறுதியில் 'மாசுசஹ' என முடிவடைகிறது. ஆதலின் சோகமற்ற நிலையே கீதையின் முக்கிய கோட்பாடு என்று கொள்ளலாம்.

5. கீதையிலுள்ள மொத்த சுலோகங்கள் 700.13 ஆவது அத்தியாயத்தின் தொடக்கத்திலுள்ள அர்ச்சுனனின் 'ப்ரக்ருதிம்' புருஷம் சைவ' என்ற சுலோகத்தைச் சேர்த்தால் மொத்த 701 ஆகும்.

6. கீதையைப் போர்க்களத்தில் கண்ணன் அர்ச்சுனனுக்குப் போதித்த நாள் மார்கழி சுத்த ஏகாதசி, அது கீதையின் பிறந்த நாள் ஆதலின் அந்நாளில் மக்கள் கீதாஜயந்தியைக் கொண்டாடுவர்.

7. முதல் முதலில் கீதையை வெளிஉலகுக்குப் பரப்பியவன் சஞ்சயன் ஆவான்.

8. கீதை 'த' காரத்துடன் தொடங்கி 'ம' காரத்துடன் நிறைவடைகிறது. த,ம என்ற இரு எழுத்துக்களுக்கிடையில் கீதை ஒளிர்கிறது.

(பிராகிருத மொழியில் 'தர்மம்' என்பதை 'தம்மம்' என்பர். உதாரணமாக 'தர்மபதம் என்ற பௌத்த நூல் 'தம்ம பதம்' எனப்படுகிறது.) தர்மமே உருவானது கீதை எனக் காட்டுவதற்காக அத்தகைய எழுத்துக்கள் சேர்ந்தனவோ என்னவோ?

9. ஒருவன் புதிதாக கீதையைப்படிக்கத் தொடங்கி 'தர்மம் க்ஷேத்ரே குருக்ஷேத்ரே' என்று தவறாக படிக்க ஆரம்பித்து 'க்ஷேத்ரே க்ஷேத்ரேதர்மம் குரு' என்று அதனைப் பிரித்துப் பொருள் கொண்டு (எல்லா விடங்களிலும் தர்மம் செய்) இந்த ஒரு கருத்தை வாழ்க்கையில் அனுசரித்தால் போதும் என்று தர்மத்தைக் கடைப்பிடிக்கத் தொடங்கினான்.

10. கீதையைச் சொன்னவன், கேட்டவன், எழுதியவன் அனைத்துமே கண்ணனேயாவான். (இதனைக் குறித்த விவரம் 'கீதையின் அமோகச் சக்திக்ககுக் காரணம்' என்ற தலைப்பின்கீழ் தெரிவிக்கப்பட்டுள்ளது)

11. ஒருவனது தலை எழுத்தை மாற்றி வினைக்கும், பிறவிகளுக்கும் அப்பாற்பட்ட கைவல்யத்தை அளிக்கவல்ல மாபெரும் சக்தியுடையது கீதை.

12. வேதவியாசருக்கு 18 என்ற எண்ணில் ஆர்வம் அதிகம்.

13. கீதையில் சில அத்தியாயங்களிலுள்ள சுலோகங்கள் ஒரே எண்ணிக்கை உடையனவாய் உள்ளன.

1, 6 ஆம் அத்தியாயம் - 47 சுலோகங்கள்

4 10 ஆம் அத்தியாயம் - 42 சுலோகங்கள்

8, 17 ஆம் அத்தியாயம் - 28 சுலோகங்கள்

9, 13 ஆம் அத்தியாயம் - 34 சுலோகங்கள்

12, 15 ஆம் அத்தியாயம் - 20 சுலோகங்கள்

14. மகாபாரதத்தில் கீதை பீஷ்ம பருவம் 25 ஆவது அத்தியாயம் முதல் 42 ஆவது அத்தியாயம் வரை இடம் பெற்றுள்ளது.

15. பல பழம் பெரும் வடமொழி நூல்கள் 'அது' என்ற மங்கலச் சொல்லுடன் ஆரம்பித்து 'இதி' என்ற மங்கலச்சொல்லுடன் முடிவடைகின்றன. கீதையிலும் தொடக்கத்தில் 'அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா' என்ற

வாக்கியத்தில் 'அது' என்ற சொல்லும், முடிவில் "இதி குஹ்யதமம் சாஸ்த்ரம்' என்ற வாக்கியத்தில் 'இதி' என்ற சொல்லும் உள்ளன. ஆதலில் பழம் பெரும் வழக்கை கீதை கடைப்பிடித்தது எனலாம்.

16. கலியுகம் 38 வருடங்களுக்கு முன்பே அதாவது துவாபரயுகம் முடிவடையும் தருவாயில் கீதை போதிக்கப்பட்டது. கலியுகம் தொடங்கி 1962 வருடத்திற்கு 5000 வருடங்கள் ஆயிற்று. ஆதலின் கீதை தோன்றி 5101 வருடங்கள் ஆயிற்று எனலாம்.

17. கண்ணனின் அவதாரகாலம் 125 வருடங்கள் 7 மாதம் 8 நாட்கள் 30 விநாடிகள். கீதையைப் போதிக்கும் காலத்தில் கண்ணனுக்கு 87 வயது ஆகும்.

18 (1) 'யேன ஸர்வமிதம் ததம்' என்ற வாக்கியம் கீதையில் 3 முறை உள்ளது. 'எவரால் இந்த உலகனைத்தும் பரவியுள்ளதோ அந்த பரமாத்மா' என்பது அதன் பொருள்.

(2) 'மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு! என்ற வாக்கியம் கீதையில் இரண்டு முறை பயன் படுத்தப்பட்டுள்ளது, (9 ஆம் அத்தியாயத்தில் 34 ஆவது சுலோகம், 18 ஆவது அத்தியாயத்தில் 65 ஆவது சுலோகம்) 'என்னிடத்திலேயே மனதைச் செலுத்து, என் பக்தனாக இரு, என்னையே பின்பற்று, என்னையே வந்தனை செய்' என்பது அதன் பொருள்.

**கீதையில் கிருஷ்ணருக்கும் அர்ச்சுனனுக்கும் வழங்கப்பட்டுள்ள பிற நாமங்கள்**

*கிருஷ்ணர்*

1. அச்யுதன்
2. அநந்தன்
3. அப்ரதிமப்ரபாவன்
4. அரிசூதனன்
5. ஜனார்தனன்
6. தேவன்
7. தேவதேவன்
8. தேவ வரன்

9. தேவேசன்
10. பரமேஸ்வரன்
11. புருஷோத்தமன்
12. பிரபு
13. பகவான்
14. ஆத்யன்
15. கமல பத்ராக்ஷன்
16. கிருஷ்ணன்
17. கேசவன்
18. பூதபாவனன்
19. பூதேசன்
20. மதுசூதனன்
21. மகாத்மா
22. மகாபாஹு
23. மாதவன்
24. யாதவன்
25. யோகி
26. யோகேஸ்வரன்
27. கேசி நிஷூதனன்
28. கோவிந்தன்
29. ஜகத்பதி
30. ஜகந்நிவாசன்
31. வார்ஷ்ணேயன்
32. வாசுதேவன்
33. விஸ்வமூர்த்தி
34. விஸ்வேஸ்வரன்
35. விஷ்ணு
36. சர்வன்
37. சஹஸ்ரபாஹு
38. ஹ்ருஷீகேசன்

அர்ஜுனனின் பெயர்கள்:

1. அநகன்
2. அனுசூயன்
3. அர்ஜுனன்
4. கபித்வஜன்
5. கிரீடி
6. குருப்ரவீரன்
7. குரு நந்தனன்
8. குருஸ்ரேஷ்டன்
9. குருசத்தமன்
10. கௌன்தேயன்
11. குடாகேசன்
12. தாத
13. தேஹப்ருதாம் வரன்
14. தனஞ்சயன்
15. பரந்தபன்
16. பாண்டவன்
17. பார்த்தன்
18. புருஷரிஷபன்
19. பரதச்ரேஷ்டன்
20. பரதசத்தமன்
21. பாரதன்
22. மகாபாஹு
23. ஸவ்யஸாசி

# தினமும் நினைக்கத்தக்க சில கீதா வாக்கியங்கள்

[மருத்தை உட்கொண்டால் மாத்திரமே நோய் குணமாவதைப் போல், பிறவிப் பிணி நீங்க சரியான மருந்தான கீதையை பயன்படுத்தினால் தான் சம்சார துக்கங்கள் தொலையும். எனவே நேரம் கிடைக்கும் போதெல்லாம் நினைப்பதற்கும். எண்ணிப் பார்ப்பதற்கும் சில முக்கியமான கீதை வாக்கியங்கள் எப்போதும் அருகில் இருக்க வேண்டும். இருட்டில் பயணம் செய்பவர்களுக்கு விளக்கு எங்ஙனம் பயன்படுகிறதோ அவ்வாறு பிறவியெனும் இருளில் தத்தளிக்கும் உயிர்களுக்குக் கீதை வாக்கியங்கள் பயனுள்ளவையாக அமைகின்றன. எனவே இப்படிப்பட்ட சிறந்த வாக்கியங்களை மனனம் செய்வதோ அல்லது நன்றாகக் கண்ணுக்குப் புலப்படும் வகையில் எழுதிவைப்பது நல்லது. அல்லது சிலவற்றைப் பலகைகளில் எழுதி வீட்டிலோ, மாடங்களிலோ அல்லது முக்கியமான இடங்களிலோ அவற்றைத் தொங்கவிட்டு பல அலுவல்களில் மூழ்கியிருக்கும் தனது பார்வையில் அவை தென்படும் வகையில் அமைத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய சில மிக முக்கியமானவை வாசகர்களின் நலனுக்காக இங்கு தரப்படுகின்றன.]

| | கீதாவாக்யம் | பொருள் |
|---|---|---|
| 1. | 'க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யம் த்யக்த் வோத்திஷ்ட பரந்தப" - (2-3) | அர்ச்சுனனே! இழிவான இதய பலத்தைக் கைவிட்டு கடமையைக் கைக்கொள். |
| 2. | நாஸதோ வித்யதே பாவோ நாபாபோ வித்யதேஸதஹ் -((2-16) | இல்லாததற்கு இருப்பு கிடையாது. இருப்பதற்கு எதுவுமில்லை. (உலகம் இல்லாதது., ஆத்மா இருப்பது) |

| கீதாவாக்யம் | பொருள் |
|---|---|
| (2a) நத்வே வாஹம் ஜாது நாஸம் சத்வம் நேமே ஜனாதிபாஹா - (2-12) | நீ, நான், இந்த அரசர்கள் யாவரும் முன்பும் இப்போதும் எதிர்காலத்திலும் இருப்பவர்களே. (ஆன்மாவிற்கு அழிவு இல்லை) |
| 3. ந ஹந்யதே ஹன்ய மானே ஸரீரே (2-20) | உடல் கொல்லப்பட்டாலும் ஆன்மா கொல்லப்பட மாட்டாது. |
| 4. ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் (2-40) | தருமம் சிறிதாயினும் பேரச்சத்திலிருந்து காக்கும். |
| 5. கர்மண்யேவாதிகாரஸ்தே மாபலேஷு கதாசன (2-47) | கடமையைச் செய்வதில்தான் உனக்கு பெருமை இருக்கிறது. ஆனால் அவற்றின் பயன்களைக் கோருவதில் கிடையாது. |
| 6. சமத்வம் யோக உச்யதே (2-48) | காரியம் கைகூடினும், கூடா விடினும் சமநிலையிலான புத்தியுடன் கூடியிருத்தலே யோகமாகும். |
| (6a). யோகஸ்தஹ் குரு கர்மாணி | தெய்வத்தில் (ஆன்மாவில்) நிலைத்திருக்கும் மனத்துடன் கடமைகளைச் செய். |
| 7. "யோகஹ கர்மஸு கௌசலம் (2-50) | பயன் கருதாமல் கடமையாற்றுதல் சிறந்த யோகமாகும். செயல்களில் சிறந்த பயிற்சி யோகமாகும். |
| 8. அசாந்தஸ்ய குதஹ்ஸுகம் (2-66) | அமைதி இல்லாதவனுக்கு சுகம் எங்கே? |
| 9. 'கர்மஜ்யாயோ ஹ்யகர்மணஹ" (3-8) | செயலற்று இருப்பதைவிட செயலாற்றுவது மேல் தமோ குணத்தோனாக இருப்பதை |

| கீதாவாக்யம் | பொருள் |
|---|---|
| | விட செயல்துடிப்புடன் இருப்பது மேல்) |
| 10. யுத்யஸ்வ விகதஜ்வரஹ (3-30) | பதற்றமின்றி போர்புரிவாயாக ! (செயலாற்றுவாயாக) |
| 11. ஜஹி ஸத்ரும் மஹோ பாஹோ? காமரூபம் துராசதம் (3-43) | அர்ச்சுனனே! வெல்ல முடியாத காமன் எனும் பகைவனை வெற்றிகொள்வாயாக! |
| 12. ஸர்வம் கர்மாகிலம் பார்த்த க்ஞானோ பரிஸமாப்யதே! (4-33) | எல்லா செயல்களும் ஞானத்தில் அடங்கும். |
| 13. நஹி ஞானேன ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே (4-38) | இவ்வுலகில் ஞானத்தைவிட தூய்மையானது வேறொன்று மில்லை. |
| 14. ச்ரத்தாவான் லபதே ஞானம் (4-39) | சிரத்தையுடையவன் மட்டுமே ஞானத்தைப் பெறுவான். |
| 15. ந ஸுகம் ஸம்சயாத்மனஹ (4-40) | மனத்தில் ஐயம் இருப்பின் எப்போதும் சுகமில்லை. |
| 16. விகதேச்சாபயக்ரோதோ யஹ் ஸதாமுக்த ஏவஸஹ (5-28) | காமம், வெகுளி, அச்சம், இவை இல்லாதவன் மோட்சம் அடைந்தவனேயாவான். |
| 17. ஞாத்வா மாம் சாந்தி ம்ருச்சதி (5-29) | ஜீவன் என்னை உணர்ந்து பரமசாந்தி அடைகிறான். |
| 18. உத்தரேதாத்மனாத்மானம் (6-5) | தன்னைத்தானே உயர்த்திக் கொள்ள வேண்டும். |
| 19. ஆத்மஸம்ஸ்தம் மனஹ் க்ருத்வா ந கிஞ்சிதப் சிந்தயேத் (6-25) | மனத்தை ஆன்மாவில் இருத்தி ஏனையவை அனைத்தையும் சிந்தித்தல் கூடாது. |
| 20. அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே (6-35) | பயிற்சியாலும், வைராக்கியத்தாலும் மனம் அடக்கப் படுகிறது. |

| கீதாவாக்யம் | பொருள் |
|---|---|
| **21.** நஹி கல்யாணக்ருத் கஸ்சித் துர்கதிம் தாத கச்சதி *(6-40)* | நன்மை செய்வோருக்கு என்றும் தீமை வராது. |
| **22.** மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸுத்ரே மணிகணா இவ *(7-7)* | நூலில் உள்ள மனிகளைப் போல இவ்வுலகனைத்தும் என்னுள் கட்டப்பட்டு இருக்கிறது. (பேணப்பட்டு) |
| **23.** மாமேவ யே ப்ரபத்யன்தே மாயாமேதாம் தரந்தி தே *(7-14)* | என்னைச் சரணடைபவர்கள் மாயையைக் கடந்துவிடுகிறார் கள். |
| **24.** ஞானி த்வாத்மைவ் மே மதம் *(7-18)* | ஞானி நானே, ஞானிக்கும் எனக்கும் வேறுபாடு கிடையாது. |
| **25.** வாஸுதேவஹ் ஸர்வமிதி | அனைத்தும் வாசுதேவனே (உலகனைத்தும் கடவுள் மயமே) |
| **26.** தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்ய ச *(8-7)* | எனவே எல்லா நேரங்களிலும் என்னையே நினைத்துப் போர்புரிவாயாக! உன் கடமையை ஆற்று. |
| **27.** தேஷாம் நித்யாபியுக் தானாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம் *(9-22)* | ஒருமித்த மனத்துடன் எப்போதும் என்னையே நினைக்கும் புண்ணியர்களின் யோக க்ஷேமத்தை நானே கவனித்துக் கொள்கிறேன். |
| **28.** தத்குருஷ்வ மதர்ப்பணம் *(9-27)* | நீ எதைச் செய்தாலும் என்னிடம் அர்ப்பணித்துவிடு. |
| **29.** நமே பக்தஹ்ப்ரணஸ்யதி *(9-13)* | என்னுடைய பக்தன் என்றுமே அழியமாட்டான். |
| **30.** அநித்யம ஸுகம் லோக மிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் *(9-33)* | நிலையில்லாததும், சுகம் இல்லாததுமாகிய இவ்வுலகை அடைந்த நீ நிலையான சுகத்திற்காக என்னை சேவிப்பாயாக! |

| கீதாவாக்யம் | பொருள் |
|---|---|
| **31.** ஸர்வபூதஹிதே ரதாஹா *(12-4)* | எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்வதில் நாட்டம் உடையோர் என்னையே அடைவர். |
| **31a.** தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்சார ஸாகராத் *(12-7)* | என்னைத் தியானிப்பவர்களை பிறப்பிறப்பு எனும் சம்சாரக் கடலினின்றும் கரையேற்று கிறேன். |
| **32.** த்யாகச் சாந்திரனந்தரம் *(12-12)* | துறப்பதால் நிலைத்த அமைதி கிட்டும். |
| **33.** யோமத் பக்தஹ் ஸ மே ப்ரியஹ் *(12-14)* | என்பால் பக்தி கொண்டவனே எனக்குப் பிரியமானவன். |
| **34.** க்ஷேத்ரக்ஞம் சாபிமாம் வித்தி ஸர்வ க்ஷேத்ரே ஷு பாரத *(13-3)* | விளங்கும் பொருள் எல்லா வற்றினும் அப்பொருளை விளங்கவைப்பன் நானே. |
| **35.** ஜன்மம்ருத்யு ஜராவ்யாதி துக்க தோஷானுதர்சனம் *(13-9)* | பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் ஆகியவற்றிலுள்ள துன்பங் களை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்க்க வேண்டும். |
| **36.** அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஞானம் வித்தி ஸாத்விகம் *(18-20)* | வெவ்வேறாக விளங்கும் எல்லாப் பொருள்களிலும் பரமன் ஒன்றாகவே நிறைந் திருப்பதாக உணர்தல் சாத்வீக ஞானம் ஆகும். |
| **37.** பக்த்யா மாமபிஜானாதி *(18-55)* | பக்தியால் என்னை உணர்வாய். |
| **38.** மச்சித்த சததம் பவ | எப்போதும் என்பால் மனதைச் செலுத்து. |
| **39.** மன்மனா பவ *(18-65)* | என்னுள் மட்டுமே மனதை நிலைபெறச் செய். |
| **40.** மாமேகம் சரணம்வ்ரஜ *(18-66)* | என் ஒருவனையே சரண் அடைவாயாக! |

# சப்த ச்லோகீ கீதை

1. ஓமித்தி எகாக்ஷரம் ப்ரஹ்ம
   வ்யாஹரன் மாமனு ஸ்மரன்
   யஹ் ப்ரயாதி த்யஜந்தேஹம்
   ஸ யாதி பரமாம் கதிம் (8-13)

2. ஸ்தானே ஹ்ருஷிகேச தவப்ரகீர்த்யா
   ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யனு ரஜ்யதே ச
   ரக்ஷாம்ஸி பீதானி திசோ த்ரவன்தி
   ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தசங்காஹா (11-36)

3. ஸர்வதஹ் பாணிபாதம் தத்
   ஸர்வதோ(அ) க்ஷிசிரோமுகம்
   ஸர்வதஹ் ச்ருதி மல்லோகே
   ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி (13-13)

4. கவிம் புராண மனுஸாஸிதாரம்
   அணோர் அணீயாம்ஸம் அனுஸ்மரேத் யஹ
   ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்ய ரூபம்
   ஆதித்ய வர்ணம் தமஸ்ஹ் பரஸ்தாத் (8-9)

5. ஊர்த்வ மூல மதஹ் ஸாகம்
   அஸ்வத்தம் ப்ராஹுரவ்யயம்
   சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி
   யஸ்தம் வேத ஸ வேதவித் (15-1)

6. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ
   மத்தஹ் ஸ்ம்ருதிர் ஞானம பபோஹனம் ச
   வேதைஸ்ச ஸர்வைரஹ மேவ வேத்யோ
   வேதாந்த க்ருத்வேத விதேவசாஹம் (15-15)

7. **மன்மனா பவ மத்பக்தோ
மத்யாஜீ மாம் நமஸ்குரு
மாமேவைஷ்யஸி யுக்த்வைவ
மாத்மானம் மத்பராயணஹ (9-34)**

**கீதையின் சாரம்**

பகவத் கீதையின் இறுதி அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையின் பொருளனைத்தையும் சுருக்கி மூன்று சுலோகங்களில் சொல்லியுள்ளார், பரபிரம்மத்தின் சாக்ஷாத்காரத்தை ஜீவன் எங்ஙனம் அடையக் கூடுமோ அதற்கான நெறி முறைகள் அதில் நன்றாக விவரிக்கப் பட்டிக்கிறது. எனவே முமுக்ஷுக்கள் அச்சுலோகங்களை மனனம் செய்து., அவற்றின் பொருளை எப்போதும் சிந்தித்திருத்தல் நன்று, அச்சுலோகங்களாவன.,

1. **"புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச
சப்தாதீன் விஷயாம் ஸ்த்யக்த்வா ராகத்த்வேஷௌ வ்யுதஸ்ய ச"
-(18-51)**

2. **"விவிக்தஸேவீ லக்வாஸீ யுதவாக்காயமானஸஹ
த்யான யோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஸ்ரிதஹ" (18-52)**

3. **"அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம்
விமுச்ய நிர்மமஹ் சாந்தோ ப்ரஹ்ம பூயாய கல்பதே" - (18-53)**

தூய்மையான புத்தியுடன், தைரியத்துடன் மனத்தை தன்வயப்படுத்திக் கொண்டு, சப்தாதி விஷயங்கள், விருப்பு வெறுப்பு இவைகளை விட்டொழித்து, தனிமையில், மிதமான ஆகாரத்தை உட்கொண்டு, உடலையும், மனத்தையும் நியமங்களில் ஈடுரடுத்தி, எப்போதும் தியானயோகப் பயிற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு, வைராக்யத்தைக் கடைபிடித்து அகந்தை, பயம், ஆணவம், காமம் வெகுளி, போகப்பொருட்களின் மேல் ஆசை இவைகளை விட்டொழித்து மமதையின்றி, அமைதியாய் இருப்பவன் பரபிரம்மத்தை அடைவதற்குத் தகுதியுடையவனாகிறான்.

# கீதையில் உவமானங்கள்

மகான்கள் தாங்கள் போதிக்கும் பல கம்பீரமான தத்துவங்களை சாமான்யர்களின் இதயத்திலும் நன்கு பதியும் வண்ணம் உவமைகளைப் பயன் படுத்துவார்கள் . அதனால் சிக்கலான கருத்துக்களும் மக்களுக்கு எளிதாக விளங்குகின்றன. இராமயணம், யோக வாசிஷ்டம், பாரதம், பாகவதம் முதலிய நூல்களிலும் சான்றோர் போதனைகளிலும் உவமைகள் பெரும் எண்ணிக்கையில் பயன் படுத்தப்பட்டுள்ளன. கீதையில் கண்ணபிரான் இம் முறையையே பின்பற்றி ஈடிணையற்ற ஆன்மீகத் தத்துவங்களை அழகிய உவமைகளால் விளக்கியுள்ளார். அவர் கையாண்ட உவமைகள் இங்கு தொகுத்து அளிக்கப்படுகின்றன.

1. மனிதன் பழைய ஆடைகளைக்களைந்து புதியனவற்றை உடுப்பது போல் ஆன்மா பழைய உடலை விட்டு புதிய உடலை எடுத்துக் கொள்கிறது. *(2-22)*

2. நீர்நிறைந்துள்ள பெரிய நீர்நிலை இருக்கையில் குறைந்த நீருடைய கிணற்றினால் ஒருவனுக்கு எத்தகைய பலன் கிடைக்குமோ, அனுபவம் வாய்ந்த பிரம்ம ஞானிக்கும் வேதங்களால் அத்துணை பலனே கிடைக்கும். *(2-46)*

3. ஆமை தனது உடல் உறுப்புக்களை தன்னுள் அடக்கிக் கொள்வதைப்போல் யோகியானவன் புலன்களை விஷயங்களிலிருந்து எப்போது அடக்கிக் கொள்கிறானோ அப்போது அவனுடைய ஞானம் நிலையானதாக இருக்கும். *(2-58)*

4. நிலைத்திருக்கும் கடலை நதிகள் எங்ஙனம் அடைகின்றனவோ, அதுபோல் இச்சைகள் பிரம்ம நிட்டையுடைய்வனிடம் அடைந்து அடங்கி விடுகின்றன. அப்படிப்பட்டவனே சாந்தியை அடைவான். சிற்றின்ப வேட்கை யுடையவன் அல்ல. *(2-70)*

5. புகையால் நெருப்பு, புழுதியால் கண்ணாடி, கர்ப்பத்தில் இருக்கும் சிசு எவ்வாறு மூடப்பட்டிருக்கிறதோ அவ்வாறே காமத்தால் ஆத்ம ஞானம் மூடப்பட்டிருக்கிறது. *(3-38)*

6. அர்ச்சுனனே! நன்றாக எரியும் நெருப்பு. விறகை எவ்வாறு எரிந்து விடுகின்றதோ, அவ்வாறே ஞானமெனும் நெருப்பும் எல்லா வினைகளையும் எரித்து விடுகின்றது. *(4-37)*

7. எவன் தான் செய்யும் காரியங்களின் பலனை பயன் கருதாமல் பரமனுக்கே அர்ப்பணித்து விடுகிறானோ அவனுக்கு தாமரை இலை தண்ணீர் போல் வினைகள் ஒட்டுவதில்லை. *(5-10)*

8. காற்றுபுகா இடத்தில் விளக்கு எவ்வாறு சலனமற்று இருக்குமோ அவ்வாறே ஆன்மதியானத்தில் மூழ்கியிருக்கும் யோகியில் உள்ளம் அசைவற்றிருக்கும். *(6-34)*

9. அர்ச்சுனனே! என்னைக்காட்டிலும் வேறாக இருப்பது இவ்வுலகில் சற்றுமில்லை. நூலில் கோர்க்கப்பட்டுள்ள மணிகளைப்போல் என்னுள் எல்லா உலகும் தொகுக்கப்பட்டு இருக்கிறது. *(7-7)*

10. எல்லா இடத்திலும் உலவுவதும், சிறந்தது மாகிய காற்று எல்லாக் காலங்களிலும் எப்படி நிலைத்திருக்கிறதோ அப்படியே எல்லா உயிர்களும் என்னுள் உறைவதாக உணர்ந்து கொள். *(9-6)*

11. அர்ச்சுனனே! இந்த உடல் 'க்ஷேத்ரம்' என்றும், இதனை அறிபவன் 'க்ஷேத்ரக்ஞன்' என்றும் அறிஞர்கள் கூறுகிறார்கள். *(13-2)*

12. மிகவும் சூக்ஷ்மமானதாயும், எங்கும் வியாபித்திருக்கும் ஆகாயம் எவ்வாறு எவராலும் தீண்டப் படாது இருக்கின்றதோ, ஆன்மாவும் உடல் முதலியவற்றால் தீண்டப்படாது இருக்கும். *(13-33)*

13. அர்ச்சுனனே! சூர்யன் ஒருவனாகவே இவ் அலகனைத்தையும் பிரகாசிக்கச் செய்கிறானோ அவ்வாறே

க்ஷேத்ரக்ஞன் எல்லாக்ஷேத்ரங்களையும் பிரகாசிக்கச் செய்கிறான். *(13-34)*

*14.* எதற்கு வேதங்கள் இலையாக அமைந்துள்ளனவோ, அத்தகைய சம்சாரவடிவான ஆலமரம், மேல்நோக்கிய வேர்களையும் கீழ்நோக்கிய கிளைகளையும் கொண்டிருப்பதாகவும், பலகாலம் இருக்கக் கூடிய தென்பதையும் பெரியோர்கள் கூறுகிறார்கள், அதனை எவன் அறிகிறானோ அவன் வேதங்களை அறிந்தவனாகிறான். *(15-1)*

*15.* சம்சார மெனும் அரசமரத்தின் கிளைகள் குணங்களால் வளர்க்கப்பட்டவையும், விஷயங்கள் எனும் தளிர்கள் உடையவையும் ஆக மேலும்கீழும் பரவியிருக்கின்றன. அதனுடைய வேர்கள் வினைத் தொடர்பால் கீழே ஊன்றி இருக்கின்றன. *(15-2)*

*16.* மலர்கள் முதலிய மணக்கும் பொருள்களில் இருந்து புறப்படும் காற்று அவ்வப்பொருள்களை விட்டு விட்டு, வாசனையை மட்டும் எடுத்துச் செல்கிறதோ, அவ்வாறே ஆன்மாவும் ஒரு உடலை விட்டு மற்றொரு உடல் அடையும் போது மனம் முதலிய ஆறுபுலன்களையும் தன்னுடன் எடுத்துச்செல்கிறது. *(15-8)*

*17.* நெருப்பு புகையால் மூடப்படுவதைப்போல் எல்லா வினைகளும் குற்றத்தால் மூடப்பட்டிருக்கின்றன. *(18-48)*

*18.* அர்ச்சுனனே! பரம்பொருள் எல்லாருடைய இதயங்களிலும் வீற்றிருந்து யந்திரத்தில் அகப்பட்டவர்களைப் போல் அனைவரையும் மாயையால் சுழற்றுகிறான். *(18-61)*

## கீதை மாளிகை

"கீதா மே சோத்தமம் க்ருஹம்" என்பது கடவுளின் வாக்கு. நான் கீதையை ஆதாரமாகக் கொண்டுள்ளேன். கீதை என்னுடைய வீடு என்று பொருள். அந்த வீட்டின் இயல்புகள் இங்கு கூறப்படுகின்றன.

கீதை மாளிகையின் அமைப்பு விவரங்கள்:

கட்டியவன் - ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா

அலங்கரித்தவர் - வேத வியாசர்

அமைப்பு - மூன்று அடுக்குகள்

அஸ்திவாரம் - அர்ச்சுனனின் விஷாதயோகம்

முதல் அடுக்கு - 5அறைகள் (2 முதல் 6 அத்தியாயம் வரை சாங்கிய, கர்ம, ஞான, ஆத்ம சம்சய யோகம் என்பவை)

இரண்டாம் அடுக்கு - 6 அறைகள் (7-12 வரை)

மூன்றாம் அடுக்கு - 6 அறைகள் ஜனனத்தைப் பற்றி ஆறு அத்தியாயங்கள் (13-18 அத்தியாயம் வரை)

**கட்டிடத்திற்கு வேண்டிய**

சுண்ணாம்பு - கர்மா

தண்ணீர் - பக்தி

செங்கல் - ஞானம்

கீதாமாளிகை பெரியது, மிகவும் அழகானது, அதிலுள்ள ஒவ்வொரு அறையிலும் பலவகைப் பட்ட விலைமதிப்பில்லா பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கட்டிடத்தில் எவராயினும் அடியெடுத்து வைக்கக்கூடும். ஜாதி, சமய, குல, இன, பால், வேறுபாடுகள் இல்லை. நுழைவுக் கட்டணம் கிடையாது, அப்படி உட்புகுந்து அங்கிருக்கின்ற பொருள்களைத் தங்கு தடையின்றி தரிசிக்கலாம், தொடலாம், வீட்டிற்கும் எடுத்துச் செல்லலாம். தடுப்பாரும் இல்லை. வழக்குத் தொடுப்பாரும் இல்லை.

சங்கரர் அந்த கீதா பவனத்தில் நுழைந்து, அதன் அழகில் மயங்கி தனக்குப் பிடித்தமான பொருள்களை அங்கிருந்து எடுத்துச் சென்றார். அதற்குப் பிறகு இராமனுஜரும் மத்வாச்சாரியாரும் வந்தனர். பிறகு இன்னும் பலர் வந்தனர். அவர்கள் அனைவருமே கீதா மாளிகையைத் தரிசித்து,

அங்கிருந்த பொருள்களை எடுத்துச் சென்று அமைதியடைந்தனர். ஆயினும் இதிலுள்ள விசித்திரம் என்னவெனில் யார்யார் எவ்வளவு பொருட்களை எடுத்துச் சென்ற போதிலும், அந்தக் கட்டிடம் (கீதா மாளிகை) எல்லாப் பொருட்களுடனும் நிறைந்தே காணப்படுகிறது. இதுவே கீதா மாளிகையின் தனிச் சிறப்பு. ஆதலால் வீட்டின்பம்பெற விரும்புவோர் கீதா மாளிகையைக் கண்ணாரக் கண்டு களித்து, அங்கேயே தங்கி இளைப்பாறி, சம்சாரத் துன்பங்களினின்றும் விடுபட்டு, பேரின்பத்தைத் துய்த்துப் பிறவிப் பயன் எய்துவார்களாக.

**அத்தியாய வரிசையில் கீதா பாராயணத்தின் பலன்**

கீதையின் மகிமை அபாரமானது, கீதையின் சுலோகங்களைப் பாராயணம், ஜபம், சிந்தனை இவை செய்வதால் எத்துணையோ நற்பலன்கள் கிடைக்கின்றன.. கீதையின் இச்சக்தியை முன்பு திருமகளுக்கு ஸ்ரீ நாராயணன் எடுத்துரைத்தார், அதையே பின்பு பரமசிவன் பார்வதிக்குப் புகன்றார். இச்செய்திகள் பத்ம புராணத்தில் இடம் பெற்றுள்ளன. கீதையிலுள்ள ஒவ்வோர் அத்தியாயத்தின் பாராயண பலன்கள் கதைகளின் வாயிலாக அதில் நன்றாகச் சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. பத்மபுராணத்தில் அடங்கியிருக்கும் கீதையின் அந்தியாய பலன்கள் கற்போருக்கு உதவியாக இருக்கும் என்று கருதி இங்கு சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகின்றன.

**1. முதல் அத்தியாயத்தின் பலன்:** கீதா பாராயணத்தை முழுவதுமாகவோ, அல்லது ஒரு அத்தியாயத்தையோ, அல்லது அதில் பாதியையோ, அல்லது ஒரு சுலோகத்தையாவது இல்லை, பாதிசுலோகத்தையாவது, இல்லை, ஒரே ஒரு பதத்தையாவது (ஒரு பகுதியையாவது) அல்லது ஒரே ஒரு பதத்தையாயவது, பக்தியுடன் எவனொருவன் ஓதுகிறானோ அவன் சுசர்மாவைப் போல் முக்தியடைவான். எவ்வாறெனின்.,-

முன்பு ஒரு காலத்தே சுசர்மா என்றொரு பிராம்மணன் வசித்து வந்தான். அவன் வெளி இன்பங்களில் நாட்டமுடையவனாய் கெட்ட நடவடிக்கைகளுடன் வாழ்ந்து, வாழ்நாளை வீணாகக் கழித்து இறந்தான். யமலோக அவஸ்தைகளை பலவற்றையும் அவன் அனுபவித்து மறுபிறவியில் ஒரு எருமைக் காளையாகப் பிறந்தான். ஒருநாள் மிகவும் அதிகமான பாரத்தைச் சுமந்த வண்ணம் ஒரு மலையின் அடிவாரத்தே சென்று கொண்டிருக்கையில் சுமைதாங்காது விழுந்த அந்த எருது இறந்துவிட்டது. அதன் தீனமான நிலையை அந்த வழியாகப் போய்க்கொண்டிருந்த சிலர் கண்டு அது நற்கதி அடைய வேண்டுமென்பதற்காக தாம் செய்த புண்ணியங்களின் பலனில் சில பாகத்தை அதற்காக ஈந்தனர். அதில் ஒரு வேசி தான் ஏதும் புண்யம் செய்யவில்லை, அவ்வாறு ஏதேனும் செய்திருப்பின் அதன் பலனை அந்த எருதிற்கு அளிக்கிறேன் என சங்கல்பம் செய்து கொண்டாள். வேசியின் புண்ணியத்தினால் அந்த ரிஷபம் புண்ணிய லோகத்தை யடைந்து மறுபடியும் பூர்வ ஜன்ம நினைவுடன் உத்தமபிராம்மண ஜன்மம் அடைந்தது. அதன் பிறகு தன் நற்பலனை அர்ப்பணித்த அந்த வேசியின் வீட்டை அடைந்து நீ செய்த புண்ணியம் யாது என வினவ அந்த வேசி ஒரு கிளியைக் காண்பித்து அது சொல்லும் வாக்கியத்தைத் தினமும் கேட்டதால் தன் சித்தம் புனிதமடைந்தது எனக்கூறினாள், அதன் பிறகு அவர்களிருவரும் அக்கிளியினிடம் சென்று கேட்கவும். அக்கிளி பூர்வஜன்மத்தில் அது ஒரு வித்தைகளறிந்தவன் என்றும், குரு தூஷனை என்ற பாவம் புரிந்து இறந்து பின் கிளியாகப் பிறந்து காட்டில் மிகவும் துன்பத்திற்குள்ளாகி இருக்கையில், ஒரு முனிபுங்கவர் தன் ஆசிரமத்திற்கு எடுத்துச் சென்று வளர்த்து வந்ததாகவும், அங்கு கீதையின் முதல் அத்தியாயத்தை அம்முனிவர் தம் மாணாக்கர்களுக்கு எப்போதும் போதித்து வருகையில் அதனைக் கேட்டு முறையாக அதுவும் உச்சரிக்கக் கற்றுக் கொண்டதாகவும் எப்போதேனும் திருட்டுத்தனமாக அந்த வேசிக்குச் சொல்லியதாகவும் கூறியது. அதனால் வேசியின் பாபங்கள் தொலைந்தன, சுசர்மாவிற்கு நற்கதி கிடைத்தது.

**'தஸ்மாதத்யாயமாத்யம் படதே ச்ருணுதே ஸ்மரிதேவா**
**அப்யா ஸேத்தஸ்ய பவதே பவாம்போதி ருத்ரருத்தரஹ"**

எனவே கீதையின் முதல் அத்தியாயத்தை படித்தோ கேட்டோ அல்லது நினைத்தோ இருப்பவர்கள் கலபமாக சம்சார கடலை எளிதாக தாண்ட இயலும்.

*2. இரண்டாம் அத்தியாயத்தின் பலன்:* பூர்வம் தக்ஷிண தேசத்தில் புரந்தரம் என்ற பட்டணத்தில் தேவ சர்மா என்ற பிராம்மணன் ஒருவன் இருந்தான். அவன் பல யோகங்கள், அதிதி உபசாரம் முதலிய நற்காரியங்களை செய்து வந்தும் மனச்சாந்தி மற்றும் ஆத்ம ஞானம் அடையாது மனம் சோர்வுற்றிருக்கையில், ஒருநாள் அவரது இல்லத்திற்கு, சாதுமுனிவர் ஒருவர் வரவும், அவருக்கு தனது விருத்தாங்களைக் கூறி ஆத்மஞானத்திற்கு உபாயம் யாது எனக் கேட்டனன், சாது அவனை ஆத்மஞான சித்தியடைய சௌபுரநகரத்தில் மித்ரவந்தன் என்ற இடையனிடம் அனுப்பி வைத்தார், மித்ரவந்தன் தேவசர்மாவிடம் இங்ஙனம் கூறினான், "நான் ஒருநாள் காட்டில் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது ஒரு பெரிய புலி வரவும், நானும் என் ஆட்டு மந்தைகளும் அங்குமிங்குமாக சிதறி ஓடினோம். ஆனால் அந்த இடத்தின் மகிமையோ என்னவோ ஓரிடத்தில் என் ஆட்டு மந்தையில் ஒரு ஆடும் அந்த புலியும் மிகவும் நட்புடன் இருந்ததைக் கவனித்தேன். உடனேயே அருகிருந்த வானரசிரேஷ்டரிடம் அதற்கான காரணத்தை அறிந்து கொண்டேன். அது என்னவெனில், அந்த இடத்தில் இருந்த ஒரு கோயிலில் சுசர்மா என்ற ஒருவன் ஞானமடைவதற்காக ஈசுவர உபாஸனை செய்து வர ஒருநாள் ஒரு அதிதி வந்து அவனுக்கு இதமளிக்கக் கருதி கீதை 2ஆவது அத்தியாயத்தை ஒரு கல்லில் செதுக்கி அதனை அப்பியாசம் செய்யும்படி கூறிவிட்டு மறைந்துவிட்டார். சுசர்மா அவ்வாறே தினமும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தை பாராயணம் செய்து வந்து, அப்யாசம் செய்து வர சிறிது நாட்களில் அவனது சித்தம் சுத்தியடைந்து ஆத்மஞானம் உதித்தது. அப்போதிருந்து அந்த புனித ஆத்மா அடிவைத்த

இடமெல்லாம் புனிதமாகி, விருப்பு வெறுப்புகள் இன்றி இருந்தது. நானும் உடனேயே அந்த செதுக்கிய பலகையினிடம் சென்று கீதையின் இரண்டாவது அத்தியாயத்தை அப்யசித்து ஆத்மாஞானானுபவத்தை அடைந்தேன். நீயும் அவ்வாறே செய்க என்றான். மித்ரவந்தனின் இவ்வாக்கியங்களைக் கேட்டு தேவசர்மாவும் இரண்டாம் அத்தியாயத்தை முறையாகப் பாராயணம் செய்து ஆத்மஞான மடைந்து பிரம்மபதவியடைந்து மேன்மையுற்றான்.

**'சிக்ஷிதஸ்தேன பூதாத்மா**
**படன் அத்யாய மாதராத்**
**த்விதீய மாஸ ஸாதோச்சைஹ**
**நிரவத்யம் பரம் பதம்"**

கீதை இரண்டாம் அத்தியாயத்தின் பலன்: ஆன்மீக ஞானம் பெறுதல்

3. மூன்றாவது அத்தியாயம் : முன்பு 'ஜனஸ்தானம்' என்ற நகரத்தில் 'ஜடன்' என்ற அந்தணன் இருந்தான். அவன் தன் இனத்திற்குரிய கடமைகளை கைவிட்டு விட்டான். சிற்றின்பங்களில் ஈடுபட்டு பொருள் ஈட்டுவதில் பேராசை கொண்டு வியாபாரம் செய்யும் பொருட்டு வடக்கு நோக்கி சென்றான். அங்கிருந்து திரும்பிவரும் போது வழியில் ஒரு மரத்தின் கீழ் திருடர்கள் அவனைக் கொன்று விட்டனர். பாவியாதாலால் அவன் மரணத்திற்குப் பின் 'பிசாசு' வடிவம் கொண்டான். சிறிது காலத்திற்கும் பின் தர்மவான் ஆகிய அவனது புதல்வன் தந்தையின் இறுதிச் சடங்குகளை நிறைவேற்ற காசிக்குப்புறப்பட்டான். வழியில் தன் தந்தையைக் கொன்ற அந்த மரத்தின்கீழ் அமர்ந்து கீதையின் 3ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்தான்.

**'ததாத்யாயம் ச கீதாயாஹ த்ருதீயம் ஸஞ்ஜ ஜாபஹ"**

உடனே ஆகாயத்தில் அவன் தந்தை பிசாசு உடலைத்துறந்து திவ்ய விமானத்தில் ஏறியிருப்பதைக் கண்டான். தந்தையே ! பிசாசுத்தன்மை நீங்கி கடவுள் தன்மை வரக் காரணம் என்ன என்று கேட்டான். மகனே நீபடித்த கீதை 3ஆம் அத்தியாயத்தைக் கேட்டகால் எனக்கு இத்தகைய திவ்ய நிலை கிட்டியது. நீ காசிக்குச் செல்ல வேண்டாம் வீட்டிற்குக் திரும்பி இதே உபாயத்தால் கீதை 3ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்து கொண்டு அதனால் கிடைக்கும் புண்ணியத்தை தாரைவார்த்து நம் முன்னோர்கள் அனைவரையும் நரகத்திலிருந்து கடைத் தேற்றுவாய்! என்று கூறினான். அவ்வாறே மகனும் செய்ய விஷ்ணு யமலோகத்திற்குத் தன் தூதுவர்களையனுப்பி அவனது முன்னோர்கள் அனைவரையும் வைகுண்டத்திற்கு அழைத்து வரச் செய்தான். இவ்வாறாக கீதையின் மூன்றாம் அத்தியாய பாராயணத்தால் பாவத்தினின்றும் விடுபட்டு திவ்யத்துவத்தை ஒருவன் அடைகிறான். கீதை 3ஆம் அத்தியாயத்தின் பலன்;- பாவங்கள் அகலுதல், பிசாசுத்தன்மை நீங்குதல்

4. நான்காம் அத்தியாயம்: கங்கைக்கரையில் உள்ள வாரணாசி விஸ்வநாதர் கோயிலில் பரதன் என்பவன் கீதையின் நான்காம் அத்தியாயத்தை தினந்தோறும் பாராயணம் செய்து வந்தான்.

**"நித்யமாத்மரத ஸ்துரீயம்**<br>
**ஜபத்யாத்யாய மாதராத்**<br>
**ததப்யசா ததுஷ்டாத்மா**<br>
**ந த்வந்த்வைரபி பூயதே"**

அதனால் அவன் தூய்மையடைந்து, இன்ப துன்பங்களிலும் தட்பவெட்பங்களிலும் சம புத்தியுடன் இருந்தான். ஒரு சமயம் மகாத்மாக்களைத் தரிசிக்கும் எண்ணத்துடனும் பேராவலுடன் பயணத்தைத் தொடங்கினான், வழியில் இரண்டு இலந்தை மரங்களின் கீழ் அமர்ந்தவாறு பாராயணம் செய்தான். பிறகு அங்கிருந்து புறப்படும்போது, கீழே விழுந்த இரண்டு இலந்தைப் பழங்களைத் தன்னுடன் எடுத்துச் சென்றான்.

பிறகு 5 நாட்களுக்குள் அந்த இரண்டு இலந்தை மரங்களும் காய்ந்துவிடவே, அவற்றின் உயிர்ப்புச் சக்திகள் முற்பிறவி அறிவுடைய இரண்டு பிராம்மணப் பெண்களாக ஓரிடத்தில் பிறந்தனர். பரதன் ஒருநாள் அப்பெண்களின் வீட்டிற்குச் சென்றான். அவர்கள் பரதனை அர்ச்சித்து அவன் கட்டளைக்கு இணங்கித் தமது கதைகளைக் கூறலாயினர்.

"மகானே1 முன்பொருகால் கோதாவரி ஆற்றங்கரையில் சின்னபாவம் என்ற தீர்த்த ஸ்தலத்தில் 'ஸத்யதபன்' என்ற யோகி ஒருவன் கடுந்தவத்தில் ஈடுபட்டிருந்தான். அவனது தவத்தால் தன்பதவிக்கு இடையூறு நேர்ந்து விடுமோ என்றெண்ணி இந்திரன் அப்சர ஸ்தீரீகளாகிய எங்களை, தவத்திற்கு இடையூறு செய்திட அங்கு அனுப்பினான். இந்திரனின் கட்டளைப்படி நாங்கள் அங்கு சென்று பாடி ஆடினோம், அதனால் சினம் கொண்ட முனிவர், 'கங்கைக் கரையில் இரண்டு இலந்தை மரங்களாகும் படி சபித்தார். அம்முனிவரிடம் எங்களுக்கு இரக்கம் காட்டியருளுமாறு தீனமாக வேண்டினோம். அவரும், 'பரதன் என்னும் மகான் உங்களிடத்திற்கு வரும் வரை நீங்கள் இவ்வுருவிலேயே இருப்பீர்' பின்னர் முற்பிறவி அறிவுடையோராய் மானுடப் பிறவி எடுத்துப் படிப்படியாய் தேவர்களாவீர்' என்று கூறினார். சாபத்தால் இலந்தை மரங்களாக இருந்த எங்களிடத்திற்கு முன்பு தாங்கள் வந்து தங்கி கீதையின் நான்காம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்தீர்கள். அதனால் எங்களது சாபம் நீங்கியது. எங்களை மீட்ட உங்களுக்கு எங்கள் நன்றி' என்று வனங்கி நின்றனர். அப்போதிருந்து கீதையின் நான்காம் அத்தியாயத்தை நாள்தோறும் ஜபித்தபடி சுகமாக இருந்தனர்.

கீதையின் 4ஆம் அத்தியாயப் பலன் மரம், செடி, கொடிகளும் துன்பம் நீங்கி கடைத்தேறுதல்.

**5. ஐந்தாம் அத்தியாயத்தின் பலன்:** மத்திர நாட்டில் புருகுத்சம் எனும் நகரம் ஒன்று உளது. அந்த நகரில் பிங்களன் எனும் அந்தணன் வசித்து வந்தான். அவன் தன்

குலத்தொழிலாகிய வேதம் ஓதுதல், முதலிய நற்செயல்களைக் கைவிட்டு, சங்கீதம், நாட்டியம் பயின்று அரசவையில் வேலைக்குச் சேர்ந்தான். அவனுக்குத் தாழ்ந்த குலத்தில் பிறந்த அருணா என்ற மனைவி இருந்தாள். அவள் மற்றொருவனிடம் மனத்தைப் பறிகொடுத்தாள். தனது விரும்பத்தகாத கேளிக்கைகளுக்கு பிங்களன் இடையூறாக இருப்பான் என்றெண்ணி ஒருநாள் அவன் மண்டையை அடித்து நொறுக்கிக் கொன்றுவிட்டாள். அவனது சடலத்தைப் பூமிக்கடியில் புதைத்தும் விட்டாள், அவளும் தனது தீய ஒழுக்கத்தால் “பகந்தரம்' எனும் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டாள். கொல்லப்பட்ட பிங்களன் ஒரு காட்டில் கருடனாகப் பிறந்தான், அவன் மனைவி கிளியாகப் பிறந்தாள். முற்பிறவியில் ஏற்பட்ட பகையால் அவ்விரண்டும் எப்போதும் சண்டையிட்டுக் கொண்டே இருந்தன. ஒருநாள் சண்டையில் முன்பே இறந்து போன ஒரு ரிஷியின் மண்டை யோட்டில் நிரம்பிருந்த தண்ணீரில் விழுந்து இறந்தன. யமதூதர்கள் அவர்களை எமனிடம் அழைத்துச் சென்றனர். எமன் அவர்களை விடுதலைச் செய்து மேல் உலகங்களுக்குப் போகச் சொன்னார். அதைக்கேட்ட அத்தம்பதியர், 'பல பாவங்களைச் செய்த எங்களுக்கு இந்த உயர்நிலைகிடைக்கக் காரணம் என்ன? என்று வினவினர். எமன், 'தம்பதியரே! கங்கைக் கரையில் 'வடுஉ 'எனும் ஞானி ஒருவன் இருந்தான். அவன் கீதையின் 5ஆம் அத்தியாயத்தை நாள் தோறும் பாராயணம் செய்து கொண்டு இருந்தான். அதனால் புனிதனாகி பரம்பொருளை அடைந்தனன்.

**“கீதானாம் பஞ்சமாத்யாய மாவர்த்தயதி ஸர்வதா**
**தேன புண்யேன பூதாத்மா யயௌ பிரஹ்ம சநாதனம்“**

அம்முனிவரின் மண்டையோட்டில் விழுந்து இறந்ததால், நீங்களும் தூய்மையடைந்தீர்கள். எனவே உங்களுக்கு விருப்பமான மேல்உலகிற்குச் செல்ல உத்தரவு தருகிறேன் என்று கூறினான் பிறகு அவர்களிருவரும் விமானத்திலேறி வைகுந்தம் சென்றடைந்தனர். இவ்வாறு கீதையின் 5ஆம்

அத்தியாயத்தின் தொடர்பினால் பறவைகள் கூட கடைத்தேறின.

**பலன்:** குற்றங்களிலிருந்து விடுதலை, பசு, பறவைகள் கூடக் கடைத்தேறுதல்.

**6. ஆறாம் அத்தியாயத்தின் பலன்:** கோதாவரி நதிக் கரையில் 'பிரதிஷ்டானம்' என்ற நகரம் இருந்தது. அந்நகரத்தை தர்மவான் ஆகிய 'ஜானச்ருதி' என்ற அரசன் ஆண்டு வந்தான், அவ்வரசனின் கடமைப்பற்றுக்கும், அவன் ஆற்றிவந்த நற்செயல்களுக்கும் மெச்சி, தேவர்கள் அவனுக்கு அருள் செய்ய அரச மாளிகையை நோக்கி வந்து கொண்டிருந்தனர். நகரத்தை நெருங்கும் போது 'பத்ராஸ்யன்' முதலான அன்னங்கள் ஏனையவற்றைக் காட்டிலும் தாழ்வாகப் பறந்தன, அதனைக்கண்ட மற்றைய அன்னங்கள், "வேகமாகப் பறந்து ஒளிபொருந்திய ஜானஸ்ருதி மன்னன்பால் அடக்கமின்றி நடந்து கொள்ளலாமா?" என்று கேட்டன. மெல்லப் போகுமாறு அறிவுறுத்தின. பிரம்ம ஞானியாக ரைக்வன் முன்னால் இந்த அரசனின் ஒளி எம்மாத்திரம்? என்று அன்னங்கள் திருப்பிக் கேட்டன. அவ்வுரையாடலை தன் அரண்மனை மேன்மாடத்திலிருந்து கேட்ட ஜானஸ்ருதி, ரைக்வனை தேடி அழைத்து வருமாறு தன் தேர்ப்பாகனுக்குக் கட்டளையிட்டான். அரச கட்டளையை ஏற்றுப் புறப்பட்ட தேர்ப்பாகன் எல்லா க்ஷேத்ரங்களிலும் தேடி அலைந்து இறுதியில் காஷ்மீரில் மாணிக்கேஸ்வரர் ஆலயத்தின் வாயிலில் ஒரு வண்டியில் அமர்ந்திருந்த ரைக்வனை பார்த்தான். 'மகானே! தாங்கள் இங்கே இவ்வாறு இருப்பதற்குக் காரணம் என்ன? என்று வினவினான். அவர், 'யாம் எல்லா இச்சைகளையும் துறந்து விட்டோம். என்இயல்பை அறிய விரும்புவோர் இங்கேயே சில நாட்கள் தங்க வேண்டும்" என்று கூறினார். அதனைக்கேட்ட தேர்ப்பாகன் அரசனிடம் சென்று நடந்ததைச் கூறினான். அரசன் அவ்வைராக்கிய முனிவரை உடனே சென்று தரிசிக்கப் புறப்பட்டான், ஆயிரம் பசுக்களையும், பட்டாடைகளையும், முத்தாரங்களையும், தன்னுடன் எடுத்துச் சென்றான். ரைக்வ முனிவரிடம் சென்று

வணங்கி, தான் கொண்டு வந்தவற்றைப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டான். முனிவர் உடனே சினம் கொண்டார். 'என்னைப்பற்றி உனக்குத் தெரியாதா? நீகொண்டு வந்தவற்றை நீயே எடுத்து கொண்டு போ எனக்குத் தேவையில்லை" என்று கடுமையாகக் கூறினார். அரசன் அம்முனிவரின் திருவடிகளைப்பற்றி மன்னித்தருளுமாறு வேண்டி அவரது பெருமை தரத்தக்க வைராக்கியத்திற்குக் காரணம் வினவினான். அதற்கு ரைக்வமுனி நாள்தோறும் நான் கீதையின் ஆறாம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வதேயாகும்"

**"நீதானாம் ஷஷ்டமத்யாயம் ஜபாமி ப்ரத்யஹம் ந்ருப**
**தேனவை தேஜோ ராசிர்மே ஸுரானாமபி துஸ்ஸஹ"**

அதன் பிறகு நீண்ட நாட்கள் அரசன் ரைக்வ முனியைச் சேவித்து, ஆறாம் அத்தியாயத்தை அவரிடம் பயின்று, நாள்தோறும் படித்து, மோட்சத்தை அடைந்தார். கீதையின் ஆறாம் அத்தியாயத்தின் பலன் வீடுபேறு'.

7. ஏழாம் அத்தியாயம்: முன்பொருகால் பாடலீ புத்திரத்தில் 'சங்குகர்ணன்' எனும் அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் தன் குலத்தொழிலை அறவே விட்டுவிட்டு எப்போதும் பொருள் ஈட்டுவதிலேயே காலத்தைக் கழித்து வந்தான். அவன் ஒரு நாள் தன் சுற்றத்தினரும், நண்பர்களும் புடைசூழ வெளியூருக்குப் பயணமானான். வழியில் ஒரு பாம்பு தீண்டி மரணமடைந்தான். அவன் மீண்டும் பாம்பாகப் பிறந்தான். ஆயினும் முற்பிறவியின் பணத்தாசை அவனை விடவேயில்லை, தான் முற்பிறவியில் சேர்த்து வைத்திருந்த பணப்புதையலைக் காவல்காத்து வந்தான். ஒருநாள் இரவு அவனது புதல்வர்களின் கனவில் தோன்றி தான் அவர்களது தந்தை என்று தெரிவித்து, தான் புதையலைக்காத்து வரும் விஷயத்தைக் கூறினான். அவர்கள் மறுநாள் அதிகாலையிலேயே துயிலெழுந்து பணப்புதையல் இருக்குமிடத்தை அடைந்தனர். குறிப்பிட்ட இடத்தில் அகழ்ந்தெடுக்கத் தொடங்கினர். உடனே அந்த பாம்பு எழுந்து

தன் புதல்வர்களில் அவனுக்குச் செல்லப் பிள்ளையாகிய சிவன் என்பவனிடம் பேசத் தொடங்கியது. தன்னை இந்த இழிநிலையிலிருந்து காக்க வேண்டியது. அதற்கு கீதையின் 7ஆவது அத்தியாயத்தைப் பாராயணம் செய்வதே சிறந்த வழி என அறிவுறுத்தியது. புதல்வர்களும் 7ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்து தந்தையைக்கடைத் தேற்றினர்.

**'கீதா நாம சப்தமாத்யா மந்தரேன சுதாமயம்**
**ஐந்தோஹ் ஆம்ருத்யு நிராகரண காரணம்'**

அமுதம் போன்ற கீதையின் 7ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்தால், உயிர்களைப் பிறவிப்பிணி, மூப்பு, மரணம் ஆகிய துன்பங்களின்றும் விடுவிக்கும். சங்குகர்ணன் புதல்வர்கள் கீதையினை 7ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்ததால் அவர்களது தந்தைக்கு பாம்புப் பிறவி நீங்கி திவ்யத் தன்மை கிடைத்தது. சங்கு கர்ணனின் புதல்வர்கல் தந்தையின் செல்வத்தைத் தானம் செய்தும், நற்காரியங்களுக்குப் பயன் படுத்தியும், நன்னடத்தை கொண்டும் விளங்கினர். கீதையின் 7ஆம் அத்தியாயத்தை ஜபித்து கடவுள் ஞானத்தையும் வீடு பேற்றையும் அடைந்தனர். எனவே கீதையின் ஏழாம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வதால் மனிதர்கள் மட்டுமன்றி பித்ருக்கள், பாம்பு முதலிய ஊர்வனவும் வீடு பேற்றை அடையத் தகுதியுடையவராவர்.

கீதையின் ஏழாம் அத்தியாயத்தின் பலன் மனிதர்கள், பித்ருக்கள், ஊர்வனவும் கடைத்தேறுதல்.

8. 'எட்டாம் அத்தியாயத்தின் பலன்: தென் நாட்டில் 'ஆமர்தகம்' எனும் புகழ்பெற்ற நகரில் 'பாவசர்மா' என்னும் அந்தணன் வாழ்ந்து வந்தான், அவன் பல தகாத செயல்களைப்புரிந்து வாழ்வைப் பாழாக்கிக் கொண்டான். விலைமாது, மது, புலால் இவற்றிற்கு அடிமையாகி விட்டான். நாளடைவில் அவன் அஜீரண வியாதியால் பீடிக்கப்பட்டு இறந்து விட்டான். பனைமரக் கள்ளின் மேல் இருந்த மோகத்தால் பனைமரமாகப் பிறந்தான். 'குசீவலன்' என்னும் மற்றோர் அந்தணன் அறச்செயல்களை ஆற்றாது தானங்களை

அதிகமாகப் பெற்று வந்தான். இறுதிக் காலம் நெருங்கவே இறந்து விட்டான். மறுபிறப்பில் பிரம்ம ராக்ஷசனாகப் பிறந்தான். அவன் மனைவி 'குமதி'யும் பிரம்ம ராட்சசியாகப் பிறந்தாள். அவ்விருவரும் அப்பனைமரத்தடியில் அமர்ந்திருந்தனர், மனைவி கணவனை நோக்கி, 'நாம் எடுத்துள்ள இந்த பிரம்ம ராட்சச வடிவம் எப்படி நீங்கும்?' எனக் கேட்டாள். 'கடவுளை அறிவு, ஆன்மீகச் சிந்தனை யாலும், வினையின் மர்மத்தை உணர்வதாலும் நீங்கிவிடும்.' என்று கணவன் கருத்து தெரிவித்தான். இதைக் கேட்ட குமதி, 'பிரம்மம் என்றால் என்ன? ஆன்மா என்றால் என்ன? வினை என்றால் யாது? என்று வினாக்களைத் தொடுத்தாள், கீதையின் எட்டாம் அத்தியாயம் முதல் சுலோகத்தின் முதற்பகுதியாகிய, 'கிம்தத் ப்ரம்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம' என்பதன் பொருளைத் தன்னை அறியாமலேயே நினைத்தாள். கீதையின் அந்த வாக்கியத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே பனைமரமாக இருந்த பாவசர்மாவும், பிரம்ம ராட்சசனாக இருந்த குசீவலனும் தமது ராட்சத வடிவங்கள் நீங்கப் பெற்று பழையவடிவங்களை அடைந்தனர். நினைத்த மாத்திரத்திலேயே குசீவலன் மனைவி குமதியும் தனது பழைய உருவம் பெற்றாள், குசீவலன் தம்பதியர் அப்போது அங்கு வந்த விமானத்தில் ஏறி மேலுலகம் நோக்கிச் சென்றனர். பாவசர்மா அந்த பாதிச் சுலோகத்தை எழுதிவைத்துக் கொண்டான். காசிக்குச் சென்று அதை ஜெபித்துக் கொண்டும், மீண்டும் மீண்டும் அதன் பொருளை சிந்தித்துக் கொண்டும், விஷ்ணுவைத் தியானித்துக் கொண்டும் இருந்தான். அவனது ஜபதபங்களை மெச்சி விஷ்ணுபகவான் அவனுக்கு மோட்சத்தைக் கொடுத்தருளினார். அவனது மூதாதையர்களும் உயர்நிலையை யடைந்தனர்.

**ஜபந் கீதா அஷ்டமாத்யாய ஸ்லோகார்தம் நியதேந்த்ரியஹ**
**சந்துஷ்டவா நஹம் தேவீ ததீய தபஸா ப்ருசம்"**

இப்படி கீதையின் எட்டாம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வோருக்கு எல்லாக் குற்றங்களும் நீங்கப் பெற்று மோட்சத்தை அடைவார்கள்.

9. ஒன்பதாம் அத்தியாயத்தின் பலன்: முன்பு நர்மதை ஆற்றங்கரையில் 'மாஹிஷ்மதி' என்னும் நகரத்தில் மாதவன் என்ற அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் சிறந்த அறச் சிந்தனை உடையவனாகவும் சிறந்த வித்வானாகவும் இருந்தான். ஒரு சமயம் அவன் ஒரு வேள்வி செய்ய நினைத்து, ஆடு ஒன்றை பலியிட எண்ணி பிடித்து வந்தான். பலியிடும் சமயத்தில் ஆடு பேசத் தொடங்கியது. 'ஏ அந்தணனே! இந்த வேள்வியால் நிலையான பலனேதும் உனக்குக் கிடைக்காது. மேலும், உயிர்களைத் துன்புறுத்துவதால், எனக்கு நேரும் க்தியே உனக்கு நேரும்'' என்று அந்த அந்தணனிடம் கூறியது. அவ்வந்தணனின் வேண்டுகோளுக்கு இணங்கி ஆடு தன் முற்பிறவிக் கதையைக் கூறலாயிற்று. 'ஏ அந்தணனே! நானும் உன்னைப் போல் அந்தணர் குலத்திலேயே பிறந்தேன். என் மகன் நோய்வாய்ப்படவே, என் மனைவி தூண்டியதால், நோய் தீரும் பொருட்டு சண்டிகா தேவிக்கு ஆட்டை பலியாக்க் கொடுத்தேன். அந்த ஆட்டின் தாய் என்னையும் ஆடாகப் பிறக்குமாறு சாபமிட்டது. நான் பல இழி பிறவிகளையும் எடுத்து இப்போது இந்த ஆடாகப் பிறந்து பல துன்பங்களையும் அனுபவித்து வருகிறேன். "என்று கூறியது. அதைக்கேட்ட அந்தணன் ஆழ்ந்த கவலையுற்றான். நிலையான இன்பத்தை அடையும் வழியைக் கேட்டான் ஆடு பின்வருமாறு கூறியது. "முன்பு, குருக்ஷேத்ரம் என்னும் நகரில் இருந்த சந்திர சர்மா என்ற அரசன் ஒரு நாள் ஒரு நல்ல அந்தணனை வரவழைத்து சூரிய கிரகணத்தை முன்னிட்டு, க்ால புருஷ விக்ரகத்தை தானம் செய்தான். அந்த விக்ரஹத்திலிருந்து சண்டாளத் தம்பதியர் வெளிப்பட்டனர். தானம் பெற்ற அந்தணனைத் துன்புறுத்தத் தொடங்கினர். உடனே அந்த அந்தணன் கீதையின் 9ஆம் அத்தியாயத்தைப்பாராயணம் செய்யத் தொடங்கினான். அவ்வத்தியாயத்தின் ஒவ்வோர் எழுத்திலிருந்தும் விஷ்ணுவின் ஏவலர்கள் வெளிப்பட்டனர். அந்த சண்டாளத் தம்பதியினரை வெகு தூரத்திற்குத் துரத்தியடித்தனர். அரசன் வியந்தான் எந்த மந்திரத்தைச் செபித்து அந்த பயங்கரமான ஆபத்தைக் கடந்தீர்" என்று அந்தணனிடம் வினவினான்.

தான் கீதையின் ஒன்பதாம் அத்தியாயத்தைச் செபித்ததாகவும் கூறினாள். அதனால் எல்லா ஆபத்துக்களும், தானம் பெறுவதால் வரும் தோஷங்களும் நீங்கும் என்றான். அரசன் அந்தணனிடம் ஒன்பதாம் அத்தியாயத்தைப் பயின்று இருவரும் வீடுபேற்றை அடைந்தனர் . இதனை கேட்ட அந்தணனும் ஆட்டைக் கொல்வதை விட்டு விட்டு கீதையின் ஒன்பதாம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்துவந்தனன்.

**10. பத்தாம் அத்தியாயத்தின் பலன்:** காசி நகரில் 'தீரபுத்தி' எனும் அந்தணன் ஒருவன் புலன்களை அடக்கி சிறந்த இறை பக்தியுடையவனாய் இருந்தான். அவன் மிகவும் தூயபுத்தியுடைவனைகையால் அவன் எங்கு சென்றாலும் ஈசுவரனும் அவனுடன் சென்று கொண்டிருந்தார். அதனைப்பார்த்து 'ப்ருங்கிரிடன்' என்பவன் அவ்வாறு செய்வதற்குக் காரணம் சிவனிடம் கேட்டான். சிவன் கதையை தொடங்கினார். "முன்பொருகால் கைலாயத்தில், புன்னைவனத்தில், நிலா வெளிச்சம் நிறைந்த இரவில் ஒரு திண்ணையில் நான் அமர்ந்திருந்தேன். ஆகாயத்திலிருந்து ஒருகரிய நிறப் பட்சி என்னிடம் வந்து வணங்கியது. 'நீ யார்? உன் கதி என்ன என்று வினவினேன். பறவை, 'நான் பிரம்ம தேவனுடைய அன்னப்பறவை. சௌராஷ்டிர நாட்டில் உள்ள தாமரைக் குளத்திலுள்ள தாமரைத்தண்டுகளைச் சாப்பிட்டு விட்டு உயரப் பறக்க எழும்போது கீழே விழுந்து என் உடல் கறுத்துவிட்டது. எதனால் இவ்வாறு நேர்ந்தது என வியந்திருக்கையில் 'எழுக' என்ற ஒலி தாமரைப் பொய்கையிலிருந்து எழுந்தது. நான் அங்கு சென்று பார்க்கையில் ஒரு தாமரைச் கொடி என் கண்ணில் பட்டது. அந்தக்கொடி என்னிடம் பேசத் தொடங்கியது. நீ வானத்தில் பறந்தபடி என்னைக் கடந்து சென்றாய். அதன் விளைவாக உன் உடல் கறுத்துவிட்டது. நீயும் கீழே விழுந்து விட்டாய். என் முக நறுமணத்தை முகர்ந்து இப்போதே 24000வண்டுகள் திவ்ய உடல்களைப்பெற்று வானகம் சென்றன. முன்பு நான் ஒரு 'சரோஜ வதனை' என்ற அந்தணச்சிறுமி. திருமணத்திற்குப் பிறகு கணவனுக்குப் பணிவிடைகள் செய்வதில் காலம் கழித்து வந்தேன். ஒரு நாள் ஒருகிளிக்கு பாடம் சொல்லிக்கொண்டு

இருந்தேன், கணவருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளில் சிறிது தாமதமேற்பட்டதால் கணவர் சினம் கொண்டு நீயும் கிளியாகப் பிறப்பாய் எனச் சாபமிட்டார். நானும் ஒரு முனிவரின் வீட்டில் பிறந்தேன். அவர் தம் வீட்டில் தினந்தோறும் கீதையின் 10ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்து கொண்டிருந்தார். அதை நானும் நன்றாகக் கேட்டதன் மகிமையால் சில நாட்களில் கிளி உடல் நீத்து வானகத்தில் ஓர் அப்சரஸாகப் பிறந்து பத்மாவதி' எனும் பெயருடன் திருமகளுக்குத் தோழியாகும் பேறுபெற்றேன். ஒரு நாள் இந்த பொய்கையருகில் உலவிக் கொண்டிருக்கையில் துர்வாச முனிவரைக் கண்டுபயந்து உடனே தாமரைக் கொடியாக் உருப்பெற்றேன். துர்வாச முனிவர் இதைப்பார்த்து, 100ஆண்டு காலம் தாமரைக் கொடியாக இருக்கக்கடவாய் எனச் சாப மிட்டார். இப்போது உனக்கும் எனக்கும், சாபம் நீங்கும் காலம் வந்து விட்டது. இப்போது நான் கீதையின் 10 ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வேன். நீயும் அதனைக்கேள் என்று பாராயணம் செய்யத் தொடங்கியது. அதன் பலனாய் முக்தியடைந்தது. அந்தக் கொடிகொடுத்த தாமரை வேரை உன்னிடம் வந்து சேர்ந்தேன் என்று அன்னப் பறவை கூறியது. 'பிருங்கீஸ்வரனே! கீதையின் 10ஆம் அத்தியாயத்தைக் கேட்டதன் பலனால் அன்னப்பறவை அந்தணனாகப் பிறந்து முற்பிறவியின் பலனாய் தொடர்ந்து கீதையின் 10 அத்தியாயத்தை பாராயணம் செய்து வந்து தத்துவவித்தை யடைந்து ஜீவன் முக்தனாய் திகழ்கிறான்.

**தசமாத்யாய மாஹாத்ம்யாத் தத்வ ஞானம் சுதுர்லபம்**
**லப்தமேதேன முனினா ஜீவன் முக்திரியம் ததா**

எனவே அன்பின் மிகுதியால் அவனை எப்போதும் தொடர்ந்து கொன்டிருப்பேன்.

கீதை 10ஆம் அத்தியாயத்தின் பலன் பிரம்ம ஞானமடைதல்.

**11.** பதினொன்றாம் அத்தியாயப் பலன்: முன்பொரு நாள் 'பிரணீத' என்னும் ஆற்றங்கரையில் 'மேகங்கரம்' எனும்

நகரம் இருந்தது. விஷ்ணுபகவான் அந்நகரில் குடியிருந்து அந்நகர மக்களுக்கு எல்லா நலன்களையும் அருளிவந்தார். அந்நகரில் 'மேகலை' எனும் தீர்த்தமும் இருந்தது. அங்கு 'சுனந்தன்' எனும் அந்தணண் வேதசாஸ்திரங்களில் புலமை வாய்ந்தவனாகவும் நல்ல ஆசார சீலனாகவும் இருந்தான். அவன் கீதையின் 11ஆம் அத்தியாயத்தை விஷ்ணுவின் முன்னிலையில் தினந்தோறும் பாராயணம் செய்து கொண்டிருந்தான். அதனால் பிரம்ம ஞானம் ஏற்பட்டு ஜீவன் முக்தனாய்த் திகழ்ந்தான். ஒரு சமயம் தீர்த்தயாத்திரைக்குச் சென்றபோது, பலதீர்த்தங்களை தரிசித்துப் பரவசமடைந்து இறுதியில் திருமண மண்டமெனும் தீர்த்தத்தில் கிராமாதிகாரி காட்டிய இடத்தில் தங்கினான். மறுநாள் காலையில் எழுந்து பார்த்தால் நண்பர்கள் எவரும் தென்படவில்லை. இதற்குள் கிராமதிகாரி வந்து, 'மகானே1 இந்த ஊரில் மனிதர்களைச் சாப்பிடும் அரக்கன் ஒருவன் இருக்கிறான். மனிதர்களைத் துன்புறுத்தும் அவனை வேற்றூரில் இருந்து வருவோரை மட்டுமே உண்ணும்படி வேண்டிக்கொண்டு அதற்காகவே இந்த சத்திரத்தைக் கட்டினோம். உங்களைவிட்டு உங்களுடன் வந்த அனைவரையும் அவன் சாப்பிட்டிருப்பான். என்மகனையும் அவன் சாப்பிட்டு விட்டான். உங்களிடம் உலகியலுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒரு சக்தி இருப்பதால் நீங்கள் தப்பினீர்கள். என்மகன் எப்படி உயிர் பெறுவான் என்று கேட்டேன். கீதை 11ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்து மந்திரித்த ஜலத்தைத் தெளிப்பதால் என் அரக்கத்தன்மை நீங்குவதுடன் நான் உண்ட அனைவரும் உயிர் பெறுவார்கள் என்று அந்த அரக்கன் கூறினான். அதற்கு அத்தகைய சக்தி எவ்வாறு வந்தது என்று கேட்டேன். அவன் கூறலானான். வித்தவாணன் எனும் அந்தணன் கீதையின் 11ஆம் அத்தியாயத்தை தினந்தோறும் படித்து வந்தான். அவன் இறந்தபிறகு அவனது எலும்புத்துண்டை கவ்வியபடி ஒரு கருடன் பறந்து சென்று கொண்டிருந்தது. அந்த எலும்புத்துண்டு கைதவறி நீர்நிலையில் விழுந்தது. அதனால் அந்த தீர்த்தம் மகாதீர்த்தமாயிற்று. 11ஆம் அத்தியாயத்திற்கு

அத்தகைய மகிமை இருக்கின்றது என்று கூறிய அரக்க என்மகன் உயிர்பெற உங்களிடம் செல்லுமாறு கட்டளையிட்டான் என்று கூறி நிறுத்தினான், அவன வேண்டுகோளுக்கிணங்கி சுனந்தன் 11ஆம் அத்தியாயத்தை ஏழு முறை பாராயணம் செய்து மந்திரித்த நீரை அரக்க தலையில் தெளித்தான். உடனே அவ்வரக்கன்,அவனா உண்ணப்பட்ட மனிதர்களும் உயிர் பெற்று எழுந்தனர்.

நல்லோர் நட்பை நாடுமாறும், கீதையின் 11ஆ அத்தியாயத்தைப் பாராயணம் செய்யுமாறும், கண்ணபிரான எப்போதும் நினைத்திருக்குமாறும் அதனால் எல்ல நன்மைகளும் வந்தடையும் என்றும் தந்தையிடம் கூ கிராமாதிகாரியின் மகன் மேலுலகம் சென்றான்.

**நிஷ்கல்மஷதயா சைனம் ப்ராபுஸ்தே பரமம் பதம்**
**ஏகாதசஸ்ய சாமர்த்யா தத்யாயஸ்ய பவிஷ்யதி**

பதினோராம் அத்தியாயத்தின் பலன் எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலை, பரம்பொருள் அடைதல்.

**12. பன்னிரெண்டாம் அத்தியாயத்தின் பலன்** தென்னாட்டில் 'கோல்காபுரம்' எனும் மாநகர் திருமகள் சத நிலைகொண்டு இருந்ததால் எல்லாச் செல்வங்களையு கொண்டு திகழ்ந்தது. அங்கு ஒரு அரச குமாரன் வந் திருமகளைபக்தியுடன் துதித்தான். அவன்பக்தியை மெச்சி திருமகள் வரம் கேட்குமாறு பணித்தான். அவ்வரச குமாரன் 'தாயே! என் தந்தை 'பிருஹத்ரதன்' அசுவமேதயாக செய்கையில் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டார். அவ உடல்கெடாது எண்ணை திராவகத்தில் பத்திர படுத்தியுள்ளேன். வேள்விக் குதிரை எங்கோ ஓடிவிட்டது எங்கு தேடியும் கிடைக்கவில்லை. அதனைக் கிடைக்க செய்தால் வேள்வியை நிறைவு செய்து தந்தையின் கடனை தீர்த்துக் கொள்வேன். இதனைக் கேட்ட திருமகள், எ கோயில் வாயிலில் உள்ள சித்தசமாதி என்ற அந்தணன் உ விருப்பத்தை நிறைவேற்றிட வல்லவன் என்றாள் அரசகுமாரனும் சித்த சமாதியிடம் சென்றான். அவ்வந்தண

தன் மந்திர வலிமையால் தேவேந்திரன் அபகரித்துச் சென்றிருந்த அசுவமேதக் குதிரையைதக் கொண்டு வருமாறு கட்டளையிட்டான். அவன் ஆணைப்படி தேவர்கள் கொணர்ந்தனர். அரசகுமாரன் சித்த சமாதியின் ஆற்றலை வியந்து தன் தந்தையை உயிர்ப்பிக்குமாறு வேண்டினான். அந்தணன் அரசன் உடல் இருக்குமிடம் சென்று மந்திரிதத்து நீரைமேல் தெளிக்கவே அரசன் உயிர்த்து எழுந்தான்.

**கீதாநாம் த்வாதசாத்யாயம் ஜபாம்யஹ மதந்திரிதஹ**
**தேன சக்திரியம் ராஜன் யயா ப்ராப்தோஸி ஜீவிதம்.**

பிராம்மணன் 12ஆம் அத்தியாயத்தைப் படித்ததன் பலனால் இத்தகைய அபூர்வ ஆற்றல் பெற்றான்.

12ஆம் அத்தியாயத்தின் பலன் திவ்விய சக்திகளைப் பெறுதலும் மோட்சத்தை அடைதலுமாம்.

13. பதிமூன்றாம் அத்தியாய பலன்.. தென் நாட்டில் துங்கபத்திரை நதிக்கரையில் ஹரிஹரபுரம் என்ற நகரில் 'தர்மதீட்சன்' எனும் அந்தணன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி துராசரை. அவள் கணவனைத் தினமும் கடுமையாக வைதபடி தான்தோன்றியாக இருந்தாள். ஒழுக்கங்கெட்ட அவள் ஓரிரவு நகருக்கு வெளியே காட்டில் முன்பே நிர்ணயித்தும் கொண்ட ஓரிடத்தில் கள்ளக் காதலர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். அவர்கள் எவரும் வராததால் சிற்றின்ப வேட்கை மிகுந்து, அங்குமிங்கும் அலைந்து வெறுப்புடன் ஓரிடத்தில் அமர்ந்தாள். ஒருபுலி அவள் மேல் பாய்ந்து உடலைக் கிழித்துக் கொன்றது. இறந்த பிறகு பாவச் செயல்களின் பலனாக பல கற்பங்கள் பயங்கர நரகத்தை அனுபவித்து பூலோகத்தில் சண்டாளப் பெண்ணாகப் பிறந்தாள்.

ஒரு நாள்அவள் தன் ஊரிலுள்ள 'ஜ்ரும்பகாதேவியின் ஆலயத்திற்குச் சென்றாள். அங்கு வாசுதேவன் என்ற அந்தணன் 13ஆம் ஆத்தியாயத்தின் பாராயணம் செய்து கொண்டிருந்தான். அதனைக் கேட்டவுடன் அவள் தன்

சண்டாள உடலை விட்டு திவ்விய வடிவம் கொண்டு மேலுலகம் சென்றாள்.

**'கீதா த்ரயயோதசாத்யாய**
**முத கிரந்த மரா ரதம்**
**ததஹ் தத் ஸ்ரவணாதேவ**
**முக்த்வா ஸ்வபச விக்ரஹாத்"**

*14. பதினான்காம் அத்தியாயத்தின் பலன்: முன்பு, காஷ்மீர் நாட்டில் சௌரிய வர்மன் எனும் அரசன் வாழ்ந்து வந்தான். அவன் தனது நண்பனும் சிங்கள நாட்டு வேந்தனும் ஆகிய விக்கிரம வேதாளனுக்கு இரண்டு வேட்டை நாய்களைசக் காணிக்கையாகக் கொடுத்தான். ஒரு நாள் அந்த இரு நாய்களையும் அழைத்துக் கொண்டு தன் நண்பர்களுடன் விக்ரம வேதாளன் வேட்டைக்குச் சென்றான். காட்டில் ஓரிடத்தில் விரைந்தோடும் முயல் ஒன்றைப் பிடிப்பதற்காக வேட்டை நாயை ஏவினான், அந்த நாய்கள் இரண்டும் வேகமாக ஓடி ஒரு முனிவரின் ஆசிரமத்தில் புகுந்தன.*

*அந்த ஆசிரமத்தில் 'வச்சன்' என்னும் சிறந்த முனிவர் வாழ்ந்து வந்தார். அவர் கீதையின் 14 ஆம் அத்தியாயத்தை எப்போதும் பாராயணம் செய்து வந்தார். சீடர்களுக்கும் அதையே போதித்துக் கொண்டு வந்தார். அந்த ஆசிரமத்தில் சிங்கம் புலி முதலிய கொடூர வன விலங்குகளும் தம் இயல்பை விட்டு ஏனைய விலங்குகளுடன் ஆனந்தமாக இருந்தன. அந்த முனிவரின் சீடன் நீர் கொணர்ந்து அவரின் கால்களைக் கழுவிய இடத்தில் பூமி சற்று ஈரமாக இருந்தது. ஓடிக் கொண்டிருந்த நாயும் முயலும் களைப்புடன் அந்த சேற்றில் விழுந்தன. அந்த புனிதமான ஜலத்தின் ஈரம்பட்ட உடனேயே நாயும் முயலும் தம் உடல் நீங்கி திவ்ய உடல் தாங்கி வானவூர்தியில் ஏறி வானகம் சென்றன. அதைப்பார்த்து வியந்த விக்ரம வேதாள வேந்தன், வியந்து முனிவரின் சீடனிடம் இவ்வாறு சொன்னான் 'முன்பு மகாராஷ்டிர நாட்டில்' பிரத்யுதகம்' எனும் பட்டிணத்தில் தீயவனான*

கேசவன் என்னும் அந்தணனும் அவன் ஒழுக்கமில்லா மனைவி 'விலோபன' இருவரும் வாழ்ந்து வந்தான். விபச்சாரியான அவளை கேசவன் ஒரு நாள் கோபத்தில் அடித்துக் கொன்றுவிட்டான். பெண்ணைக் கொன்ற பாவத்தால் அவன் முயலாகப் பிறந்தான். அவன் மனைவி பெண்நாயாகப் பிறந்தாள். இப்போது இங்கு வந்த நாயும் முயலும் அவர்கள் தான். இந்த ஆசிரமத்தில் 'வச்சன்' என்னும் யோகி கீதையின் 14ஆம் அத்தியாயத்தை தினந்தோறும் பாராயணம் செய்து வருகிறார். எனவே அவரது புனிதமான கால் நீர் பட்டவுடன் அந்த விலங்குகளும் புனித மடைந்து விண்ணகம் சென்றன என்றான்.

**சதுர்தசம் து அத்யாயம்**
**ஜபாமி ப்ரத்யஹம் ந்ருப**
**மதீய சரணாம்போஜ ப்ரக்ஷாலன ஜலேலுடன்**
**சசஹ் த்ரிதிவ மா பன்னஹ் சுனக்யா ஸஹ பூபதே**

சிஷ்யனின் சொற்களைக்கேட்டு அன்று முதல் அரசனும் கீதையின் 14ஆம் அத்தியாயத்தைப் படித்து நாளடைவில் பரமன் நிலையை அடைந்தான்.

14ஆம் அத்தியாயத்தால் தோஷம் நீங்கும்; உயர்நிலை கிடைக்கும்.

**15. பதினைந்தாம் அத்தியாயம் பலன்:** முன்பு 'கௌட' நாட்டை நரசிம்மன் எனும் அரசன் ஆண்டுவந்தான், அவனிடம் 'சரசபேரன்' எனும் படைத்தலைவன் இருந்தான். அவனுக்கு அரசனைக் கொன்று தானே அரசனாக வேண்டுமென்ற எண்ணம் உதித்தது. ஆனால் அவன் எண்ணம் ஈடேறாமலேயே அவன் நோய் வாய்ப்பட்டு இறந்து போனான். பிறகு சிந்து நாட்டில் ஒரு குதிரையாகப் பிறந்தான்.

ஒரு வியாபரி அந்தக் குதிரையை 'நரசிம்மன்' அரசனிடமே விற்றான். அரசன் ஒருநாள் அந்தக் குதிரையின் மீதேறி காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். அதனை ஒரு மரத்தில் கட்டிவிட்டு வழியில் தாகம் எடுக்கவே தண்ணீரைத் தேடிச்

சென்றான். களைத்து ஒரு கல்லின் மேல் அமர்ந்தான். அப்போது ஒரு பனை ஓலைத் துண்டு காற்றில் மிதந்து வந்தது. அந்த ஒலையில் எழுதப்பட்டிருப்பதை அரசன் உரக்கப் படித்தான். அது கீதையின் 15ஆம் அத்தியாயத்தின் சுலோகத்தின் ஒரு பாதியாகும். அதைக் கேட்டவுடன் மரத்தில் கட்டப்பட்டிருந்த குதிரை திவ்வியவடிவம் கொண்டு வானகம் சென்றது. பிறகு அரசன் அருகில் ஒரு ஆசிரமம் இருப்பதையறிந்து அங்கு சென்று குதிரை உருமாறிச் சென்றதற்குக் காரண மென்ன என வினவினான். அங்கிருந்த முனிவர் கீதையில் 15ஆம் அத்தியாயத்தின் ஒரு சுலோகத்தின் பாதியைக் கேட்டதன் விளைவேயாகும் என்றார். அன்றிருந்து அரசனும் 15ஆம் அத்தியாயத்தை பக்தியுடன் படித்து, தூய நெஞ்சினனாய் மோட்சத்தை அடைந்தான்.

பாவங்களில் இருந்து விடுதலை, மோட்சத்தைப் பெறுதல் பலன்.

**16. பதினாறாம் அத்தியாயத்தின் பலன்:** முன்பு கூர்ஜர நாட்டில் சௌராஷ்டிரம் எனும் நகரில் 'கட்கபாஹு' என்னும் அரசன் இருந்தான். அவனிடம் மிகவும் வலிமை வாய்ந்த 'அரிவர்த்தனம்' என்ற யானை ஒன்று இருந்தது. அது ஒரு நாள் சங்கிலிகளை அறுத்துக் கொண்டு ஊர் மக்கள் மேல் பாய்ந்தது. மக்கள் அனைவரும் பயத்தால் நடுங்கினர். யானைப் பாகனும் அரசனும் பலவாறு முயன்றும் யானை கட்டுப்படவில்லை. 'சரசன்' என்னும் அந்தணன் நீராடி கீதை சுலோகங்களை ஜபித்த வண்ணம் அவ்வழியே சென்று கொண்டிருந்தான். மக்கள் தடுத்தும் கேளாமல், துணிச்சலுடன் மத யானையை நெருங்கிச் சென்று அதன் உடலை வருடத் தொடங்கினான். யானை அடங்கிப் போயிற்று. அரசன் வியப்புற்று அந்தணனை நெருங்கி அவனது பேராற்றலுக்குக் காரணம் வினவினான். அவன் 'அரசே! நான் நாள் தோறும் கீதை 16ஆம் அத்தியாயத்தின் சில சுலோகங்களை வாசித்து வருகிறேன் அதனால் எனக்கு இந்த சித்திகள் கிடைத்தன 'என்று கூறினான்.

**கீதாயாஹ் ஷோடசோத்யாயஹ்**
**ஸ்லோகான் கதிபயாநஹம்**
**ஜபாமி ப்ரத்யஹம் பூப**
**தேனைதாஹ் ஸர்வஸித்தயஹ**

அரசன் அந்தணனைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று சிறப்பித்தான். அந்தணனிடம் 16ஆம் அத்தியாயத்தை உபதேசமாகப் பெற்றான். அதன் மகிமையால் அந்தணன் அடைந்த சித்திகளை அரசனும் பெற்றான். கீதையின் 16ஆம் அத்தியாயத்தின் பலன் பல பராக்கிரமங்களை அடைதல், மோட்சத்தைப் பெறுதல்.

17ஆம் அத்தியாயத்தின் பலன்: முன்பு ஒருகாலத்தில் 'கூர்ஜர' நாட்டைக் 'கட்கபாஹு' என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் மகனிடம் 'துச்சாசனன்' என்னும் ஏவலன் ஒருவன் இருந்தான். ஒருநாள் அவன் மதயானையின் மேலேறிச் சென்று கொண்டிருந்தான். இடைவழியில் அந்த யானை அவனைக் கீழேதள்ளிக் கொன்று விட்டது. பின் அவன் சிங்கள நாட்டு அரசனாகிய 'ஜெயதேவன்' சமஸ்தானத்தில் யானையாகப் பிறந்தான், ஜயதேவன் அந்த யானையைத் தன் நண்பனாகிய கட்கயாஹுவிற்கே காணிக்கையாகக் கொடுத்தான். கட்கபாஹு அந்த யானையை ஒரு கவியரசனுக்குச் கொடுத்தான். அந்தக் கவியரசன் அந்த யானையை மாளவ நாட்டு மன்னனுக்கு விற்றுவிட்டான். சில நாட்கள் சென்ற பிறகு யானை நோய் வாய்ப்பட்டு மிகுந்த துன்பமடைந்தது. நோய் குணமாவதற்கு அரசன் பல சிகிச்சைகளைச் செய்தான். ஆயினும் நோய் குணமடையவே இல்லை. ஒரு நாள் அரசன் அதைப் பார்க்க வந்தபோது யானை இவ்வாறு கூறியது, 'அரசே! மருந்துகளால் என் நோய் தீராது. கீதையின் 17ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வோரை இங்கே அழைத்து வந்தால் மட்டுமே என் நோய் தீரும்" என்றது.

**கீதா ஸப்ததசாத்யா ஜாபகம் த்விஜமானய**
**தேநாயம் மாமகோ ரோகஹ் சாம்யத்யத்ர ந ஸம்சயஹ.**

அரசனும் அந்தணன் ஒருவனை வரவழைத்து 17ஆம் அத்தியாயத்தைப் படிக்கச் செய்தான். மந்திரிக்கப்பட்ட நீரை யானையின் மேல் தெளிக்கச் செய்தான். உடனே .யானை நோய் நீங்கி திவ்ய வடிவம் பெற்று மோட்சத்தை அடைந்தது. அதைப்பார்த்த மாளவ மன்னன் நரவர்மாவும் 17ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்த வண்ணம் மிகச்குறுகிய காலத்திலேயே மோட்சத்தை அடைந்தான்.

கீதை 17ஆம் அத்தியாயத்தின் பலன், சகல வியாதிகளும் நீங்குதல், மோட்சம் அடைதல்.

*18. 18ஆம் அத்தியாய பலன்:* மேருமலைச் சிகரத்தில் 'அமராவதி' நகரில் தேவேந்திரன் 'சசிதேவியுடன்' ஒரு சமயத்தில் வீற்றிருந்தான். தேஜஸ் மிகுந்த பரமபுருஷன் ஒருவனை விஷ்ணுவின் ஏவலர்கள் அங்கே அழைத்து வந்தனர். தேவேந்திரன் அவனது பேரொளியால் கண்கூசி அரியணையிலிருந்து கீழேவிழுந்து விட்டான். விஷ்ணுவின் ஏவலர்கள் அந்த ஒளி பொருந்திய புருஷனை அரியணையில் அமர்த்தி மகுடம் சூட்டினர். மங்கள வாத்தியங்களை வாசித்துப் பாடல்களை பாடத் தொடங்கினர். தேவேந்திரன் அந்த அதிசயத்தைப் பார்த்து வியந்தான். யக்ஞம். யாகம், தானதர்மங்கள், புண்ணியத்தலங்களை தரிசிப்பது போன்ற எவற்றையுமே செய்யாத இவனுக்கு இத்தகைய மகோன்தை நிலை எவ்வாறு கிடைத்தது என்னும் ஐயப்பாடு இந்திரனை வாட்டியது. உடனே இந்திரன் வைகுந்தம் சென்றான். விஷ்ணுவிடம் விவரத்தைக் கேட்டான். கீதையின் 18ஆம் அத்தியாயத்தை அவன் எப்போதும் படித்ததால் அவனுக்கு அப்பதவி கிடைத்தது என விஷ்ணுபகவான் கூறினார்.

**ஜபத்யஷ்டாதசாத்யாயே**
**கீதாநாம் ஸ்லோகபஞ்சகம்**
**யத்புண்யேன ச ஸம்ப்ராப்தம்**
**தவ ஸாம்ராஜ்யமுத்தமம்.**

அதனைக் கேட்டவுடனே தேவேந்திரன் ஓர் அந்தண வேடம் பூண்டு கோதாவரி ஆற்றங்கரைக்கு வந்து, அங்கு, 18ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்யும் ஓர்

அந்தணனுக்குப் பணி விடைசெய்து, கீதையின் 18ஆம் அத்தியாயத்தை அவனிடம் பயின்றான். இந்திரபதவி உட்பட அனைத்தையும் துச்சமெனக் கருதி இறுதியில் விஷ்ணு பகவானை அடைந்தான்.

எனவே 18ஆம் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வதால் எல்லாவேள்விகளின் பலனும், புண்ணியச் செயல்களின் பலனும், மோட்சமும் கிடைக்கும்.

இப்படியாகக் கீதை அத்தியாயங்களின் மகிமையை முன்பு திருமகளுக்குத் திருமால் கூறினார். பிறகு பார்வதி தேவிக்குப் பரமசிவன் புகன்றார்.

## கீதையின் பலவித வடிவங்கள்
### (POLYMORPHISM)



# கீதையின் சுருக்கம்

பகவத் கீதையில் ஒவ்வொரு அத்தியாயத்திலும், அத்தியாயத்தின் மையப் பொருளைத் தெரிவிக்கும், சாரத்தை வடித்துத் தரும் மிக முக்கியமான ஒரு சுலோகத்தை எடுத்து அதன் பொருளுடன் இங்கே தந்துள்ளோமன். கீதையின் சாரத்தை அறிய விரும்புவோர்க்கு இது மிகவும் பயன்படும்.

**1. ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச**
**கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம், போகைர் ஜீவிதேன வா**
**(1-32)**

கண்ணபிரானே! நான் வெற்றியையோ, ராஜ்யத்தையோ உலகியல் இன்பங்களையோ கோரமாட்டேன். நமக்கு ராஜ்யம், போகங்கள், வாழ்க்கையினாலே என்ன பயன்?

**2. ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்**
**நாயம் பூத்வா பவிதா வா ந பூயஹ**
**அஜோ நித்யஹ் ஸாஸ்வதோயம் புராணோ**
**ந ஹன்யதே ஹன்யமானே சரீரே (2-20)**

இந்த ஆன்மாவிற்கு பிறப்பு இல்லை, அது ஒரு சமயத்தில் இருந்து புதிதாக மறுபடியும் வருவது மில்லை. அது பிறப்பில்லாதது, அழிவில்லாதது, நிலையானது, மிகவும் தொன்மையானது. சரீரம் கொல்லப் பட்டாலும் அதனைக்கொல்ல முடியாது.

**3. யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரபதோ(அ)ர்ஜுன**
**கர்மேந்த்ரியைஹ் கர்மயோகமஸக்தஸ்ஸ விசிஷ்யதே (3-7)**

அர்ஜுனனே! எவனொருவன் மனத்தால் புலன்களை அடக்கி, வினைப்புலன்களால் (கர்மேந்திரியங்கள்) கர்மயோகத்தை மிகுந்த ஈடுபாட்டுடன் கடைபிடிப்பானோ அவனே மிகச் சிறந்தவன்.

**4. ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவி ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம்**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதினா. (4-24)**

ஹோமமந்திற்குத் தேவையான ஹவிஸு (அன்னம்) ஹோமாக்னி, ஹோமம் செய்பவன் ஆகிய எல்லாவற்றையும் பிரம்மமாக அறிபவன் அத்தகைய சித்தம் ஒருமித்த தன்மையால் பிரம்மத்தையே அடைவான்.

**5. ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி யஹ**
**லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா (5-10)**

எவனொருவன் எல்லா செயல்களையும் இறைவனிடம் ஒப்படைத்து பலன் கருதாமல் செய்வானோ, அவன் பாவத்தால் தீண்டப்படாமல் நீர் ஒட்டாத தாமரை போல் இருப்பான்.

**6. சனைஹ சனைருபரமேத்புத்யா த்ருதிக்ருஹீதயா**
**ஆத்மஸம்ஸ்தம் மனஹ க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத் (6-25)**

துணிவுடன் மனத்தை மெல்லமெல்ல வெளி விஷயங்களில் ஈடுபடாமல் செய்ய வேண்டும். அத்தகைய மனத்தை ஆன்மாவில் நிலைபெறச் செய்து காட்சிப் பொருள்களை நினைக்காதிருக்க வேண்டும்.

**7. மத்தஹ பரதரம் நான்யத்கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய**
**மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ. (7-7)**

அர்ஜுனனே என்னை விட வேறுபட்டது இவ்வுலகில் வேறொன்றும் இல்லை. இவ்வுலக மனைத்துமே நூலில் மணிகளைப்போல என்னுள் கோர்க்கப்பட்டிருக்கிறது.

**8. ஓமிதி ஏகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாமனுஸ்மர**
**யஹ் ப்ரயாதி த்யஜன்தேஹம் ஸ யாதி பரமாம்கதிம் (8-13)**

எவனொருவன் என்னைப் பரபிரம்மாவைக் குறிக்கும் 'ஓம்' என்ற அக்ஷரத்தை உச்சரித்தபடி என்னை தியானித்தபடி

உயிரை விடுகிறானோ அவன் அனைத்திலும் சிறந்ததான வீடுபேற்றை அடைவான்.

**9. அனன்யாஸ் சிந்தயந்தோ மாம் யே ஜனாஹ் பர்யுபாஸதே தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் (9-22)**

எவனொருவன் வேறெவற்றின் மீதும் பற்றில்லாமல் எப்போதும் என்பால் நிட்டையுடன் இருக்கின்றானோ அவனது யோகக்ஷேமங்களை நானே கவனித்துக் கொள்கிறேன்.

**10. யத்யத்விபூதி மத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா தத்ததேவா வகச்ச த்வம் மம தேஜோம்ச ஸம்பவம் (10-41)**

எந்த பொருளாயினும் ஐசுவரியத்துடனும் மிகுந்த ஒளிபொருந்தியதாகவும், மிகுந்த உற்சாத்துடன் கூடியிருக்குமோ அவை என் ஒளி அம்சத்திலிருந்து வெளியாயிற்று என்பதை நீ உணர்வாயாக!

**11. மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்தஹ் ஸங்கவர்ஜிதஹ நிர்வைரஹ் ஸர்வபூதேஷு யஹ் ஸ மாமேதி பாண்டவ. (11-55)**

அர்ஜுனனே ! எனக்குப் பிரியமானவற்றை எவன் செய்வானோ, எவன் என்னையே இறுதியில் அடைய வேண்டிய பொருளாகக் கருதியிருப்பானோ, எவன் என்பால் பக்தியுடன் இருப்பானோ, எவன் காட்சிப் பொருள்களில் ஈடுபாடின்றி எல்லா உயிர்களிடத்தும் பகைமை இன்றி இருப்பானோ அப்படிப் பட்டவன் என்னையே அடைவான்.

**12. ஸந்துஷ்டஹ் ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சயஹ மய்யர்ப்பிதமனோ புத்திர் யோ மத்பக்தஹ் ஸ மே ப்ரியஹ (12-14)**

எப்போதும் சந்தோஷமாக இருப்பவன், யோகி, மனத்தை அடக்கி ஆள்பவன், அசைக்க முடியாத நிச்சயமான புத்தியுள்ளவன், என்னிடம் அர்ப்பணிக்கப்பட்ட மனத்துடன்

உள்ளவனான என் பக்தனாக ஆகியோரே எனக்குப் பிரியமானவர்கள்.

**13. க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத**
**க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயோர் ஞானம் யத்தஜ் ஞானம் மதம் மம**
**(13-32)**

அர்ஜுனனே! எல்லா க்ஷேத்ரங்களிலும் (தேகம் உடல்) இருந்து க்ஷேத்ர ஞனாக நானாக எண்ணி இந்த உடல் ஆன்மா இவற்றைப் பற்றிய ஞானமே உண்மையான ஞானம் என்பது என் கருத்து.

**14. நான்யம் குணேப்யஹ் கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபஸ்யதி**
**குணேப்யஸ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோ(அ)திகச்சதி (14-19)**

எவனொருவன் விவேகத்துடன் திரிகுணத்திற்கு அப்பாற்பட்ட கர்த்தாவை எவன் தரிசிக்கிறானோ, மற்றும் தன்னை திரிகுணத்திற்கு வேறுபட்டவனாக உணர்கிறானோ அவன் என் ஸ்வரூபத்தை (பிரம்ம ஐக்கியத்தை) அடைகிறான்.

**15. நிர்மானமோஹா ஜிதஸங்கதோஷா**
**அத்யாத்மநித்யா வினிவ்ருத்தகாமாஹா**
**த்வந்தவைர்விமுக்தாஹா ஸுக துக்கஸம்ஞைனர்**
**கச்சந்த்யமூடாஹ் பதமவ்யம் தத் - (15-5)**

அபிமானம், மோஹம் இல்லாதவன், உலகச் சேர்க்கையால் உண்டான தோஷங்களை வென்றவன், எப்போதும் ஆத்மசிந்தனையுடன் இருப்பவன், ஆசைகளற்றவன், இன்ப துன்பங்கள் இல்லாதவன், விவேக முடையவன் ஆகியோர் அழிவில்லாத பிரம்மத்தை அடைவர்.

**16. யஹ் சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரதஹ**
**ந ஸ ஸித்திம் அவாப்னோதி ந ஸுகம் ந பராம்கதிம் - (16-23)**

எவன் சாஸ்திரங்களுக்கு மாறாக நடந்து கொள்கிறானோ அத்தகையோன் ஞான சித்தியோ, சுகமோ, மோக்ஷத்தையோ அடைய முடியாது. (சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளபடி

தெய்வத்தன்மையைப் பெற்று அசுரத்தன்மையைக் கைவிட வேண்டும் என்பது பொருள்)

**17. ஸத்யவனுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத**
**ச்ரத்த மயோ அயம் புருஷோ யோ யச்ச்ரத்தஹ்ஸ**
**ஏவ ஸஹ -(17-3)**

அர்ஜுனனே! எல்லா உயிர்களுக்கும் முற்பிறவியின் பயனால் உருவாகிய கரணத்தை அனுசரித்து குணம் வாய்க்கும். ஜீவன் குணமயமாக இருக்கின்றான். எவனொருவன் எத்தகைய குணம் பொருந்தியிருக்கிறானோ அத்தகைய ரூபத்தையே அடைந்தவனாகிறான். (ஆதலால் எல்லோரும் முயற்சித்து சத்வகுணத்தையே கடைபிடித்து இறுதியில் அதற்கும் அப்பாற்பட்ட குணமற்ற நிலையை யடைய வேண்டும்)

**18. ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**
**அஹம் த்வாம் ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுசஹ**
**- (18-66)**

எல்லா செயல்களையும் காட்சிப்பொருள்களையும் விடுத்து என்னையே அடைக்கலம் அடைவாயாக! அப்படி சரணடைந்த உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை செய்கிறேன். எனவே சோகத்தை விட்டொழி!

## கீதையின் உட்பொருள்

பாண்டவ, கௌரவ யுத்தம் உண்மையில் ஒவ்வொருவரின் இதயத்திலும் தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் இடையே. நியாயத்திற்கும் அநியாயத்திற்கும் இடையோ. ஒவ்வொரு நிமிஷமும் நடைபெறும் போரேயாகும். அப்போரில் திடத்தன்மையுடன் கூடிய புத்தி எவ்வளவுக்கெவ்வளவு தூய்மையாக இருக்கிறதோ விவேகத்துடன் கூடியிருக்கிறதோ அவ்வளவுக்கு மனிதனுக்கு வெற்றி கிடைக்கும். எனவே உபநிஷத்துக்கள் அவற்றை சாரதியாக உவமித்துக் கூறினர்.

தேர் சேரவேண்டிய இடத்திற்குத் தடங்கல் இல்லாமல் சேரவேண்டுமெனில், கரடுமுரடான பாதையை தெரிந்தெடுக்காமல் நல்வழியில் செலுத்த வேண்டும். அதற்கு தேரோட்டி சிறந்த அறிவாளியாகவும், வல்லவனாகவும் இருத்தல் வேண்டும். கண்ணபிரானைப் போன்ற ஓட்டுனர் கிடைத்தால் வாழ்க்கை வண்டி மோக்ஷம் என்னும் இலக்கை அடையாமலா இருக்கும்? அர்ஜுனனின் பெரும் பேறு காரணமாக தெரோட்டியாகக் கிடைத்தான். கடமையை கைவிட்டு தர்மத்தை தவறவிட இருந்த அர்ஜுனனை தனது சூத்திரத்தால் நல்வழியில் நடத்தினான் கண்ணபிரான். அவரது போதனையே பகவத் கீதை. அவ்வாறே இதயக்கோயில் முழுமையான ஆன்மீகச்சிந்தனை, தூய எண்ணம், கடமையில் ஈடுபட்டுள்ள மனம் இவற்றை போதிக்கும் போதனையும் பகவத்கீதையதே யாகும். கீதையின் உட்பொருள் இதுவே, அர்ஜுனனைப் போன்று புனிதமான ஜீவி தன் வாழ்க்கை ரதத்தின் கடிவாளத்தை பரமாத்மாவின் கைகளில் ஒப்படைத்து விட்டால், அவனின் அருளால் மோக்ஷமெனும் இறுதி இலக்கை எளிதாக அடையவியலும்.

கீதையின் இரகசியப்பொருள் இங்கு கீழே கொடுக்கப் பட்டுள்ளது..

குருக்ஷேத்ரம் - இதயக் கோயில்

அர்ஜுனனின் ரதம் - சரீரம்

சாரதியான கிருஷ்ண பரமாத்மா - பிரக்ஞையுடன் கூடிய புத்தி (பரமாத்மா)

தேரில் அமர்ந்த அர்ஜுனன் - சஞ்சலமான மனம் (ஜீவன்)

குதிரைகள் - இந்திரியங்கல்

கௌரவர்கள், எதிரிப்படைகள் - காமம், வெகுளி, விருப்பு வெறுப்பு, மமதை முதலிய துர்குணங்கள்.

அர்ஜுனனின் வில் - சாதனை (நான்கு வழிகளில்)

சஞ்சயன் - விவேகம்

திரிதராஷ்டிரன் - அவிவேகம், அறியாமை

துரியோதனன் - காமம்

பகவத் கீதை - ஜீவனைக் குறித்து மனதைக் குறித்து, பிரக்ஞையுடன் புகட்டும் அறிவுரை.

முதல் ஆறு அத்தியாயங்கள் - (கர்மஷட்கம்) கேட்டல்

இரண்டாம் ஆறு அத்தியாயங்கள் - (பக்திஷட்கம்) மனனம்

மூன்றாம் ஆறு அத்தியாயங்கள் - (ஞானஷடகம்) தியானம்

வாழ்க்கை ரதத்தை ஐம்புலன்களின் வழி செலுத்துதலே பந்தம் ., தெய்வமார்க்கத்தில் நடத்துதலே மோக்ஷம்.. இதுவே கீதா ரகசியம்.

# கீதா தியான விஹாரம்

**ஸ்ரீராகம் - ஆதிதாளம்.**

1. பகவத்கீதோ । தியான விஹாரமு । பக்தி நொநர்ப்பத । பருகுன ரண்டி ।

   சொககுக தானினி । சூடகனய்யெடு । சுளு வகு த்ரோவனு । ஜூபெதனுண்டி ।

2. பாரத யுத்தபு । பரிஸரபூமுல । பயலுதேரின । பாக்யம்பண்டி ।

   தீருடு வ்யாசுலு । ஸ்திரமுகநாடின । திவ்யோ த்யான । க்ஷேத்ரமுனுண்டி ।

3. ரஹினில க்ருஷ்ணுடு । ரக்திதோ பார்த்துனி । ரதமுனு நடிபின । ரங்கம்பண்டீ ।

   இஹபரசுககர । ஹேதுபூதமுலு । னென்னியுயாதடு । பன்னினதண்டி ।

4. இலவைனதிபதி । எயன்பதியெளயக । ரம்புல பரிமி[illegible] । ராஜிலுனண்டீ ।

   சலலதமுகனுட । சப்தசதம்புல । ஸத்வ்ருக்ஷம்புலு । செலகுன கண்டீ ।

5. எப்புடு வாடனி । பூவுலுகண்டீ ! எப்புடுகுள்ளனி । பலமுலுகண்டீ

   தப்பக மனமா । தன்யவனிகி ஜனி । தலகோக கொன்னிடி । தெத்தமுரண்டி ॥

# கீதா ஜயந்தி

மனிதர்களைப் போல் பிறந்த நாள் விழா கொண்டாடிக் கொள்ளும் வாய்ப்பு கீதைக்கும் கிடைத்தது. அதன் சிறப்பியல்பினால்தான் அதற்கு அத்தகைய வெகுமதிப்பும் கௌரவமும் கிடைத்தது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் போர்க்களத்தில் அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்த நாள். எனவே அந்நாள் மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. ஸ்ரீராம ஜயந்தி, கிருஷ்ண ஜயந்தி, புத்த ஜயந்தி, தத்தாத்ரேய ஜயந்தி, சங்கர ஜயந்தி முதலிய விழாக்களைக் கொண்டாடும் தூய நாட்களில் அவதாரபுருஷர்களை மக்கள் எவ்வாறு பூசிக்கிறார்களோ கீதா ஜயந்தியை முன்னிட்டும் கீதா தேவியை அர்ச்சிக்கும் வழக்கம் உள்ளது. கீதையைப் பூசிக்கும் முறை இந்நூலில் முன்பே கூறப்பட்டுள்ளது. அந்நாளில் கீதையையும், கண்ணனையும், வியாசரையும், அர்ஜுனனையும் அர்ச்சிப்பதோடு கீழ்க்கண்ட வழி முறைகளையும் பின்பற்றினால் நலம்.

1. பகவத் கீதையின் மொத்தம் 18 அத்தியாயங்களையும் தனிப்பட்ட முறையிலோ, அல்லது பலருடன் கலந்தோ பாராயணம் செய்தல் வேண்டும்.

2. கீதை தத்துவத்தை அறிந்த மகான்களைக் கொண்டு கீதை சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும். கீதை சொற்பொழிவுகளின் வாயிலாக கீதையில் இருக்கும் உயர்ந்த கருத்துக்கள் பரவுவது மட்டுமின்றி கீதையின் பால் அவர்களுக்குப் பற்று அதிகமாகும். அதன் பலனாக அவர்களுக்கு இல்லறத்துன்பங்கள் விலகி பரமானந்தத்தை அடைய ஏதுவாக இருக்கும். இதைவிட நாம் பிறருக்கு என்ன பேருதவி செய்துவிடமுடியும்? எனவே இத்தகைய பிர்ம்மவித்தையை வழங்குவதற்கும் கீதா ஞானத்தைச் சீர்தூக்கிச் சிந்தித்துப் பார்ப்பதற்கும் வழிவகை செய்து அதனால் சாமான்ய மனிதர்களை அவரவர் நியதிக்கேற்ப ஆன்மீக தரத்தை உயர்த்த வேண்டும். அப்படிச்

செய்பவர்களுக்கு ஞான வேள்வி ஆற்றிய மாபெரும் புண்ணியத்தை அடைவது மட்டுமின்றி அவரவர் கண்ணபிரானின் அருளுக்குப் பாத்திரம் ஆவார்கள்.

3. சிறுவர்களுக்கும் பெரியோர்களுக்கு கீதைப் போட்டித் தேர்வுகளை ஏற்பாடு செய்து வெற்றி பெற்றோர்க்கு அன்று மாலை பொதுக்கூட்டத்தில் வெகுமதிகளை வழங்க வேண்டும். அப்படிப்பட்ட வெகுமதிகள் கீதை தொடர்புடையதாக இருத்தல் நலம். இந்தத் தேர்வுகள் ஏதோ ஒரு வகையில் தீவிரமாக கீதையைப்படிக்கும் ஆர்வத்தை ஏற்படுத்துகிறது. மக்களிடையே நல்ல வகையில் ஊக்கமும் உற்சாகமும் பெருகுகிறது.

4. பொதுமக்களுக்கு கீதையின்பால் ஆர்வம் ஏற்பட கீதை (நாடோடி) 'புர்ர' கதைகள், கீதையைப் பற்றிய ஹரிகதைகள், கதாகாலட்சேபம் முதலியவைகளை நடத்துதல் நலம்பயக்க வல்லது. கீதையை சங்கீதத்தோடு இசைத்தால் அப்படிப்பட்ட கல்வி கேள்விகளில் பொதுமக்கள் மிகுந்த ஈடுபாடு கொள்வார்கள். மக்களிடையே கீதையை அறிமுகப்படுத்த இது ஒரு நல்ல வாய்ப்பாகும்.

5. கீதையின் சாரம், கீதையின் சிறப்பு இவற்றை துண்டுப் பிரசுரமாக வெளியிட்டு மக்களுக்கு விநியோகிக்கலாம். கீதை இலக்கியத்தை விரிவாக பரப்புதல் இக்காலத்தில் மிகவும் அவசியமாகும், சக்தி உள்ளோர் ஜயந்தி நன்னாளில் கீதையின் பிரதிகளை மோக்ஷத்தை அடைய விரும்புவோருக்கு சாதுக்களுக்கு, பக்தர்களுக்கு இலவசமாக விநியோகிக்கலாம்.

6. பலர் கூடும் வாய்ப்புள்ள ஓரிடத்தில் அவ்விடம் கீதையின் வெவ்வேறு பொழிப்புரைகள் கொண்ட நூல்களை, செய்யுள், உரைநடைத்தொகுதிகளை உபந்நியைச வடிவிலான கீதை நூல்களையும் கீதை சம்பந்தமான ஓவியங்களை ஒரு காட்சியாக அமைக்கலாம்.

7. கீதை பிறந்த நாள் மிகப்புனிதமான நன்னாள் ஆகையால், அந்நாளில் கீதை நூலையும், கண்ணபிரானையும், வேத வியாசரையும் அர்ஜுனனையும் அவர்களின் படங்களை

மலர்களால் அலங்கரித்து தேரின் மேலோ, சிறுவண்டியிலோ வைத்து மேளதாளங்களுடன் பஜனைகளுடன் முக்கிய வீதிகள் வாயிலாக ஊர்வலமாக எடுத்துச் செல்ல வேண்டும்.

8. முக்கியமாக கீதை பிறந்த நாளில் மக்கள் சில ஆன்மீக சபதங்களை மேற்கொள்ளவேண்டும் நாள்தோறும் ஒரு அத்தியாயத்தையோ, சில சுலோகங்களையோ தவறாமல் படிப்பேன் என்று உறுதிபூணவேண்டும். அதன்படி அனுஷ்டானத்தைத் தவறாமல் கடைபிடிக்கவேண்டும் ஓர் ஆண்டு கழிந்த பிறகு அதே கீதா ஜயந்தியன்றி ஆன்மீக வழியின் தன் முன்னேற்றத்தையும், கீதையை எந்த அளவிற்கு நாம் மனனஞ் செய்துள்ளோம் என்பதையும் நமது ஒழுக்கம் எந்த அளவுக்குத் தூய்மை அடைந்திருக்கிறது என்பதையும் நாமே எடைபோட்டுப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

கீதைக்கு ஆற்றும் தொண்டு சிறிதளவேயாயினும் அது இறைவனுடைய தொண்டு என்றும், சிறிதளவே பிராச்சாரம் செய்யினும், அது இறைவன் கைங்கரியம் என்றும் நினைத்து, முமுக்ஷுக்களுக்கு கீதா ஞானத்தைப் பரப்புவதற்கு துணை நிற்க வேண்டும். தாமும் ஈடேறி பிறரையும் ஈடேற்றி கண்ணனின் அருளுக்குப் பாத்திரர்கள் ஆவோமாக !

# கீதா மங்கள ஹாரத்தி

**I. தெலுங்கு ஆரத்தி (ஆதிதாளம்)**

1. பாவன கீதாமாதா ஜய மங்கள ஹாரத்தி கை கொனுமா
2. பக்தஜனாவனி பந்தவிமோசனி பவபய ஹாரிணி பவ்யதாயனீ (பாவன)
3. ஸர்வலோக ஸம்ரக்ஷணி கீதா ஸர்வதேவ ஸம்சேவித ஜனனீ சாந்தி விதாயனி ஸத்யப்ரதாயனி ஸத்வ குணாலய ஸச்சரிதா (பாவன)

II. 1. மங்கசம்பிசே சேகொனு மம்மா ஓ பகவத் கீதா மாதா,
ஸ்ரீபகவத்கீதா மாதா (மங்)

2. சங்கதூருலகு ஞானுலு ஷ்ருதிலோ
வெலிகெடி ஜ்யோதிவி நீவே காதா
பரம பாவனுனி தியானமுசேத விக்ஷேபமு
தொலகிம்பகதே (மங்)

3. பார்த்துனி நெபமுன முரளீக்ருஷ்ணுடு
கலிமானவுலனு பாலிம்ப
ஆர்த்தி நாசகர மகுநீ ஞான ஜ்யோதினி
ஜிபெமு ஜகமுலகு (மங்)

4. மூடவஸ்தலகு சாக்ஷிவி நீவு மூடு குணம்புலுலேகுண்டு
வாடவுநீவனு அனுபவ மொஸகி பரமானந்தமு நீயகதே (மங்)

சம்ஸ்கிருதத்தில் :

1. ஜயது ஜயது கீதா கிருஷ்ண வக்த்ர ப்ரபூதா
ஜயது ஜயது கீதா ஸர்வலோகைக மாதா
ஜயது ஜயது கீதா தைவஸம்பத ப்ரபூதா
ஜயது ஜயது கீதா விஸ்வசாந்தி ப்ரஸூதா.

பொருள் :

*ஸ்ரீ கிருஷ்ணனின் முகார விந்தத்கினின்றும் தோன்றி, இவ்வுலகனைத்தையும் காப்பாற்றும், தாயாக. பக்தியை, முக்தியை அளித்து, உலக சாந்தி நிலைநாட்டும் கீதைக்கு ஜயமுண்டாகட்டும்.*

2. மங்களம் ஸ்ரீ குருக்ஷேத்ரேண மோக்ஷாணி விஹாரிணி
பார்த்தஸாரதிரூபாய கீதாச்சார்யாய மங்களம்

பொருள்:

*குருக்ஷேத்ர போர்க்களத்தில் அர்ஜுனனின் ரதசாரதியாய், கீதையின் ஆசிரியராய் நின்ற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு மங்களம் உண்டாகட்டும்.*

**ஹிந்தியில் :**

1. **ஜய பகவத்கீதே ஜயபகவத்கீதே ஹரி ஹிய
   கமல விஹாரிணி சுந்தர சுபுனிதே (ஜய)**

2. **கர்ம சுமர்ம ப்ரகாசினி காசக்திஹரா தத்வ
   ஞான விகாசினி வித்யா பிரம்மபரா (ஜய)**

3. **நிச்சல பக்த விதாயினி நிர்மல மலஹரீ
   சரணரஹஸ்ய ப்ரதாயினி சபவிதிசுககாரீ (ஜய)**

4. **ராகத்வேஷவிதாரிணி காரிணி மோதஸதா
   பவ பயஹாரிணி தாரிணி பரமானந்த ஸத்ப்ரதா (ஜய)**

5. **ஆசுர பாவ விகாசினி நாசினி தமரஜனீ
   தைவீ சத்குணதாயனி ஹரிரசிகாசஜனீ (ஜய)**

6. **சுமதா த்யாகசிகாவனி ஹரிமுகரீ வாணீ
   ஸகல சாஸ்த்ரகீ ஸ்வாயினி ச்ருதியோங்கி ராணீ (ஜய)**

7. **தயாசுதா பரசாவனி மாது ! ஹரிபதப்ரேம
   தான்கர அபனேகரலீஜய்! (ஜய)**

**பொருள் :**

*விஷ்ணு பகவானின் இதயக்கமலத்தினின்றும் மலர்ந்ததும், அழகானதும், மிகவும் புனிதமானதும், கர்மரகசியத்தை போதிப்பதும், காமத்தின் சக்தியை உருத்தெரியாமல் செய்வதும், தத்வ ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்வதும், பிரம்மவித்யா ஸ்வரூபிணியாய், தூய பக்தியை உண்டாக்குபவரும், சம்சார புற அழுக்குகளைப் போக்குவதும், 'சரணாகதி'யின் ரஹஸ்யத்தைப் போதிப்பதும், எல்லா விதமான சுகங்களையும் அளிப்பதும், ராகத்வேஷங்களை தொலைப்பதும், எப்போதும் பரமானந்தத்தை அளிப்பதும் சம்சார பயத்தைப் போக்குவதும், ஜீவர்களை கடைத்தேற்றுவதும், அசுரகுணத்தைப் போக்குவதும், ரஜோதமோ குணங்களைக் கிழித்தெறிவதும், தெய்வத்*

தன்மையை உண்டாக்குவதும், பகவத் பக்தர்களுக்கு அலங்காரமாக இருப்பதும், சமத்வம், தியாகம் இவற்றைக் கற்றுக் கொடுப்பதும், விஷ்ணு பகவானின் முகத்தினின்றும் உதித்ததும், அனைத்து சாஸ்திரங்களையும் தன்னுள்கொண்டு, ச்ருதிகளிக்கு ராணி போன்று ஒளிர்வதும், தயை எனும் அமிர்தத்தை ஹரிபாத பத்மங்களில் எமக்கு ஈடுபாடு உண்டாக்கும் தாயே ! எங்களை உன் வழிக்கு அழைத்துக் கொள்வாயாக ! உனக்கு மங்களம் !

# கீதையைப் பாராயணம் செய்யும் முறை

கீதைய்யைப் பாராயணம் செய்யத் தொடங்கு முன்பாக கீழுள்ள சுலோகங்களை உச்சரித்த வண்ணம் வணங்குதல் வேண்டும்.

**ஓம் ஸ்ரீ கிருஷ்ண பரபிரம்மணே நமஹ.**

1. **ஓம் சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்**
   **பிரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வவிக்நோப சாந்தயே.**

2. **ஓம் அகண்டமண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம்**
   **தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவேநமஹ**

3. **ஓம் க்ருஷ்ணம் கமலபத்ராக்ஷம் புண்யச்ரவண கீர்த்தனம்**
   **வாஸுதேவம் ஜகத்யோனிம் நௌமி நாராயணயம் ஹரம்.**

4. **ஓம் வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே**
   **நமோவை ப்ரம்மநிதயே வாசிஷ்டாய நமோ நமஹ**

5. **ஓம் நாராயணம் நமஸ்க்ருத்ய நரம்சைவ நரோத்தமம்**
   **தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜய முதீரயேத்.**

இப்படியாகச் சுலோகங்களை உச்சரித்த வண்ணம் வணங்கிய பிறகு பகவானாகிய கண்ணபிரானையும். வேதவியாச மகரிஷியையும் கீதை நூலையும் பக்தியுடன்

பூஜிக்கவேண்டும். பிறகு கீழ்க்கண்ட பாராயணம் செய்ய வேண்டும். (பாராயணம் செய்யும்போது சுலோகங்கள், அத்தியாயங்கள் இவற்றின் எண்ணிக்கையைப் பற்றிக் கவலைப்படாமல், மனம் இறைவனிடத்தும், கீதையின் பொருளிலும் லயித்துள்ளதா என்பதை அவ்வப்போது பார்த்துக் கொள்ளவேண்டும் குருக்ஷேத்ர போர்களத்தில் இருபடைகளுக்கிடையில் தேர் மேலே அமர்ந்து பரிதாப முகத்துடன் நோக்கும் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்யும் கண்ணன் காட்சியை மனதில் நிறுத்திக் கொள்ளவேண்டும். தன்னை அர்ஜுனனாகக் கருதிக் கொண்டு கண்ணன் தனக்கே போதிப்பது போல் மனதில் எண்ணிக் கொள்ள வேண்டும். இவ்வாறாக பாராயணம் செய்யும் மனம் எந்த அளவு ஒருமைப்படுகிறதோ அந்த அளவிற்குப் பாராயண பலனும் இருக்கும்.)

**செய்யும் முறை :**

வலதுகை மோதிர விரலில் தர்ப்பையை அணிந்து கையில் நீரை ஏந்தி. கீழ்க்கண்டவாறு சொல்லி, பிறகு நீரை தட்டில் விடவேண்டும்.

ஓம் அஸ்ய ஸ்ரீ பகவத் கீதா சாஸ்த்ர மஹா மந்தரஸ்ய ஸ்ரீ வேத வ்யாஸோ பகவான் ருஷிஹி, அனுஷ்டுப் சந்தஹ, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தேவதா அசோச்யான் அன்வ சோசத்வமிதி பீஜம், ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜேதி சந்தஹ, அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசு இதி கீலகம், பச்சிதஹ, ஸர்வதுர்காணி மத்ப்ரசாதாத்ரிஷ்சீதி கவசம், கிரீடினம் கதினம் சக்ர ஹஸ்தமித்யஸ்த்ரம், அநாதி மத்யாந்த மநந்தவீர்ய மிதி தியானம், ஞான யக்ஞேன பகவதாராதனார்த்தே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மப்ரீத்யர்த்தே கீதா பாராயணே ஜபே விநியோகஹ.

(பிறகு கரந்யாச அங்கந்யாசங்களைச் செய்ய வேண்டும். தனது உறுப்பிக்களிலும் பரம்பொருளும் அதன் சக்தியும் நிறைந்து இருப்பதாக எண்ணிக்கொள்வதே 'நியாசத்தின்' நோக்கம். பாராயணம் செய்பவன் மந்திர மயமாகி அவ்வவ்

மந்திரங்களால் பாதுகாக்கப்படுவான். அவனது அகமும் புறமும் தூய்மையடையும். திவ்ய பலம் கிடைக்கும். சாதனை இடையூறின்றி நடந்து முடிந்து பெறற்கரிய பேறு கிடைக்கும்)

**கரந்நியாசம்:**

**நைனம் சின்தந்தி சஸ்த்ராணி**
**நைனம் தஹதி பாவகஹ - இத்யங்குஷ்டாப்யாம் நமஹ..**

(இந்த மந்திரத்தைச் சொல்லி இரண்டு கைகளின் பெருவிரல்களை இரண்டு ஆள்காட்டி விரலால் தொடவேண்டும்.

**ந சைனம் க்லேதயன்த்யாபோ**
**ந சோஷயத் மாருதஹ - இதி தர்ஜனீப்யாம் நமஹ.**

(என்று சொல்லி இரண்டு ஆள்காட்டி விரல்களை இரண்டு பெருவிரல்களாய் தொடவேண்டும்.

**அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோ(அ)சோஷ்ய ஏவச -**
**இதிமத்யமாப்யாம் நமஹ..**

என்று இரண்டு பெருவிரலால் இரண்டு நடுவிரல்களையும் தொடவேண்டும்.

**நித்யஹ் ஸர்வ கதஹ் ஸ்தாணுரசலோயம்**
**ஸநாதனஹ - இத்யநாமிகாப்யாம் நமஹ**

(என்று இரண்டு பெரு விரல்களைக் கொண்டு இரண்டு மோதிர விரல்களையும் தொடவேண்டும்)

**பஸ்ய மே பார்த்தரூபாணி சதசோத**
**சமாஸ்ரஹ - இதி கனிஷ்டிகாப்யாம் நமஹ.**

என்றவாறு ரெண்டு கட்டை விரலால் ரெண்டு சிறு விரல்களையும் தொடவேண்டும்.

**நாநாவிதானி திவ்யானி நாநா வர்ணா**
**க்ருதீனிச - இதிகரதல கரப்ருஷ்டாப்யாம் நமஹ.**

என்று சொல்லியபடி வலதுகையின் கீழ் இடதுகையை வைக்க வேண்டும் அதாவது உள்ளங்கையின் புறமாக திருப்பி வைத்து ஸ்பரிசிக்க வேண்டும்.

**அங்க நியாசம்:**

**நைனம் சின்தந்தி சஸ்த்ராணி நைனம்**
**தஹதி பாவகஹ - இதி ஹ்ருதயாய் நமஹ.**

(என்று வலது கையால் இருதயத்தைத் தாக்க வேண்டும்.)

ந சைனம் க்லேதயாபோ ந சோஷயதி தலையைத் தொடவேண்டும்.

**அச்சேத்யோ அயமதாஹ்ய யோ**
**யமக்லேத்யோ அசோஷ்ய ஏவ**
**இதி சிகாய வஷட்**

என்று சொல்லி குடுமியைத் தொடவ்வேண்டும்.

**நித்யஹ் ஸர்வ கதஹ ஸ்தாணுஹ**
**அசலோயம் ஸநாதனஹ - இதி கவசாயஹும்**

என்று சொல்லியவாறு வலதுகையால் இடது புஜத்தையும் இடதுகையால் வலது புஜத்தையும் தொடவேண்டும்.

**பஸ்யமே பார்த்த ரூபாணி சதசோத**
**ஸஹஸ்ரசஹ இதி நேத்ரத்யாய வௌஷட்**

என்று ஓதி வலதுகையால் கண்களைத் தொட வேண்டும்.

**நாநாவிதானி திவ்யானி நாநா வர்ணா**
**க்ருதீனிச - இதி அஸ்த்ராய பட்**

என்று ஓதி வலதுகையைத் தலையைச் சுற்றி ஆள்காட்டி இடைவிரல்களால் இடதுகை மீது தட்ட வேண்டும்.

(இவ்விதம் நியாசம் மனத்தை அலையவிடாது ஒரு நிலைப்படுத்தி பக்தியுடன் தியானிக்க வேண்டும்)

**தியானம்: மகாபாரதம்:-**

**"பாராசர்ய வசஹ் ஸரோஜ மமலம் கீதார்த்த கந்தோத்கடம்**
**நாநாக்யானக கேசரம் ஹரிகதா ஸம்போதனா போதிதம்**
**லோகே ஸஜ்ஜன ஷட்பதை ரஹ ரஹஹ் பேபீயமானம் முதா**
**பூயாத் பாரத பங்கஜம் கலிமல ப்ரத்வம்சி நஹ் ஸ்ரேய ஸே"**

வேதவியாசரின் அருள்வாக்கு என்னும் திருப் பொய்கையில் பிறந்தது. மிகவும் தூய்மையான கீதையின் பொருள் எனும் நறுமணத்தை உடையது.' நாநாவிதமான இதிகாசங்கள் எனும் பூந்தாதுக்களை உடையது. பகவத் கீதை உபதேசங்கள் எனும் மலர்ச்சியைக் கண்டதும், நல்லார் எனும் வண்டுகளால் இடைவிடாமல் பருகப் படுவதும். கலிதோஷங்களை முழுமையாக அழிக்க வல்லது மாகிய மகாபாரத மெனும் தாமரை மலர் நமக்கு எல்லா நன்மைகளையும் உண்டாக்கட்டும்.

**ஸ்ரீ கிருஷ்ண தியானம்:**

**ஓம் ப்ரபன்னபாரிஜாதாய தோத்ர வேத்ரைகபாணயே**
**ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருத துஹே நமஹ**

அடைக்கலமடைந்த பக்தர்களுக்கு கல்பவிருக்ஷத்தைப் போன்று வேண்டியவற்றைத் தருபவன். ஒரு கையில் சாட்டையையும், முன்னொரு கையில் சின்முத்திரையையும் ஏந்தியவன்.. கீதையெனும் அமுதத்தைச் சுரப்பவானாகிய கண்ணபிரானை வணங்குகின்றேன்.

**வஸுதேவ ஸுதம் தேவம் கம்ஸ சாணூர மர்தனம்**
**தேவகீ பரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்,**

வசுதேவனின் புத்ரனும், திவ்ய வடிவம் கொண்டவனும், கம்ச சாணூரனைக் கொன்றவனும், தோவகிக்கு பரமானந்தத்தை அளித்தவனும், ஜகத்குருவுமான ஸ்ரீ கிருஷ்ணனை வணங்குகிறேன்!

**"பீஷ்ம த்ரோண தடா ஜயத்ரதஜலா காந்தார நீலோத்பலா
சல்ய க்ராஹவதீ க்ருபேண வஹனீ கர்ணேன வேலாகுலா
அஸ்வத்தாம விகர்ண கோர மகரா துர்யோதனா வர்த்தினீ
ஸோத்தீர்ணா கலு பாண்டவை ரணநதீ கைவர்த்தகஹ கேசவஹ**

*பீஷ்மன் துரோணர் எனும் கரைகள், ஜயத்ரன் எனும் நீருடன் கூடி, கௌரவர்கள் எனும் குமுத மலர்கள், சல்யன் எனும் பயங்கரமான மீன், கிருபாச்சார்யார் எனும் நீரோட்டம் கர்ணன் எனும் அலைகள், அஸ்வத்தாமன், விகர்ணன் என்ற முதலைகள், துரியோதனன் எனும் நீர்ச்சுழி ஆகியோரைக் கொண்ட போர் எனும் மகாநதியைப்பாண்டவர்கள் கிருஷ்ணன் எனும் படகோட்டியின் உதவியால் கடந்தனர்,*

**மூகம் கரோதி வாசாலம் பங்கும் லங்கயதே கிரிம்
யத்க்ருபா தமஹம் வந்தே பரமானந்த மாதவம்.**

*எவனது போருளால் - ஊமை மிகச் சிறந்த பேச்சாளன் ஆகக் கூடுமோ, ஊனமானவன் பெரிய மலைகளைக் கடக்க வல்லவன் ஆவானோ, அத்தகைய பரமானந்த ஸ்வரூபமான கிருஷ்ண பகவானுக்கு வணக்கம்.*

**யம் ப்ரஹ்மா வருணேந்த்ர ருத்ர மருதஹ
ஸ்துன்வந்தி திவ்யைஹ ஸ்தவைஹி
வேதை ஸ்ஸாங்க பத க்ரமோபநிஷதைர்
காயந்தி யம் ஸாமகாஹா
த்யானாவஸ்தித தத்கதேன மனஸா பஸ்யந்தி
யம் யோகினோ
யஸ்யாந்தம் ந விதுஹு ஸுராஸுரகணா
தேவாய தஸ்மை நமஹ.**

*பிரம்மா, வருணன், இந்திரன், ருத்ரன், வாயு முதலிய தேவர்கள் திவ்ய தோத்திரங்களுடன் யாரைத்துதிப்பார்களோ, சாமவேதத்தை இசைப்பவர்கள் அங்க, பத, க்ரம உபநிஷதங்களுடன் வேதங்களால் யாரைப் பாடுகிறார்களோ, யோகியர்கள் தியான நிட்டையில் ஒன்றிய மனத்துடன்*

யாரைக் காண்கிறார்களோ, யாருடைய அடிமுடிகளை தேவர்களும், அரக்கர்களும் அறிய முடியாதோ அத்தகைய பரம்பொருளை வணங்குகின்றேன்.

**ஸ்ரீ வியாசர் தியானம்:**

**ஓம் நமோஸ்துதே வ்யாஸ விசாலபுத்தே**
**புல்லாரவின்தாயத பத்ரநேத்ர**
**யேன த்வயா பாரத தைல பூர்ணாஹ்**
**ப்ரஜ்வாலிதோ ஞானமயஹ் ப்ரதீபஹ**

விசாலமான புத்தி உடையவனும், மலர்ந்த தாமரைகளைப் போன்ற கண்களையுடையவனும், மகாபாரதம் என்னும் எண்ணெயால் பரிபூர்ணமான கீதை ஞானமெனும் விளக்கை ஏற்றியவனும், (அதனால் மக்களின் இதயத்தில் அஞ்ஞான இருளை அகற்றியவனும்) ஆன வியாச பகவானுக்கு நமஸ்காரம்.

**ஸ்ரீ கீதா தியானம்:**

**பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா**
**நாராயணேன ஸ்வயம்**
**வ்யாஸேன க்ரதிதாம் புராண முனினா**
**மத்யே மகாபாரதம்**
**அத்வைதாம்ருத வர்ஷிணீம் பகவதீம்**
**அஷ்டாதஸாத்யாயினீ**
**மம்பத்வா மனுஸந்த தாமி பகவத்கீதே**
**பவ த்வேஷிணீம்.**

பரம் பொருளாகிய நாராயணனால் அர்ஜுனனுக்கு நேராக போதிக்கப்பட்டும் தொன்மைவாய்ந்த வியாச மகரிஷியால் மகாபாரதத்தின் நடுவே அமைக்கப்பட்டும், அத்வைத ஞானமெனும் அமுதத்தைப் பொழியச் செய்ததும், 18 அத்தியாயங்களைக் கொண்டதும், பிறவித்தளைகளிலிருந்து விடுதலை பெறச் செய்வதுமான அன்னை பகவத் கீதையை நான் தியானிக்கிறேன்.

**கீதா கல்பதரும் பஜே பகவதா க்ருஷ்ணேன ஸம்ரோபிதம்**
**வேதவியாஸ விவர்திதம் ச்ருதிசிரோபீஜம் ப்ரபோதாங்குரம்**
**நாநா சாஸ்த்ர ரஹஸ்ய சாக மரதிக்ஷாந்தி ப்ரவாலாங்கிதம்**
**க்ருஷ்ணாங்ரித்வய பக்திபுஷ்ப ஸுரபிம்**
**மோக்ஷப்ரதம் க்ஞானினாம்.**

பரம் பொருளாகிய கண்ணபிரானால் நடப்பட்டதும், வேதவியாச மகரிஷியால் வளர்க்கப்பட்டதும், உபநிடதங்களை விதைகளாகக் கொண்டதும், பேரறிவு என்னும் முளையைக் கொண்டதும், சகல சாஸ்திர ரகசியங்களைற் தம் கிளைகளாகக் கொண்டதும், சகிப்பு, பற்றற்ற தன்மை எனும் தளிர்களைக் கொண்டதும், கண்ணனின் திருவடி பக்தியெனும் நறுமணத்துடன் நிகழ்வதும், ஞானிகளுக்கு வீடுபேற்றை அளிக்கவல்லதும் ஆகிய கீதையெனும் கல்பதருவை நான் சேவிக்கிறேன்.

**ஸம்சார ஸாகரம் கோரம் தர்த்து மிச்சதி யோ நரஹ**
**கீதா நாவம் ஸமாஸாத்ய பாரம் யாதி ஸுகேன ஸஹ.**

பயங்கரமான பிறவிக்கடலை கடக்க நினைப்பவன் பகவத்கீதை எனும் நாவாயைப் பற்றினால் எளிதாக அதனைக் கடக்க இயலும்.

**ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா**
**கோபாலநந்தனஹ**
**பார்த்தோ வத்ஸஹ் ஸுதீர் போக்தா**
**கீதாம்ருதம் மஹத்**

உபநிடதங்களனைத்தும் பசுக்கள். ஆயர்மைந்தன் ஆகிய கண்ணனே பாலை கறப்பவன், அர்ஜுனனே கன்று. மகிமை பொருந்திய கீதை அமுதமே பால். நல்ல புத்தியுடையவரே அதனைப் பருகுபவர்.

[இவ்வாறாக, ஸ்ரீ கிருஷ்ண பரமாக்மாவை, ஸ்ரீ வேத வியாசரை, ஸ்ரீ கீதாமாதாவை, ஸ்ரீ மஹா பாரதத்தை தியானித்து அதன் பிறகு கீதா பாராயணத்தைத் தொடங்க

வேண்டும். தினமும் ஒரு அத்தியாயத்தை முழுவதுமாக பாராயணம் செய்தல் நல்லது. பாராயணம் முடிந்தவுடன் கீதா மகாத்மியத்தைப் படிக்க வேண்டும், இது சான்றோர் பின்பற்றிய வழி, 23 சுலோகங்களுடன் கூடிய (வராக புராணத்தில் உள்ள கீதா மகாத்மியமே அதிகமாக வழக்கத்தில் உள்ளது. அதனை இங்கு தருகிறோம். பாராயணத்தின் இறுதியில் அதில் இரண்டு சுலோகசங்களைப் படிக்கலாம்.

## கீதா மகாத்மியம்

**1. நிலமகள் கூற்று:**

**பகவன் பரமேசான பக்திரவ்யபிசாரிணீ**
**ப்ராரப்தம் புஜ்ய மானஸ்ய கதம் பவதி ஹே ப்ரபோ!**

**பூதேவி விஷ்ணு பகவானிடம்**

இவ்வாறு கேட்டாள் - 'ஏ! பகவானே ! பரமேஸ்வரா! பிரபு! ஊழ்வினையை அனுபவிப்பவனுக்கு நிலையான பக்தி எவ்வாறு கிடைக்கும்?

**2. விஷ்ணுவின் கூற்று:**

**ப்ராரப்தம் புஜ்யமாநோபி கீதாப்யாஸ ரதஸ்ஸதா**
**ஸ முக்தஹ்ஸ ஸுகீ லோகே கர்மணா நோபலிப்யதே.**

விஷ்ணு - 'ஓ பூதேவி! ஊழ்வினை அனுபவித்துக் கொண்டிருந்தாலும் எப்போதும் கீதா அப்யாசத்தைத் தொடர்ந்து அக்கறையுடையவனாய் செய்து கொண்டிருப்பானே யானால் வீடு பேறு பெற்று இவ்வுலக வினைகளால் தீண்டப்படாதவனாய் சுகமாக இருப்பான்.

**3. மஹாபாபாதிபாபானி கீதாத்யானம் கரோதி சேத்**
**க்வசித் ஸ்பர்சம் ந குர்வந்தி நலிநீதலமம்பஸா.**

தாமரை இலைத் தண்ணீரைப் போல் ஒட்டாது இருந்து, கீதா தியானம் செய்து கொண்டிருப்பவனை மகாபாவங்கள் சற்றும் தீண்டமாட்டாது.

**4. கீதாயாஹ் புஸ்தகம் யத்ர யத்ர பாட்டஹ் ப்ரவர்த்ததே**
**தத்ர ஸர்வாணி தீர்த்தானி ப்ரயாகாதீனி தத்ர வை.**

எங்கு கீதைப்புத்தகம் இருக்குமோ, எங்கு கீதாபாராயணம் நடந்து கொண்டிருக்குமோ, அங்கு பிரயாகை முதலான தீர்த்தங்கள் பலவும் இருக்கும்.

**5. ஸர்வே தேவாஸ்ச ருஷயோ யோகினஹ் பன்னகாஸ்ச்ச யே**
**கோபாலா கோபிகா வாபி நாரதோத்ததவ பார்ஷதைஹி**
**சஹாயோ ஜாயதே சீக்ரம் கீதாப்ரவர்த்ததே**

எங்கு கீதா பாராயணம் நடந்து கொண்டிருக்குமோ அவ்விடத்திற்கு அனைத்து தேவர்களும், முனிவர்களும், யோகியரும், நாககுலத்தவரும், ஆயரும், கோபியரும் இறைவனின் இரு மருங்கிலுமுள்ள நாரதர், உத்தவர் முதலானோர் விரைவில் வந்து துணைபுரிவார்கள்.

**6. யத்ர கீதா விசாரஸ்ச படனம் பாடனம் ச்ருதம்**
**தத்ராஹம் நிச்சிதம் ப்ருத்வி நிவஸாமி ஸதைவ ஹி**

ஏ நிலமகளே ! எங்கு கீதையைப் பற்றிய சிந்தனை, பாராயணம், கற்றல், கேட்டல் ஆகியவை நடைபெற்றுக் கொண்டு இருக்குமோ அங்கு நான் எப்போதும் வசிப்பேன்.

**7. கீதா ச்ரயே(அ)ஹம் திஷ்டாமி கீதா மே சோத்தமம் க்ருஹம்**
**கீதாஞான முபாஸ்ரித்ய த்ரீன்லோகான் பாலயாம்யஹம்.**

நான் கீதைக்கு அருகிலேயே உள்ளேன். கீதையே எனக்கு மேன்மையான இருப்பிடம் கீதா ஞானத்தை அடிப்படையாகக் கொண்டே மூவுலகையும் நான் ஆட்சி செய்கிறேன்.

**8. கீதா மே பரமா வித்யா ப்ரஹ்மரூபா ந சம்சயஹ**
**அர்த மாத்ராக்ஷரா நித்யா ஸ்வநிர்வாச்ய பதாத்மிகா.**

கீதை எனது உயரிய கல்வி. அது பிரம்மாவின் உருவேயானது. இதில் எத்தகைய ஐயத்திற்கும் இடமில்லை. மற்றும் (அது பிரணவத்தின் நான்காம் அடியாகிய) அர்த்த மாத்திரை வடிவம். அது அழிவற்றது. சொல்லில் அடங்கா பெருமையுடையது.

**9. சிதானந்தேன க்ருஷ்ணேன ப்ரோக்தா ஸ்வமுகதோர்ஜு"னம்!**
**வேதத்ரயீ பராநந்தா தத்வார்த்தஞான மஞ்சஸா**

(தத்வார்த்த ஞான ஸம்யுதா என்ற பாடமும் உண்டு)

சச்சிதானந்த ஸ்வரூபமான கண்ணனால் நேராக கீதை அர்ஜு"னனுக்கு போதிக்கப்பட்டது. இது மூன்று வேதங்களின் சாரம். பரமானந்தத்தின் உருவம். தன்னை தஞ்சம் புகுவோர்க்கு விரைவில் தத்துவ ஞானத்தை அருளவல்லது.

**10. யோஷ்டாதச ஜபேந்நித்யம் நரோ நிச்சலமானஸஹ**
**ஞானசித்திம் ஸ லபதே ததோ யாதி பரம் பதம்**

எந்த மனிதன் சலனமற்ற மனத்துடன் கீதையின் 18 அத்தியாயங்களையும் நாள்தோறும் பாராயணம் செய்வானோ அவன் ஞான சித்தியை அடைந்து, பரம்பொருள் நிலையையும் வீடுபேற்றையும் அடைவான்.

**11. பாடே ஸமக்ரே(அ)ஸம்பூர்ணே**
**ததர்த்தம் பாட மாசரேத்**
**ததா கோதானஜம் புண்யம்**
**லபதே நாத்ர ஸம்சயஹ**

கீதையை முழுவதுமாக படிக்க இயலாதவர் பாதியையாவது படிக்கவேண்டும். அதனால் கோதான பலன் அவர்களுக்குக் கிட்டும். இதில் சிறிதும் ஐயமில்லை.

**12. த்ரிபாகம் படமானஸ்து கங்காஸ்நானபலம் லபதே**
**ஷடம்ஸம் ஜபமானஸ்து ஸோமயாக பலம் லபேத்**

கீதையின் மூன்றில் ஒரு பகுதி (ஆறு அத்தியாயங்கள், பாராயணம்) செய்பவருக்கு கங்கையில் நீராடும் பலன்

கிடைக்கும். ஆறில் ஒரு பங்கு படிப்பவர்க்கு சோமயாகம் செய்த பலன் கிடைக்கும்.

**13. ஏகாத்யாயம் து யோ நித்யம் படதே பக்தி ஸம்யுதஹ**
**ருத்ர லோக மவாப்னோதி கணோபூத்வா வஸேச்சிரம்.**

எவனொருவன் கீதையில் நாள்தோறும் ஒரு அத்தியாயத்தை பக்தியுடன்படிக்கிறானோ அவன் ருத்ரலோகத்தை அடைந்து அங்கே ருத்ர கணங்களில் ஒருவனாகி நெடுநாள் நிலைத்திருப்பான்.

**14. அத்யாயம் ஸ்லோகபாதம் வா நித்யம் யஹ படதே நரஹ**
**ஸ யாதி நரதாம் யாவன் மனுகாலம் வஸுந்தரே**

பூதேவியே, ஒரு அத்தியாயத்தின் நான்கில் ஒரு பகுதியை தினம் பாராயணம் செய்பவன் மன்வந்த்ரகாலம் (உத்தமமான) மானிடப் பிறவியை அடைவான்.

**15. கீதாயாஹ ச்லோக தசகம் ஸப்த பஞ்ச சதுஷ்டயம்**
**த்வௌ த்ரீநேகம் ததர்தம் வா ஸ்லோகானாம் யஹ படேன்னரஹ.**

**16. சந்த்ர லோக மவாப்னோதி வர்ஷாணா மயுதம் த்ருவம்**
**கீதாபாட ஸமாயுக்தோ ம்ருதோ மானுஷதாம் வ்ரஜேத்.**

கீதையில் உள்ள 10 சுலோகங்களையாவது அல்லது ஏழோ, ஐந்தோ, மூன்றோ, இரண்டோ அல்லது ஒன்றோ அல்லது ஒரு சுலோகத்தில் பாதியையாவது எவன் படிக்கிறானோ அவன் சந்திரலோகத்தையடைந்து 10,000 வருடம் சுகமாக இருப்பான். இதில் ஐயமேதுமில்லை. மற்றும் கீதையைப் படித்த வண்ணம் எவன் மரணமடைகிறானோ அவன் உத்தமமான மனிதப் பிறவியை யடைவான்.

**17. கீதாப்யாஸம் புனஹ க்ருத்வா லபதே முக்திமுத்தமாம்**
**கீதேத்த்யுச்சார ஸம்யுக்தோ ம்ரியமாணோ கதிம் லபேத்.**

மனிதப் பிறவியை அடைந்து மீண்டும் மீண்டும் கீதையைப் படிப்பதால் உயர்ந்த மோட்சத்தை அடைவான்.

**18. கீதார்த்தச்ரவணாஸக்தோ மஹாபாபயுதோபி வா**
**வைகுண்டம் ஸமவாப்னோதி விஷ்ணுநா ஸஹ மோததே.**

மகாபாவியாயினும் கீதையின் பொருளை உணர்ந்து கேட்டால் வைகுண்டம் அடைந்து அங்கே விஷ்ணுதேவனுடன் ஆனந்தம் அனுபவிப்பான்.

**19. கீதார்த்தம் த்யாதே நித்யம் க்ருத்வா கர்மாணி பூரிசஹ**
**ஜீவன் முக்தஸ் ஸ விக்ஞேயோ தேஹான்தே பரமம் பதம்.**

எவன் கீதையின் பொருள்ள நாள்தோறும் சிந்தித்து இருப்பானோ. அவன் பல கர்மங்களை செய்திருப்பினும் ஜீவன் முக்தனேயாவான். மேலும் அவன் உடல் அழிந்த பிறகு பரம்பொருளை அடைவான்.

**20. கீதாமாஸ்ரித்ய பஹவோ பூபுஜோ ஜனகாதயஹ**
**நிர்தூத கல்மஷா லோகே கீதா யாதாஹ் பரம் பதம்.**

இவ்வுல்கில் ஜனகர் முதலான பல அரசர்கள் கீதையையணுகி பாவங்களிலிருந்து விடுபட்டு பரம்பொருள் நிலையை எய்தினர்.

**21. கீதாயாஹ் படனம் க்ருத்வா மாகாத்ம்யம் நைவ யஹ் படேத்**
**வ்ருதா பாடோ பவேத்தஸ்ய ஸ்ரம ஏவ ஹ்யுதாஹ்ருதஹ.**

கீதையைப் படித்த பிறகு எவனொருவன் அதன் மாகாத்மியத்தைப் படிக்காமல்விட்டாலும் அவனது பாராயணம் பலன் வீணேயாகும். அவனது முயற்சியால் வீண் சிரமமேயாகும்.

**22. ஏதன் ம காத்ம்ய ஸம்யுக்தம் கீதாப்யாஸம் கரோதி யஹ**
**ஸ தத்பல மவாப்னோதி துர்லபாம் கதி மாப்னுயாத்.**

இந்த மகாத்மியத்துடன் கீதாபாராயணம் செய்பவன் மேலே கூறிய பலன்களைப் பெற்று பெறற்கரிய வீடு பேற்றை அடைவான்.

**23. மாஹாத்ம்ய மேதத்கீதாயா மயா ப்ரோக்தம் ஸநாதனம்**
**கீதாந்தே ச படேத்யஸ்து யதுக்தம் தத்பலம் லபேத்.**

*சூதன் உரைத்தான் - ஏ சனகாதி மகரிஷிகளே ! தொன்மையான கீதையின் மகிமைகளை உங்களுக்கு நான் எடுத்துரைத்தேன். கீதைபாராயணத்திற்கு பின் எவனொருவன் இதனைபடிப்பானோ அவன் மேற்கூறிய பலன்களைப் பெறுவான்.*

*இதி ஸ்ரீ வராகபுராணே ஸ்ரீ கீதா மாகாத்ம்யம் ஸம்பூர்ணம்.*

*வராகபுராணத்தில் இடம்பெற்ற ஸ்ரீ கீதா மகாத்மியம் முற்றும்.*

**ஓம்**

# முகவுரை

இவ்வுலக இலக்கியத்தில் கீதையைப் போன்ற உயர்ந்த ஒரு நூல் இல்லை என அறுதியிட்டுக் கூறலாம். மற்றைய இலக்கியங்கள் அனைத்தும் மனிதனால் எழுதப்பட்டவை. கீதை பகவானால் படைக்கப்பட்டது. மாயையில் உழலும் மனிதனால் படைக்கப்பட்ட நூல் எங்கே? மாயாதீதன் ஆன இறைவனால் படைக்கப்பட்ட நூல் எங்கே? இந்நூலை போதித்தவர் அவதார மூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணர்., இந்நூலைக் கேட்டறிந்தவர் அதிகார மூர்த்தியாம் அர்ச்சுனன். போதித்தவர் பரமாத்மா என்றால் கேட்டவர் மகாத்மா. போதித்தவர் புருஷோத்தமன் என்றால் கேட்டவர் நரோத்தமன், இவ்விதமாக அற்புதமான குரு மாணாக்கன் சேர்க்கையில் தோன்றிய அருள்வாக்கு கீதை. நர நாராயணர்களின் தவப் பலனாய் நமக்குக் கிடைத்துள்ளதே கீதை. ஸ்ரீ கிருஷ்ணர், அர்ச்சுனன் இருவர் இடையிலும் நடைபெற்ற உரையாடல் கீதை, அவ்விருவரின் உரையாடலை இவ்வுலகம் புகழ் பெற்ற ஸ்ரீ வேத வியாசர் செய்யுள் வடிவில் நமக்கு எல்லையில்லக் கருணையுடன் வழங்கி உள்ளார். இவ்வாறாக தவச்சீலர்களான இம்மூவரின் அருளால் கீதை இவ்வுலகில் தோன்றி உலக மக்கள் அனைவருக்கும் மேன்மை அளிப்பதாய் உள்ளது. எவரின் தலை விதி நன்றாக இருக்கிறதோ அவர் கீதையைப் பின்பற்றி கடைத்தேறுதல் திண்ணம். உண்மையில் ஜீவர்களின் புண்யம் பலன் அளிக்கும்போதுதான் கீதைபோன்ற பரலோக சம்பந்தமான உன்னதமான நூல் அவர்களை வந்தடையும். கீதையின் ஈடு இணையற்ற ஆற்றலையும், மிகவும் ஆழ்ந்த திறமையையும், அபாரமான மகிமையையும் நோக்கும்போது எவருக்கும் அதன்மீது ஒரு தெய்வீகவுணர்வு, பக்தி சிரத்தை ஏற்படாது போகாது. உலகிற் சிறந்த அத்தகைய நூலின் தோற்றம் வளர்ச்சியையும், அமைப்பையும் போக்கினையும், அதன் மகிமைகளையும் அலசி ஆய்ந்துணர்தல் நம் கடமை.

## இரண்டு கானங்கள்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தன் வாழ்நாளில் இ
கானங்கள் இசைத்தார். அவற்றில் ஒன்று வேணு
இரண்டாவது கீதா கானம். வேணுகானத்தின் இனி
கோபிகள் முழுமையாக அனுபவித்தனர். மற்றை
அக்காலத்தே அவ்விசையின் இனிமையை ஓரள
பருகியிருப்பர். அவரின் இசையின் இனிமை எத்தை
நமக்குக் கிடைத்திலது. ஆயினும் என்ன? அதனை விட
இரண்டாவது கானம் நமக்குக் கிடைத்துள்ளது.
கீதா கானம். பாடுவோனுக்கும் பாட்டிற்கும் இடையே
இருப்பதில்லை. அவ்வாறே ஸ்ரீ கிருஷ்ணருக்கும் கீ
வேற்றுமையில்லை. கிருஷ்ணருக்கும் கீதைக்கும் இ
பிரிக்க இயலாத ஒரு தொடர்பு இருக்கிறது. க
வெளியிட்ட மூச்சுக் காற்றே கீதை. இறைவனின்
கீதை. மனித உயிர்களின்பால் அவர் கொண்ட அன்
எனலாம். இறைவனின் முகத்தாமரையினின்றும்
கீதா கானத்தின் இசை வெள்ளத்தில் நீராடுவே
பாவங்கள் அனைத்தும் அகலும். முக்தி உள்
நெல்லிக்கனியாகும். ஆதலின் பகவானின் இர
கானமான இக்கீதையைக் கேட்கும் பேறு
ஜீவராசிகளுக்குக் கிடைத்துள்ள பேறுதான் எத்தகை

## அனைவருக்கும் பயன்படும் அற்
## லீலை.

ஸ்ரீ கிருஷ்ணர் தன் வாழ்நாளில் எண்ணி
அற்புதங்களை, அதிசயத்தக்க லீலைகளைப் பு
அவற்றில் எதையும் நாம் கண்ணால் பார்க்க
அனுபவிக்கவில்லை. அவர் காலத்து வாழ்ந்தவர்க்
முடிந்தது. ஆயின் யசோதை தனயனால் நிகழ்த்
கீதையெனும் அற்புத லீலை அக்காலத்தவ
பிற்காலத்தவரான நமக்கும் கிடைத்துள்ளது.
நிகழ்த்திய கீதோபதேச அற்புத லீலை ஒரு கால

தேசத்திற்கோ, மதத்திற்கோ, சாதியினருக்கோ மட்டுமே ஏற்பட்டதில்லை, மக்களனைவருக்கும், எல்லா தேசத்திற்கும், எக்காலத்திற்கும் பொருந்தும் சத்ய சிவ சுந்தர ரூபமான பகவானின் வாக்கு. எனவேதான் ஸ்ரீ கிருஷ்ணரைக் குறித்த பிரார்த்தனையில் இங்ஙனம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**ஸாரத்ய மர்ஜுன ஸ்யாதெளகுர்வன்**
**கீதாம்ருதம் ததெள**
**லோக த்ரயோபகாராய தஸ்மை**
**க்ருஷ்ணாத்மனே நமஹ**

"எந்த மகான் முன்பு அர்ஜுனனுக்குச் சாரதியாய் நின்று, மூன்றுலகத்திலுமுள்ள மக்கள் அனைவரின் பயன் கருதி கீதாம்ருதத்தை நமக்களித்தாரோ, அத்தகைய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிற்கு நமஸ்காரம்.

## ஸர்வ சாத்திர சாரம்

கீதையின் மகிமையைக் குறித்து இன்னும் சற்று விரிவாக அறிந்து கொள்வோம். இந்து தர்ம சாத்திர இலக்கியங்கள் மிகவும் பரந்தவை. எத்துணையோ சாத்திரங்கள், நூல்கள், சித்தாந்தங்கள் அடங்கியவை. இவையனைத்தையும் பார்த்த மாத்திரத்திலேயே எதனைப் பின்பற்றுவது, எதனைத் தள்ளுவது என்றறியாது மயங்கும் ஒருவனிடத்து இத்தகைய கேள்வி எழுதல் இயற்கை - எல்லையற்ற சாத்திரமெனும் கடலைக் கடைந்து வெளிக்கொணர்ந்த - அனைத்தின் சாரமாகவும் உள்ள நூல் ஏதேனும் உளதா? அனைத்து சாத்திரங்களின் கொள்கைகளையும் ஒருங்கிணைத்த நூல் நட் இந்து தர்ம இலக்கியங்களில் கிடைக்குமா?

இந்து தர்மங்கள் அனைத்தையும் - அல்ல, அல்ல, எல்லா மதங்களின் வழிமுறைகளையும், தத்துவங்களையும் தன்னுள் அடக்கியதும், அவற்றுள் முதன்மையானதுமான ஒரே ஒரு பிரமாண நூல் எவையேனும் உளதா? இக்கேள்விகள் அனைத்திற்கும் தகுந்த பதில் உள்ளது. அது இவ்வாறான

நூல் பகவத் கீதை என்பதாகும். ஆன்மீக, தியான சாதனைகளுக்கும், அனைத்து தர்மங்களுக்குமான ஒரு அகராதியே பகவத்கீதை. ஏனெனில் இந்துமத தர்மங்களனைத்தும் இதில் கூறப்பட்டுள்ளது. பல மதங்களின் கோட்பாடுகளைத் தன் கிளைகளாகக் கொண்டு பரந்து விரிந்துள்ள பெரிய மரமே கீதை. அனைத்து தர்மங்களும் ஒருங்கிணைந்த அற்புத அரங்கமே கீதை. சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், மீமாம்சம், வேதாந்தம் இவற்றின் கோட்பாடுகள் - சாக்த, சைவ, காணபத்திய, வைணவ மதங்கள், பல ஆயிரக்கணக்கான வருடங்களாகப் பின் பற்றப்பட்டு வந்துள்ள சம்பிரதாயங்கள் இவையனைத்தையும் தன்னகத்தே கீதை கொண்டிருப்பதை நாம் காணவியலும். எனவேதான் இதனை 'உலகப் பொது நூல்' (Universal scripture, Universal Gospel, Bible of Humanity) என்று அனைவரும் ஒரே குரலில் ஒப்புக்கொண்டுள்ளனர். முன்பொரு முறை, வல்லபாச் சாரியாரை ஒரு பக்தர் இவ்வாறு கேட்டார் - 'அய்யா. அனைத்து சாத்திரங்களிலும் எது மிகவும் உயர்ந்தது?' என்று கேட்டார். அவர் உடனே,

"ஏகம் சாஸ்திரம் தேவகீபுத்ரகீதம் என்று பதிலுரைத்தார். தேவகி புத்ரனாகிய ஸ்ரீ கிருஷ்ணர் உரைத்த கீதா சாஸ்திரம் ஒன்றே அனைத்திலும் மேலானது என்பது அதன்பொருள், அவ்வாறே, 'பாடுவதற்கு எது உகந்தது' என ஒருவர் ஸ்ரீ சங்கராச்சாரியாரைக் கேட்ட போது அவர்,

"கேயம் கீதா நாம ஸஹஸ்ரம் என்றார். கீதையையும், விஷ்ணு சஹஸ்ர நாமத்தையும் பாடவேண்டும் என்பது அதன் பொருள்.

அதிமேதைகளும், சர்வ சாத்திர பண்டிதர்களும், ஆன்மீக ஆத்மவித்தை கைகூடியவர்களுமான இவ்விருவருமே எதனால் இவ்விதம் கூறினர்? கீதையினிடம் அத்தகைய மோஹ சக்தி இருப்பதால்தான். அவ்வாறே, ஸ்காந்த புராணத்தில்,

**"ஸர்வ சாஸ்த்ரமயீ கீதா" -**

கீதை சர்வ சாத்திரங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது என்றும்,

மஹாபாரதத்தில்.

**"கீதா ஸுகீதா கர்த்தவ்யா கிமன்யைஹி**
**சாஸ்த்ர விஸ்தரைஹி"**

கீதையை இனிமையாக இசைத்தல் வேண்டும். அநேக இதர சாத்திரங்களினால் பயன் என்ன? என்றும் கீதை பலவாறாகப் புகழப்பட்டுள்ளது. அன்று துவாபர யுகத்தின் இறுதியில், யுத்த களத்தில் பகவானால் உபதேசிக்கப்பட்டு இன்றும் சுமார் 5000 ஆண்டுகளாகியும், கீதை சிதறிப் போய்விடாமல் நதிப்பிரவாகம் போல் ஓடி, இன்றும் புத்தம் புதிதாக ஒளிர்ந்து கொண்டு இருக்கிறது. கீதையில் உள்ள கம்பீர பாவத்தை, அனைத்து மதங்களின் சமநோக்கை, ஆழ்ந்த ஞானத்தை, எல்லையில்லாத கருத்துக் கோவைகளை நோக்கும்போது, இது மனிதனால் எழுதப்பட்டது அன்று என்று மிகத் தெளிவாகத் தெரிகின்றது. சிருஷ்டியின் ஆரம்பத்திலிருந்து இன்றுவரை உலக மக்களனைவருக்கும், உயர்வளிக்கும் பயன் நூல் வெளிவரவில்லை என்பதில் வியப்பேதுமில்லை. எனவேதான் மகனீயர்கள் எவர் அவதரித்தாலும் முதலில் கீதையைப் போற்றி, அதற்குத் தாம் கண்ட விளக்கத்தை உரையாக எழுதி கீதையில் சேவையில் ஈடுபட்டு, வாழ்க்கையின் பயனை அடைந்ததாகக் கருதுகிறார்கள். இதிலிருந்து பாரததேச தார்மீக வாழ்க்கையில் கீதையின் பங்கு எத்தகையது என்பது நன்கு புலப்படுகின்றது.

## மற்றைய கீதைகள் - அதில் பகவத் கீதையின் நிலை.

இவ்வுலகில் அநேக கீதைகள் உள்ளன. அஷ்டாவக்ர கீதை, அவதூத கீதை, ரிபுகீதைஇ பிரம்ம கீதை, வசிஷ்ட கீதை, கணேச கீதை, அனுமத் கீதை, பராசா கீதை, ஹரித கீதை, சிவ கீதை,

ஹம்ஸ கீதை, பிட்சு கீதை கபில கீதை, தேவி கீதை முதலான எண்ணிறந்த கீதைகள் இருப்பினும் பகவத் கீதை ஒன்றிற்கே கீதை எனும் பெயர் பொருந்தியுள்ளது. கீதையின் எளிய நடை, ஆழ்ந்தகன்ற பொருள், பொதுநோக்கு, அனைவரும் பின்பற்றக் கூடிய வழிமுறைகள் இவை அதன் புகழ் பரவுவதற்கும், அனைவராலும் ஆதரிக்கப்படுவதற்கும் காரணமாகின்றன. பகவத் கீதை என்ற பெயரிலேயே ஒரு பரந்த நோக்கு புலப்படுகிறது. ஏனெனில் கிருஷ்ணரால் போதிக்கப்பட்டதால் கிருஷ்ண கீதை என்ற பெயர் பெறாமல் பகவத் கீதை என்ற பெயர் பெற்றது. இத்தன்மை அதன் ஜாதி, மதத்திற் அப்பாற்பட்டமையைக் காட்டுகிறது, எனவேதான் மாக்ஸ்முல்லர், கார்லைல், இமர்ஸன், எட்வின் அர்னால்ட், அன்னி பெசண்ட் முதலான வெளிநாட்டவர் பலரும் கீதையால் கவரப்பட்டு அதில் கூறப்பட்ட போதனைகளை தம் வாழ்நாளில் கடைப்பிடித்து கீதையின் பிரசாரத்திலும்

ஈடுபட்டனர். எட்வின் அர்னால்ட் என்ற பெரியார், 'திவ்ய கீதம்' (The Song Celestial') என்ற பெயரில், கீதையின் 18 அத்தியாயங்களை ஆங்கிலத்தில் கவிதை நடையில் இயற்றியுள்ளார். இதுவேயன்றி, கீதையின் உயர்வைக் குறித்து கூறிய கீழ்க்கண்ட வாக்கியம் அவர் கீதையின் மீது கொண்ட பக்தி சிரத்தையைக் காட்டுகிறது.

"பாரத தேசத்தில் அனைவரும் விரும்பும் காவியமான கீதை எனும் தார்மீக நூல் ஆங்கிலத்தில் இல்லாவிடில் ஆங்கில இலக்கியம் நிறைவுற்றிருக்காது."

ஆங்கிலமேயன்றி உலகமொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்கப்பட்டு, கோடிக்கணக்கான மக்கள் கீதா ஞானம் என்ற அமிருதத்தை அருந்தி அவரவர் வாழ்க்கையில் அமைதி காண்கின்றனர்.

## கீதையின் இதயம் - அன்னையின் இதயம்.

கீதை உண்மையில் ஒரு நூல் மட்டுமன்று. உயிரோட்டமுள்ள வடிவம் உடையது. ஸ்ரீ கிருஷ்ணர்

இவ்வுலகை விடுத்துச் செல்லும்போது புத்தொளியுடன் கூடிய தெய்வீக நூலை நமக்களித்துச் சென்றுள்ளார். கீதை அன்னை இருந்து நம் அனைவருக்கும் ஞான தானம் வழங்கி, பல துக்கங்களைப் போக்கி, ஒரு தாயைப் போன்று நம்மை பராமரித்து வருகிறது. காந்தி மகாத்மா கூறிய வாக்கியங்கள் இங்கு நினைவு கூரத்தக்கது. -

"I lost my earthly mother who gave me birth, long ago, but eternal mother (Gita) has completely filled her place by my side eversince. When I am in difficulty or distress, I seek refuge in her bosom."

"என் தாய் வெகு காலத்திற்கு முன்பே இறந்து விட்டாள். ஆயின் கீதை எனும் நிரந்தரத் தாய் அவ்விடத்தை பற்றிக் கொண்டு அப்போதிலிருந்து என் பக்கத்திலேயே இருந்து என்னை காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள். துன்பம் ஏற்படும் போதெல்லாம் அவள் மடியில் நான் அடைக்கலம் பெறுவதுண்டு.'

காந்தி மகாத்மாவைப் போன்றே பலரும் கீதையன்னையை அடைக்கலமடைந்து தத்தம் துன்பங்களை போக்கிக் கொண்டுள்ளனர். தம் புத்திரர்களின் மீதான அன்புள்ளத்துடன் அவ்வன்னை மூவர்ணங்களையும் சார்ந்தவர்க்கேயன்றி கீழ்ச் சாதியரான சூத்திரர்கள், சண்டாளர்கள் ஆகியோர்க்கும், ஆண்களேயன்றிப் பெண்களுக்கும், பசு, பறவைகள் ஆகியவற்றிற்கும், ஆயிரமாயிரமாண்டுகளாய் இச் சராசரமனைத்திற்கும் வரவேற்பளித்து, அவரவர்க்குத் தகுந்த பாதுகாப்பளித்து முக்திக்கு வழிகாட்டியுள்ளாள். சாதி, மத, குல, இன வேறுபாடின்றி அனைவரும் முக்தியடையக் கூடிய அதிகாரம் உடையவரே என்று திட்டவட்டமாக பேரிகை கொட்டி முழங்குகின்றது கீதை.

## கீதையின் ஈடு இணையில்லாத் திறமை.

கீதை கல்பதரு போன்றது. ஆயின் சுவர்க்கத்தில் உள்ள கல்பதருவைப் போன்று நினைத்த மாத்திரத்தில் வேண்டிய

பொருளை அளிப்பதில்லை. மன உறுதியால் பெறப்படும் முக்தி நிலையை அளிக்கவல்லது. கீதை காமதேனுவைப் போன்றது. ஆயின் சுவர்க்க லோகத்தில் இருக்கும் காமதேனுவைப் போன்று இவ்வுலகில் அழியக் கூடிய போகப் பொருட்களை அளிக்க வல்லது அன்று, காமம் தொலைந்த, களங்கமற்ற நிர்வாண நிலையை அளிக்க வல்லது. கீதை சிந்தாமணியைப் போன்றது. ஆயின் சுவர்க்கத்தில் உள்ள சிந்தாமணியைப் போன்று பஞ்ச பௌதிகச் செல்வங்களைப் பெருக்குவதன்று, சிந்தையை அழித்து, 'நிச்சிந்தை, நிரபேக்ஷ நிராமய' பரம நிலைக்கு ஜீவனை சேர்க்கக் கூடியது. கீதை அமிருதம் போன்றது, ஆயின் தேவர்கள் அருந்தும் வெறும் திராவகமல்ல அது, பிறப்பு இறப்பின்றி நிலைத்த பேரின்பமயமான பிரம்ம சாக்ஷாத்காரத்தைக் கொடுக்கக் கூடிய ஞானாம்ருதம்.

இவையேயன்றி 'நீவிர் உண்மையில் அழியக்கூடிய சரீரம் மட்டுமே உடையவர் அல்ல' என நம்பிக்கையையூட்டும் ஓர் 'அபயசாத்திரமே' கீதை. பலனை எதிர்பாராத கடமையுணர்வு எனும் நிட்டையை நமக்கு போதித்து அனைவரும் முக்தியடைவதற்கு உரியவரே என்று வலியுறுத்துகின்ற இறைவாக்கு அது. வாழ்க்கையெனும் கடலை எளிதாக நம்மைக் கடக்க வைக்கும் தோணி. வாழ்க்கை ரதத்தை மேடு பள்ளங்களில் விழுந்து விடாமல் மேன்மையாக நடத்திச் செல்லும் ரத சாரதி. ஞானமெனும் பெரு முழக்கத்தினை முழக்கி மக்களை மோகம் எனும் பேருறக்கத்தினின்றும் தட்டி எழுப்பும் மின்னற்கொடி , உபநிஷத்துக்கள் என்னும் பசுவினின்றும் , ஸ்ரீ கிருஷ்ணர் இடையனாய் நின்று, பாலினைக் கறந்து, வியாசமகரிஷியால் பாரதம் எனும் பாத்திரத்தில் ஊற்றப்பட்ட அமிர்த தாரை கீதை. தாபத்திரயங்களைக் குளிர்வித்து, நடைமுறை வாழ்க்கை நெறியையும், பரமார்த்திக தத்துவங்களையும் முறையாக நமக்கு வழங்கும் தெய்வீக நோக்குடைய நூல் இது. நாஸ்திகர்கள், சாத்திரங்களின் மீது நம்பிகை இல்லாதவர் ஆகியோரிடம் நிறைந்திருக்கும் பிரமையைப் போக்கி மக்களை 'சத்யம்' எனும் விண்ணகத்தில் உலவச் செய்யும் உயர்ந்த விமானம் அது.

வெளிவேடத்தைக் கலைத்து, உண்மையான வழியை உணர்த்தும் வழிகாட்டி. தொலைவினின்றும் மிக அழகாகத் தோன்றும் அழியக் கூடிய பொருள்களைப் பற்றிய பிரமையை, அவித்தையை விரட்டி, முக்தியின் வாயிலுக்குரிய சாவியை, வீடு பேற்றினை அடைய விரும்பும் 'ஜிக்ஞாஸு' வின் கையில் நேரிலேயே கொடுக்கக்கூடிய ஒப்பற்ற பிரம்ம வித்தையே கீதை.

## கீதையின் அளவற்ற சக்திக்குக் காரணம்.

கீதையின் அளவற்ற சக்திக்கான காரணத்தை ஒரு சிறிது ஆராய்வோம். ஸ்ரீசுகர், பரீக்ஷித்து மஹாராஜாவிற்கு மோக்ஷ மார்க்கத்தை உபதேசிக்க நிச்சயித்தபோது, அவருக்கு ஏழு நாட்கள் அதற்கான அவகாசம் கிடைத்தது. எனவே அவர் ஆற அமர பல உபகதைகளுடனும், இதிகாசங்களுடனும், வர்ணனைகளுடனும் போதிக்கத் தொடங்கினார். ஆயின் கீதோபதேசத்தின் போது ஸ்ரீ கிருஷ்ணரது நிலை வேறு. அர்ஜுனனுக்கு ஞான உபதேசம் செய்ய சில நிமிடங்களே கிடைத்தது. அதுவும் உபதேசம் செய்யப்பட்ட இடம் யுத்த களம். போர்க்களத்தில் இருபுறத்திலும் போர் வீரர்கள் போர்புரியக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். சங்க நாதம் முழங்கியாயிற்று. போர்முரசும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அம்பறாத்துாணியினின்றும் அம்பை எடுத்து நாணில் பூட்ட வேண்டியதொன்றே அடுத்துச் செய்ய வேண்டியது. அத்தகைய நெருக்கடியான நிலையில் ஸ்ரீ கிருஷ்ணருக்கு அர்ச்சுனனின் ஆசையை அகற்றுவதான பெரும் பொறுப்பு ஏற்பட்டது. தேரில் அமர்ந்திருந்த அர்ஜுனன் எழுந்து நிற்பதற்குள்ளாக, அனைத்து விஞ்ஞானங்களையும் போதிக்க வேண்டிருந்தது. அத்தகையதொரு சூழ்நிலையில், அத்தார்மீக பொறுப்பினை வகிப்பதற்காக, ஸ்ரீ கிருஷ்ணர் தனது சக்தியனைத்தையும் ஒருங்கிணைத்து செயலாற்றினார். வேத வேதாங்களின் கோட்பாடுகளையும், நடைமுறை வழிகளையும் நன்முறையில், விளங்கும் வகையில் அளித்தார். அதன் பலனாக அவரது எண்ணம் நிறைவேறியது. 'நயோத்ஸ்ய இதி கோவிந்த' - 'ஏ கிருஷ்ணா நான் போர்புரிய மாட்டேன் என்றவனை

சிறிது நேரத்திலேயே, 'கரிஷ்யே வசனம் தவ' நீ சொன்னபடி (யுத்தம்) செய்கிறேன்' என ஒப்புக்கொள்ள வைத்தார். 'நஷ்டோமோஹஹ' 'என் அஞ்ஞானம் தொலைந்தது' என்ற வாக்கியத்தை அர்ஜுனனை சொல்ல வைத்தார். இவையனைத்திற்கும் காரணம் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் அறிவாற்றலே காரணம். அவரின் தீவிரமான ஒருமுனைப்பாட்டுடன் கூடிய சமாதி நிட்டையில் உதித்த ஆழ்ந்தகன்ற ஞான உபதேசமே கீதை. ஒரு சாமான்ய மனிதனே ஒரு ஒருமுனைப்பாட்டுடன் செயல்படும்போது உலக அரங்கத்திலோ, இலக்கியம், சமூகம், அரசியல், ஆன்மீக அரங்கிலோ துணிகரமான செயல்கள் செய்யக் கூடியவர் ஆகின்றனர். அங்ஙனம் இருக்கையில் சர்வ ஞானியான பகவானைப் பற்றி வேறு எங்ஙனம் கூறவியலும்? எனவேதான் ஸ்ரீ கிருஷ்ணரின் சமாதி நிட்டையில் தோன்றிய பகவத் கீதைக்கு அபார மகிமை ஏற்பட்டது.

இவ்வுண்மையை பாரதம் அசுவமேத பாவத்தில் கீழ்கூறப்பட்டுள்ள கட்டத்தில், எடுத்துக் கூறி மிகவும் போற்றுகின்றது. பாரத யுத்தம் முடிந்தவுடன் யுதிஷ்டிரர் நன்றாக இராஜ பரிபாலனம் செய்து வருகையில் மக்கள் அனைவரும் அமைதியுடன் சகல சௌபாக்கியங்களையும் அனுபவித்து வாழ்ந்து வந்தனர். அப்போது ஸ்ரீ கிருஷ்ணர் சிறிது நாட்கள் துவாரகைக்குப் பயணம் செல்ல நினைத்திருக்கையில், அர்ஜுனன் ஒருநாள் கிருஷ்ணரையணுகி, இவ்வாறாகக் கேட்டார்.

'மகாத்மா ! அன்று போர்க்களத்தில் நீங்கள் என்னிடத்துக் கருணை கொண்டு உபதேசித்த திவ்ய ஞானத்தை (பகவத் கீதையை) மறந்து விட்டேன். அதனை மறுபடியும் கேட்க வேண்டுமென்ற வேட்கை மிகுதியாயுள்ளது. எனவே அதனை மறுமுறை போதிக்குமாறு வேண்டுகிறேன்' என்றார். இதனைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணர் இவ்வாறாக விடையளித்தார். 'ஏ அர்ஜுனா மிகவும் இரகசிய பொருளான ஞானத்தை அப்போது யுத்த களத்தில் உனக்கு உபதேசித்தேன். ஆயின் சிரத்தையின்றி நீ மறந்து போனது எனக்கு மிகவும்

வருத்தத்தையளிக்கிறது. அவையனைத்தையும் அதே போன்று இப்போது மறுபடியும் சொல்வதற்கு என்னால் இயலாது. அப்போது யோக நிலையில் (மிகத் தீவிரமான ஒருமுகப்பட்ட மனத்துடன்) உனக்கு போதிக்க முடிந்தது. (அந்நிலை மறுபடியும் வருவது மிகக் கடினம்) பிரம்ம சாக்ஷாத்காரத்திற்கு அந்நிலையே போதுமானது.

1. அபுத்யா நாக்ரஹீர்ய ஸ்த்வம் தன்மேஸூமஹதப்ரியம்
   ந ச ஸாத்ய புனர்பூயஹ் ஸ்மிருதிர் மே ஸம்பவிஷ்யதி
   (பாரதம் - அஸ்வமேதபர்வம் 16-10)

2. நூநமசிரத்ததானோ(அ)ஸி
   துர்மேதாஹ்யஸி பாண்டவ
   ந ச சக்யம் புனர்வக்து
   மசேஷேண தனஞ்ஜய (16-11)

3. ச ஹி தர்மஹ் சுபர்யாப்தோ
   பிரம்மணஹ் பத வேதனே
   ந சக்யம் அஸ்மயா பூயஹ்
   ததா வக்துமசேஷதஹ (16-12)

4. பரம் ஹி ப்ரஹ்மா கதிதம்
   யோக யுக்தேன தன்மயா (16-13)

இறைவனின் அவ்வாக்கு, கீதோபதேசசமயத்தில் அவரின் சித்த ஒருமுனைப்பு, யோகநிட்டை மிகத் தெளிவாகத் தெரிகின்றது. அவரது மனம் மிகமிகத் தெளிவாக இருந்தபோது கீதை போதிக்கப் பட்டுள்ளது. இவ்விதமாக யோகேசுவரரின் யோக நிட்டையில் ஜனித்ததால் தான் கீதைக்கு இத்தகைய ஆழ்ந்தசக்தி ஏற்பட்டுள்ளது.

## கீதை யக்ஞம்

குருக்ஷேத்ர யுத்தகளத்தில் ஒரு விசித்திரமான யக்ஞம் நடந்தது. யக்ஞத்திற்கான ஹோமகுண்டம் அர்ஜுனனின்

முகம். ஹோமதிரவியம் கீதோபதேசம். ஹோமத்தலைவர் (ஹோதா) ஸ்ரீ கிருஷ்ணர். ஹோமபலன் கைவல்யம்.

பாரதாம்ருத ஸர்வஸ்வ கீதாயா - மதிதஸ்யன
ஸாரமுத்ருத்ய கிருஷ்ணேன அர்ஜுனஸ்ய
முகே ஹுதம் (பாரதம் - பீஷ்மபர்வம்)(43-5)

பாரதத்தின் அமிருத மயமான கீதையை ஸ்ரீ கிருஷ்ணர் நன்றாக அலசி ஆய்ந்து அதன் சாரத்தை அர்ஜுனனுக்கு அளித்தார். இவ்வாறாக பிரம்மஞானாமிருதம் எனும் ஹோம திரவியத்தை அருந்தி, பார்த்தன் மேன்மையுற்றான். அவ்வாறே அனைத்து மக்களும் பகவானின் திவ்ய பிரசாதத்தையேற்று மேன்மையடைவார்களாக.

## உபநிஷத்தின் சாரம் கீதை

வேதங்களின் சாரமே உபநிஷத்துக்கள். உபநிஷத்துக் களின் சாரம் பகவத்கீதை. உபநிஷத்துக்களுக்கு வேதாந்த சாரமென்றும், சுருதிகளின் முடிவில் தெரிவிக்கப்பட்ட சாரத்தை அளிப்பதால் வேதாந்தமென்றும், சரீரத்திற்கு தலை முதன்மையாகயிருப்பதால் 'சுருதிசிரஸ்' என்றும் பெயர் ஏற்பட்டது. ஆன்மீக இலக்கியத்தில் உபநிஷத்துக்கள் இவ்வாறாக முதன்மை பெற்றுள்ளது. மிக உன்னதமான வேதமெனும் மரத்தின் பழமான உபநிஷத்துக்களை நன்கு கற்றுத் தேர்ந்து, பயின்று ஜன்ம ஈடேற்றம் அடைதல் கூடும் என ஒவ்வொரு முமுக்ஷுவும் சாதாரணமாக எண்ணக்கூடும். ஆயின் உபநிஷத்துக்களின் மொழிநடை, பொருள் இவை சாமான்யர் அறிய இயலாததொன்றாக உள்ளது. உபநிஷத்துக்களில் கூறப்பட்ட ஆன்ம விளக்கத்தினை விளங்கிக் கொள்வதற்குரிய அவகாசம் எங்குள்ளது? அங்கே கூறப்பட்டுள்ள விஞ்ஞானத்தை அனுபவத்தில் அறிவதற்கு வழியேது? இது ஒரு சிக்கலான விஷயம். இச்சிக்கலைப் போக்குவகற்கு பகவான் எண்ணினார். மேலும் அதன்மூலம் சாமான்யர்களுக்கு பேருதவி செய்ய நினைத்தார். அதன்படி

அவர் செய்தது என்னவெனில் - உபநிஷத்துக்கள் என்னும் பசுக்களை வைத்துக் கொண்டு, அர்ஜுனன் எனும் கன்றைக் காட்டி, தானே கோபாலனாய் நின்று பாலைக் கறந்து, பிரம்மானந்தம் எனும் அப்பாலை முமுக்ஷுக்களுக்குப் பகிர்ந்தளித்தார். அப்பாலே பகவத் கீதை. இவ்வாறாக மறை பொருளான வேதவிஞ்ஞானத்தை பகவத்கீதை எனும் எளிய இலக்கியத்தின் வாயிலாக மக்களுக்கு கிடைக்கும்படி செய்து உலகிற்கு மிகப் பெரும் உதவி செய்துள்ளார் ஸ்ரீ கிருஷ்ணர். பலர் கீதை அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டது என்று நினைப்பர். ஆயின் உண்மையில் அது இப்பூவுலக மக்களனைவருக்கும் உபதேசிக்கப்பட்டது. கன்றிற்காக வென சுரக்கும் பால் கன்றிற்குச் சிறிதளவே போய்ச் சேருகின்றதல்லவா? அதில் பெரும்பங்கு மற்றையோருக்கு அளிக்கப்படுகிறதல்லவா? 'ஸுதீர் போக்தா' எனப்பட்டதால் புத்திமான்கள் (முக்தியை அடைய விரும்புவோர்) அனைவரும் அப்பாலை அருந்தி நன்மையடைதல் வேண்டும் என்பது தெரிகின்றது.

இன்னும் 'கீதாம்ருதம் மஹத்' என்றதால், இது லௌகீக சுவர்க்கத்தில் உள்ள அமிர்தமல்ல என்பதும், பரத்தில் உள்ள சச்சிதானந்த அமிருத பானம் என்பதும் வெளியாகின்றது. எனவே, எளிய நடையில் ஆழ்ந்த பொருளில் அமைந்த, சாக்ஷாத் இறைவனால் உலகிற்கு அளிக்கப்பட்ட 'உபநிஷத்சாரம்' (Essence) ஆன கீதையைப் படித்தறிந் துணர்ந்து, பின்பற்றி நடந்து பவதுக்கத்தைப் போக்குதல் ஒவ்வொரு ஜீவியின் கடமையாகும்.

## கீதையின் ஞானம் எல்லையற்றது.

கீதையின் மகிமையை வர்ணித்தல் அளவிற்கடங்காதது. இறைவன் எங்ஙனம் முடிவில்லாதவனோ அவ்வாறே பகவானது வாக்கின் மகிமையைச் சொல்வதென்பது முடிவில்லாதது. 'கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம்' எனப்பட்டதால், கீதாச்சார்யன் எனும் ஜகத்குருவான ஸ்ரீகிருஷ்ணர், சாக்ஷாத் இறைவனேயானதால் அவரது வாக்கு

இறைவாக்கேயாகும். கிருஷ்ண கீதை பகவத் கீதையேயாகும். கீதையை கற்ற ஒவ்வொருவரும் அது தெய்வ வாக்கே என்பதை நன்குணர்வர். கீதையின் ஒவ்வொரு சுலோகத்திலும், ஒவ்வோர் எழுத்திலும் தெய்வத்தன்மை தாண்டவமாடுவதை அறிவர். ஒவ்வொரு சுலோகத்திலும் ஒவ்வொருவருக்கும் எத்துணையோ புதிய புதிய பொருள்கள் புலப்படும். பல ஆயிர ஆண்டுகட்குமுன் வெளிப்பட்ட ஒவ்வொரு சுலோகம் எனும் துளியில் ஞானமெனும் கடல் அடங்கி இருப்பதில் விந்தையேதுமில்லை. அவரவர் அனுபவத்திற்கேற்ப அதன் பொருள் அவரவர்க்கு விளங்கும். பின்னும் சித்தம் சுத்தியடைய ஒரே சுலோகத்திற்கே புத்தம் புதிய விரிவான பொருள் தோன்றிக் கொண்டேயிருக்கும்.

"The Suggestiveness of this wonderful book is really infinite"

"இந்நூலில் பொதிந்துள்ள கருத்துக்கள் உண்மையில் முடிவில்லாதது' என்று ஓர் அறிஞர் கூறியுள்ளார் எனின், எவரெவர் எத்துணை விதமாக பொருள் சொல்லிக் கொண்டே போயினும், எத்துணை விதமான உரைகள் எழுதிக் கொண்டே போயினும், அளவிலடங்கா அறிவு ஞானம் அதில் மீதம் இருந்துகொண்டே இருக்கும்.

ஒரு நதிப் பிரவாகத்தில் ஒருவன் ஒரு சின்ன சொம்பில் நீரை எடுத்துக்கொண்டு போவான்., மற்றொருவன் சிறு குடத்தில் முகர்ந்து கொண்டு போவான்., இன்னுமொருவன் ஒரு பீப்பாய் முழுவதும் நிரப்பிக் கொண்டு போவான். இன்னுமொருவன் ஒரு வண்டியில் எடுத்துக்கொண்டு போவான். அவரவர் சக்திக்கும் தேவைக்குமேற்ப நீரை எடுத்துப் போனாலும் நதிப் பிரவாகத்தில் நீர் குறைவதில்லை. அதைப்போன்றே கீதையெனும் கங்கைப் பிரவாகத்தில் சங்கராச்சாரியார் பெரிய பாத்திரத்தில் மெய்ஞானத்தை எடுத்துப் போனார். அவ்வாறே இராமானுஜர், மத்வாச்சாரியார், ஸ்ரீ கண்ட சிவாச்சாரியார் முதலான மகனீயர்கள் பலரும் அவரவர் சக்திக்கேற்ப புத்தியெனும் பாத்திரத்தில் கீதார்த்தத்தை நிறைத்துக் கொண்டனர். அவ்வாறே இந்நூற்றாண்டிலும், திலக், காந்தி மகாத்மா,

அன்னி பெசண்ட் முதலானவரும் கீதாம்ருதத்தை இறைத்துப் பருகினர். இன்னும் பருகித் திளைப்பவர் பலர். ஆயின் இவரில் பலரும் கீதையை மதித்துப் போற்றி சிலர் துவைத நெறியிலும், பக்தி நெறியிலும், யோக நெறியிலும், ஞான நெறியிலும் பொருள் விளக்கங்கள் செய்திருப்பினும் இன்னும் கீதையெனும் அறிவுக் களஞ்சியத்தில் எத்துணையோ பொருள்கள் பொதிந்து கிடக்கின்றன. இதுவே கீதையின் தனிச்சிறப்பு. இத்தகைய சக்தி இதர நூல்கள் எவற்றிற்கும் இல்லை. எனவேதான் கீதையை முழுவதுமாக அறிந்தவன் இவ்வுலகிலேயே ஒருவர்தான் எனப்படுகின்றது. அவரே ஸ்ரீ கிருஷ்ணர். மற்றைய யாவரும் கீதையின் ஏதோவொரு பகுதியையுணர்ந்தவரேயாவர்,

> "கிருஷ்ணோ ஜானாதி வை ஸம்யக் கிஞ்சி
> துஸ்தனீசுதஹ் பலம்
> வ்யாஸோ வா வ்யாஸபுத்ரோ வா
> யாக்ஞவல்க்யோத மைதிலஹ்'

"கீதையின் பொருளை, அதன் சிறப்பை கிருஷ்ணர் ஒருவரே முழுமையாக அறிந்தவர். அர்ஜுனன், வியாசர், சுகர், யாக்ஞ வல்கியர், ஜனகர் முதலானோர் யாவரும் கீதையை ஒருவாறாக அறிந்தவரேயாவர்'. ஆஹா கீதையின் பொருள்தான் எத்துணை சிறப்புடையது

ஆயின், இவ்விடத்தே நாம் தர்மத்தின் சூட்சுமத்தை ஆராய்தல் வேண்டும். அது எது எனின் அமிருதத்தில் ஒரு துளி அருந்தினாலும், ஒரு சொம்பு அருந்தினாலும், இன்னும் அதிகமாகவே அருந்தினாலும் அதன்பலன் ஒன்றே. அருந்தியோர் அனைவருக்கும் இறவாமை என்பது சமமாகவே கிடைக்கும்.

அதேபோன்று கீதாம்ருதத்தை சிறிதளவே அருந்தினாலும், அதிகமாகப் பருகினாலும் - பவ துக்க நிவாரணம், மோக்ஷப் பிராப்தி இவை சமமாகவே கிடைக்கும். எனவே இவ்விஷயத்தில் எவரும் அஞ்சத்தேவையில்லை. சங்கராச்சாரியாரைப் போன்ற அறிவொளி நமக்கு இல்லாது

போயினும், உற்சாகமிழந்து விடாமல், கீதையில் கூறப் பட்டுள்ள தர்மங்களில் ஒன்றை மட்டுமாவது சரிவர பின்பற்றுவதற்கான முயற்சியை செய்தல் வேண்டும். அதனால் அவன் பரமசாந்தியடைதல் திண்ணம்.

## மகா பாரதத்தின் முழு வடிவமே கீதை

ஸ்ரீ பகவத் கீதை மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தில் 25ஆவது அத்தியாயத்தினின்றும் 42 ஆவது அத்தியாயம் வரையுள்ளது. பாரதம் என்னும் மிகப் பெரிய கடலில் கலங்கரை விளக்கம் போன்று கீதை ஒளி விடுகின்றது. பாரதம் என்ற பாலில் கீதை நவநீதம் போன்று உள்ளது. அஷ்டாதசப் புராணங்கள், நவவியாகரணங்கள், நால் வேதங்கள், இவற்றை சரிவர கடைந்தெடுத்து வியாசமுனிவர் பாரதத்தை எழுதினார்.

1. அஷ்டாதசபுராணி நவ வியாகரணானி ச
   நிர்மத்ய சதுரோவேதான் முனினா பாரதம் க்ருதம்,

2. பாரதோ ததி நிர்மத்ய கீதாயா நிர்மதி தஸ்ய ச
   ஸாரமுத்ருத்ய கிருஷ்ணேன அர்ஜுனஸ்யமுகே ஹுதம்

எனவேதான் பாரதம் 'பஞ்சம வேதம்' என்று புகழ் பெற்றது. அத்தகைய மேன்மை பொருந்திய காப்பியத்தின் சாரமே கீதை. ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா ஞானாமிருதத்தைப் பொழிந்து கொண்டிருக்கையில் வியாச மகரிஷி மஹாபாரதம் எனும் குடத்தில் பிழிந்து வைத்தார் என நாம் அலங்கார மொழியில் கூறவியலும். இன்னும்

> "தர்மே சார்த்தே ச காமே ச மோக்ஷ ச பரதர்ஷப
> யதி ஹாஸ்தி ததன்யத்ர யந்நே ஹாஸ்தி ந
> தத்க்வசித் (பாரதம்)

தர்மார்த்த, காம, மோக்ஷம் என்னும் நான்குவித புருஷார்த்தங்களைக்குறித்து பாரதத்தில் எவையெவை கூறப்பட்முள்ளதோ, அதே மற்றையவற்றிலும் கூறப் பட்டுள்ளது. இதில் இல்லாதது வேறு எவற்றிலும் இல்லை',

அது மட்டுமன்று, 'யந்த பாரதே தந்த பாரதே' - பாரதத்தில் இல்லாதது பாரத தேசத்திலேயே இல்லை. - இத்தகைய புகழ்பெற்ற பாரதத்தின் சாரமேயான பகவத் கீதை எவ்வாறிருக்கும் என்பதை வாசகர்களே ஊகித்தறிந்து கொள்ளவியலும். எனவேதான் ஸ்ரீ ஆதிசங்கரர், தம் கீதா பாஷ்ய உரையில் ஆரம்பத்திலேயே

'தநிதம் கீதா சாஸ்த்ரம் ஸமஸ்த வேதார்த்த
ஸார ஸங்க்ரஹ பூதம்'

என்றார். 'கீதா சாஸ்திரம் அனைத்து வேதவேதாங்கங்களின் சாரத்தின் சுருக்கம்' என்பது அதன் பொருள். அவ்வாறில்லையெனின் காலங்காலமாக எத்துணையோ அறிஞர்கள் இக்கீதையினால் கவரப்படுவது எதனால்? தேன் இல்லாவிடில் தேனீக்கள் மொய்ப்பதில்லை அல்லவா? கீதையில் கூறப்பட்டுள்ளவை என்றும் அழியாத போதனைகள். தேச காலங்கள் மாறினும் அது மாறாதது. சிதறிப் போகாதது. அது காலந்தோறும் யுகந்தோறும் பயன்படக்கூடிய தர்மம். எனவேதான் அதனைக்குறித்து கீதாச்சார்யன் 3 ஆவது அத்தியாயத்தில், ப்ரோக்த வா அகமவ் யயம் - அள்ளஅள்ளக் குறையாத இவ்வித்தையை - யோக சாஸ்திரத்தை நான் சூரியனுக்கு உபதேசிக்கிறேன் என்று வாக்களித்தேன். 'இதந்து தே குஹ்யதமம்' இது மிகவும் இரகசியமான வித்தையானதால் இதனை உனக்கு நான் சொல்கிறேன் என்று மீண்டும் மீண்டும் கீதாச்சார்யன் ஏன் கூறுகிறார்? மிகவும் ஆழ்ந்த, விரிவான இந்த தத்துவபோதனை ஒரு தேசத்திற்கேயன்றி, காலத்திற்கேயன்றி, மதத்திற்கேயன்றி, ஒரு ஜாதிக்கேயன்றி, ஒரு சம்பிராதாயததுக்கு மட்டுமேயன்றி அனைத்து தேச, கால, மத, சமுதாய சம்பிரதாயங்களுக்கு உரியதாயுள்ளது. எல்லா மதங்களின் சாரமும் இதில் அடங்கியுள்ளது. எனவே பகவத் கீதை இந்துக்களுக்கு மட்டுமே உரிய நூல் என்பது தவறு. இது அனைத்துலக க்ரந்தம் (Sovereignity) எனவே இதனைப்பின்பற்றுவோர். இதில் கூறப்பட்டுள்ள தர்ம இரகசியங்கள் அனைத்தையும் நன்கறிந்து, உணர்ந்து பின்பற்றினால் பரம சாந்தியைத் தவறாமல் அடைவர்.

ஞானேஸ்வரர் கீதையை இவ்வாறாகப் புகழ்கிறார், - கீதை விவேகமெனும் மரங்கள் அடங்கிய தோட்டம் , அனைத்து சுகங்களுக்கும் அஸ்திவாரம், பரமார்த்த சித்தாந்தமெனும் ரத்தின சுரங்கம், நவரசங்கள் எனும் அமிர்தத்துடன் கலந்து நிறைந்துள்ள ஒரு கடல், திறந்து வைக்கப்கட்டுள்ள பரந்தாமம், அனைத்து வித்தைகளுக்கும் உற்பத்தி ஸ்தானமான மூலபூமி, அனைத்து சாத்திரங்களின் இருப்பிடம், தர்மங்களின் பிறப்பிடம், நல்லோர்க்கு அன்புக்குரிய தோழன், ஸரஸ்வதியின் அழகிற்கிணையான இரத்தினக் களஞ்சியம், ஞானாம்ருதம் எனும் பூர்ண கங்கை, விவேகமெனும் பாற்கடலில் அமர்ந்திருக்கும் நவலக்ஷ்மி. இவ்வாக்கியங்கள் கீதை பெரிய மகான்களின் பார்வையிலேயே எத்தகைய உயர்ந்த நிலையை பெற்றுள்ளது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

## கீதோபநிஷத்

இனி, கீதையைக் குறித்த இன்னும் சில விசித்திரங்களை ஆராய்வோம். விஷ்ணுபகவானின் நாபிக் கமலத்தினின்றும் பிரம்மதேவன் தோன்றினார் என்று சாத்திரங்கள் கூறுகின்றன, பிரம்மதேவனால் வேதங்கள் தோன்றின என்பது உலக வழக்கு. பகவத் கீதையோ அவ்வாறின்றி விஷ்ணுமூர்த்தியின் முகக் கமலத்தினின்றே நேராகப் பிறந்தது, முகக் கமலம் எங்கே? நாபிக் கமலம் எங்கே? எது அருகில் உள்ளது? எனவே வேதங்களைவிட கீதை பகவானிடம் உயர்ந்த நிலையினை ஆக்கிரமித்துக் கொண்டுளது என்பது தெள்ளத் தெளிவாகிறது, இப்பொருளே கீழ்க்காணும் மஹாபாரத வாக்கியத்தில் தொனிக்கிறது.

"கீதா ஸுகீதா கர்த்தவ்யா கிமன்யைஹி
சாஸ்த்ர விஸ்தரைஹி
யா ஸ்வயம் பத்மநாபஸ்ய முக பத்மாத்
விநிஹ் ச்ரிதா'

-(பாரதம் - பீஷ்ம பருவம் 4 -31)

"கீதையை நன்றாகப் பாடுதல் வேண்டும். மற்றைய சாத்திரங்களினால் பலன் ஏதும் இல்லை. ஏனெனில் கீதை தான் விஷ்ணுவின் முகக் கமலத்தினின்றும் தோன்றியது. 'கீதையின் மகிமையை வர்ணிப்பதற்கு இதைவிட தகுந்த சான்று இன்னும் வேறென்ன வேண்டும்? சிலர் கீதையை ஸ்மிருதியாகக் கருதுகிறார்கள், ஈசுவரனின் வெளிமூச்சு ஸ்ருதியாகும்போது , அவரது வாக்கு எங்ஙனம் ஸ்மிருதியாக முடியும் என்று வல்லபாச்சாரியார் வினவுகின்றார். மற்றும் பகவத் கீதையின் ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும்,

"பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத் கீதை' என்ற முத்தாய்ப்பு வருகிறது, அதில் 'உபநிஷத்ஸு' (உபநிஷத்துக்களில்) என்று சொல்லப்படுவதால் கீதை வேதத்தின் அங்கமான உபநிஷத்துக்களுடன் சேர்ந்ததே என்பது வெளிப்படுகிறது, எனவே இதனை 'கீதோபநிஷத்' என்பதில் தவறேதுமில்லை. வேதங்களைப் போன்றே இதுவும் அமரவாக்கு என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## பிரஸ்தான த்ரயத்தில் கீதை

ஆன்மீக உலகில் முமுக்ஷீக்களுக்கு பிரஸ்தான த்ரயம் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. பிரஸ்தான த்ரயத்தின் அறிமுகம் இல்லாவிடிப் பரமார்த்த தத்துவத்தைப் பற்றிச் சரியாக அறிதல் இயலாது. தசோபநிஷத்துகள், பகவத்கீதை, பிரம்ம சூத்திரங்கள் என்ற இவை மூன்று சேர்ந்து பிரஸ்தான த்ரயம் எனப் படுகிறது. பலவித தர்ம சூக்ஷ்மங்களையும் இது தன்னுள் அடக்கியுள்ளது. எனவே கீதை பிரஸ்தான திரயத்தில் ஒரு தனிபாடத்தைப் பெற்றுள்ளது. இம் மூன்றிலும் கூட உபநிஷத்திலும், பிரம்ம சூத்திரத்திலும் அடங்கியுள்ள பொருள்கள் யாவும் கீதையில் இருப்பதாலும், மொழி, நடை இவை கீதையில் எளிமையாகக் காணப்படுவதாலும் கீதை மக்களிடையே மிகுந்த செல்வாக்கு பெற்றுள்ளது.

"இன்னும் நான் கீதையைப் பின்பற்றுகிறேன். கீதை எனக்கு நல்ல புகலிடம் போன்றது, கீதையின் ஞானத்தைப் பின்பற்றியே நான் மூன்று உலகங்களையும் பரிபாலிக்கிறேன்" என்று கீதா மகாத்மியத்தில் விஷ்ணு கூறிய வாக்கு கீதையின் மகோன்னத நிலையை, அதன் முதன்மையைத் தெளிவாகக் காட்டுகிறது.

**"கீதாஸ்ரயோஉஹம் திஷ்டாமி**
**கீதாமே சோத்தமம் க்ருஹம்**
**கீதாக்ஞான முபாச்ரித்ய**
**திரிலோகான்பாலயாம்யஹம்"**

**– (கீதா மகாத்மியம் 7 )**

கீதையைப் பின்பற்றுவதால் பகவான் திரிலோகங்களையும், பிரம்மாண்டம் அனைத்தையும் பரிபாலிக்க இயலும்போது, அதனைப் பின்பற்றி மனிதன் தன் சிறிய இல்லத்தை பரிபாலிக்க இயலாதா? குடும்பத்தை பரிபாலிக்க இயலாதா? தப்பாது பரிபாலிக்க முடியும்.

'பூபுஜோ ஜனகாதயஹ' என்றவாறு ஜனகர் முதலிய பேரரசர்களும் கீதையைப் பின்பற்றி அவ்வாறே பரிபாலித்தனர். கீதையைப் பின்பற்றி அனைவரும் அவரவர் சம்சாரத்தை, தத்தம் வாழ்க்கை ஓடத்தை நிலையாகச் செலுத்த இயலும். எனவே தாபத்ரயத்தால் உந்தப்பட்டு, கோரமான சம்சாரமெனும் காட்டில் துக்கமற்ற அமைதியான வாழ்க்கையை அடைய விரும்பும் ஒவ்வொருவரும் கீதையின் உதவியை நாடியே தீரவேண்டும்.

"கீதா ரக்ஷதி ரக்ஷிதா"

எவர் கீதையைக் காப்பாற்றுகின்றாரோ அவர்களை கீதை காப்பாற்றும். அதாவது, கீதையை எவரொருவர் நாடுகின்றார்களோ அவர்களை பிறப்பெனும் கடலின்றும் கீதை கடைத்தேற்றும் என்பது பொருள், எனவேதான் பயங்கரமான சம்சாரக் கடலை கடக்க விரும்புவன் கீதை என்ற நாவாயை அணுக வேண்டியது அவசியம் என சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது;

"ஸம்சார சாகரம் கோரம்தர்த்து மிச்சதி யோ நரஹ
கீதா நாவம் ஸமா ஸாத்ய பாரம் யாது ஸுகேன சஹ"
- ( வைஷ்ணவீய தந்த்ர சாரம்)

# கலிகால மருந்து

கலிகாலத்தில் தர்மம் ஒரு காலிலேயே நடக்குமென்பதாலோ அன்றி கலி தனது முழு ஆற்றலுடன் எழுச்சியுற்று மக்களைத் தீய வழியில் நடத்தி பேரழிவுக்கு இட்டுச் செல்வான் என்பதாலோ என்னவோ கருணையுள்ளம் கொண்ட பகவான் கிருஷ்ணாவதாரம் எடுத்து கலிகாலத்திற்கு சிறிது முன்பாகவே கிதாம்ருதத்தை மக்க்ள அடையும்படி செய்தார்.

இல்லையெனில் கிருத யுக்த்தில் இதன் வழிக்கு ஏன் அவர் போகவில்லை? திரேதாயுகத்தில் இதைப் பற்றி ஏன் எண்ணவேயில்லை? துவாபரயுகத்தின் கடைசிவரை எதற்காகக் காத்துக் கொண்டிருத்தல் வேண்டும்? வியாதி முதிர்ந்த பின்னரே சரியான மருந்தளித்தல் வேண்டுமென அவர் நினைத்ததைப் போல் உள்ளது, எது எப்படியாயினும், கலிதோஷ பயம் மக்களுக்கு இனி இல்லை, மாந்திரிகனுக்கு கிரகங்களின் தோஷம் தாக்குவதில்லை. அதைப் போன்று கீதா மந்திரத்தை ஓதினால் மனிதனுக்கு சம்சார தோஷம், தாபம் இவை அணுகுவதில்லை,

ஒருவேளை அப்படியே அணுகினாலும் அதனை வேரோடு அறுக்கவல்ல சக்தி கீதா மந்திரத்திற்கு உள்ளது,

"பாட மாத்ர பராபூத கால கிங்கர கர்ஜிதம்"

"கீதையை ஓதினால் யமகிங்கரர்களின் கர்ஜனை வெறுமையாகி விடும்" என்று பத்ம புராணத்தில் கீதா மகாத்மியத்தில் கூறப்பட்டுள்ளது. கீதையின் ஒவ்வொரு ஒலி அதிர்வுக்கும் பாபங்களை எரித்து சாம்பலாக்கக் கூடிய அக்னியின் சக்தி உண்டு என்று சொல்வதில் மிகையேதுமில்லை. எனவேதான் பண்டிதர் முதல் பாமரர் வரை, அரசர் முதல் ஆண்டிவரை, பூசுரர்கள் முதல்

சண்டாளர்கள் வரை அனைவரும் கீதையை நாடி அதனால் சகல நன்மைகளையும் சாந்தியையும் அடைந்து வருகிறார்கள், கீதையெனும் கங்கா ஸ்நானத்தால் இதுவரை எத்துணையோ பேர் கடைத்தேறியுள்ளனர், இப்பவும் கடைத்தேறுகின்றனர், இனியும் கடைத்தேறுவர், சங்கராச்சாரியார் கீதையின் சிறப்பைக் குறித்து இவ்வாறாகத் தெரிவித்துள்ளார்.

**"பகவத் கீதா கிஞ்ச தத்தா**
**கங்காஜலலவ கணிகா பீதா**
**ஸக்ருதபி யேன முராரி ஸமர்ச்சா**
**தஸ்ய கரோதி யமோ(அ)பி ந சர்ச்சாம்"**

பகவத் கீதையை ஒருவாறாக முறையே ஓதி வந்தாலும், கங்கை நீரை சிறிதளவே அருந்தினும், விஷ்ணுவை ஒருமுறை பூசித்தாலும், யமன் அவர்களிடம் அணுக இயலாது. எனவே கீதையிடத்து முழுமையான நம்பிக்கை வைத்து, அதில் கூறப்பட்டுள்ள சத்தியத்தைக் கடைபிடித்து, பரமானந்தத்தை அனுபவிப்பதற்கு ஒவ்வொருவரும் உறுதி பூணுதல் வேண்டும்,

## அன்றாட வாழ்க்கை உறுதுணை

கீதை கிருஷ்ணருக்கும் அர்ச்சுனருக்கும் இடையே நடந்த உரையாடல் மட்டுமேயன்று அது ஒவ்வொருவரின் இதயத்திலும் எப்போதும் நடந்து கொண்டிருக்கும் உரையாடலே. அர்ச்சுனனைப் போன்று நம் செவிகளை கிருஷ்ண பரமாத்மாவிடம் திருப்பினால் அந்த தெய்வவாக்கினை நாமும் கேட்டறிதல் இயலும். பிறநூல்களைப் போல் இதனை ஒருமுறை படித்துவிட்டுப் புறம்தள்ள இயலாது, இது நாவலைப் போன்று ஒருமுறை படித்துவிட்டு ஒதுக்கக் கூடியதல்ல, இது தினசரி வாழ்க்கைக்கு உறுதுணை. இதனை எப்போதும் தவறாது ஓதி அதில் கூறப்பட்டுள்ள தர்மங்களை அன்றாட வாழ்க்கையில்

கடைபிடித்து வரவேண்டும், ஆபத்துக் காலங்களிலும, சம்சாரத்தில் ஏற்படும் மன உளைச்சல்களின் போதும் ஒரு ஜீவனுக்கு கீதையளிக்கும் உதவி மகத்தானது, நோயாளியின் அருகிலேயே வைத்தியர் இருக்கும்போது நோயாளிக்கு எத்தகைய மனோதைரியம் ஏற்படுகிறதோ., மன உளைச்சலில் சிக்கித் தவிக்கும் ஒரு சிஷ்யனுக்கு அருகில் ஒரு நல் அனுபவம் வாய்ந்த குரு இருக்கையில் எத்தகைய மகிழ்ச்சி ஏற்படுமோ அவ்வாறே பவதுக்கத்தால் அவதியுறும் மனிதனின் அருகில் கீதை இருப்பின் அத்தகைய ஊக்கம் ஏற்படுகிறது, காந்தி மகாத்மாவின் அனுபவ பூர்வமான வாக்கியங்கள் சாதனையாளர்களுக்கு உற்சாகம் அளிக்கக் கூடியது,

"ஐயங்கள் என்னை சூழும்போதும், துன்பங்கள தொடரும் போதும், நிராசையும், சோர்வும், உற்சாகமின்மையும் ஏற்படும் போதும் நான் பகவத் கீதையை திறந்து பார்ப்பேன், அதில் ஏதோ ஒரு சுலோகம் என்னைத் தேற்றும், அதன் பலனாய் மிகவும் ஆபத்தான கட்டங்களில் கூட என் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டேயிருக்கும், என் வாழ்க்கையில் பலவிதமான மேடு பள்ளங்கள் இருப்பினும், பயங்கரமான துன்பங்களை நான் அனுபவிக்க நேரிடினும் அவை எவையும் சிறிதளவும் என் அமைதிக்கு பங்கம் ஏற்படுத்துவதில்லை. இவையனைத்தும் கீதா போதனையின் நற்பலனேயாகும்". இதனை உணர்ந்தே நம் பெரியோர்கள் கீதை பாராயணம் என்பதை ஏற்படுத்தி அதனை நாம் அனு தினமும் மறவாதிருக்கும் வண்ணம் நடைமுறைக்குக் கொணர்ந்தனர். அவ்வாறு செய்தால்தான் கீதையின் பொருள் இதயத்தின் உட்புகுந்து, அன்றாட வாழ்க்கையையே ஒரு தெய்வ வாழ்க்கையாக மாற்றிவிடும். மற்றும் அரக்கன் மனிதனாக மாறி முறையாக தெய்வமாகவே வளர்ச்சியடைவான். இதுவே கீதையின் ஈடு இணையற்ற பேராற்றல், இத்தகைய உயர்ந்த உன்னதமான நூலை நமக்களித்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிற்கும், ஸ்ரீ வேத வியாசருக்கும் நாம் எத்துணையோ கடமைப்பட்டுள்ளோம்

# துக்கத்தைத் தொலைத்து ஆனந்தம் அளிப்பதே கீதையின் இலக்கு

கீதை என்றால் கானம் செய்யப்பட்டது என்று பொருள் கானம் என்பது நாம் மகிழ்ச்சி யோடிருக்கும் போது உண்டாவதேயன்றி துக்கத்தில் இருக்கும் போதல்ல. எனவே ஆனந்தமே கீதையின் இலட்சியம். முடிவான குறிக்கோள் அதற்காகவே அது பாடுபடுகின்றது என்பதை ஒவ்வொரு முமுக்ஷுவும் எப்போதும் ஞாபகத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். ஆனந்த நிலையத்திற்கு வழிகாட்டுதலே கீதையின் பணி. 18 அத்தியாயங்களில் விரிவான போதனைகளின் மூலமாக நிரந்தரமான ஆனந்தத்தை அடையக்கூடிய பல்வேறு உபாயங்களையும் கீதை, 'அசோச்யான்' (துக்கப்படுவதற்குத் தகாதவர்களைக் குறித்து) என்று ஆரம்பித்து, 'மா சுசஹ' (துன்பப்படுதல் வேண்டாம்) என்ற பதத்துடன் முடிகிறது. துன்பத்தை அழித்து ஆனந்தத்தை அளித்தல்' - இதுவே கீதையின் மூலம் நமக்குக் கிடைக்கும் மிகப் பெரிய பலன். சம்சாரம் எனும் காட்டுத்தீயில் சிக்கி, மூன்று விதமான தாபங்களிலும் உழன்று கொண்டிருக்கும் மக்களுக்கு இவ்விதமாக கீதை மிகப்பெரிய உதவி செய்துள்ளது. கீதை துக்கத்தால் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருப்பவனுக்கு ஆறுதல் அளிக்கிறது. ஆபத்தில் இருப்பவனுக்கு அவன் முதுகில் தட்டிக் கொடுத்து இதயத்தில் தைரியத்தை உண்டாக்குகிறது. நிராசையினாலும், உற்சாகமின்மையாலும் வருந்துபவனுக்கு உற்சாகம் ஏற்படச் செய்கிறது. எனவே எத்தனையோ பேர் கீதையன்னையின் சந்நிதியை அடைந்து அற்புதமான மனோவளர்ச்சியடைந்து பெரும் பேறு பெற்றுள்ளனர்.

இதுவரை, கீதையின் மகிமைகளை ஆராய்ந்து புறநோக்கில் கண்டோம். இனி அதன் உட்சென்று அதன் அழகினை அனுபவிப்போம். அவ்வாறு அதன் உள்நுழையும் முன்பு கீதை எந்த நிலையில் எப்படி எழுதப்பட்டது என அதன் மூலத்தைப்பற்றிச் சுருக்கமாக அறிவோம். கீதை

கற்பனையன்று., அது சரித்திர நிகழ்ச்சிகள் கொண்டது என்பதை நாம் முதலில் அறிதல் வேண்டும், ஸ்ரீ கிருஷ்ணர், அர்ஜுனன் முதலானோர் சில காலத்திற்கு முன்பு நம் பாரத தேசத்தில் வாழ்ந்த சரித்திர புருஷர்களேயன்றி கற்பனைப் பாத்திரங்களல்லர். இவ்வுண்மையை அறிந்து கொண்டால் கீதையின்மீது இன்னும் அதிகமான நம்பிக்கை ஏற்படும்,

## கீதையின் தோற்றம்

பாண்டவர்கள், கௌரவர்கள் இருவரும் இணைந்து ஒருவருக் கொருவர் ஒற்றுமையுடன் வாழ்ந்திருக்கையில், பொறாமையெனும், வேர்க்கொல்லி, துரியோதனனின் சித்தத்தில் புகுந்து சிறிது சிறிதாக அவனது விவேகத்தை அரிக்கத் தொடங்கியது, அதன்பலனாக துரியோதனன், சகுனி முதலானோரின் உதவியுடன் குறுக்கு வழியில் சென்று பாண்டவர்களைச் சூதாட்டத்தில் நொடித்துப் போகச் செய்து, அவர்களின் அரசை அபகரித்து, பன்னிரெண்டு ஆண்டுகள் வனவாசம், ஓராண்டு அஞ்ஞானவாசம் செய்வித்து, அப்போதும் அவர்களது அரசை அவர்களிடம் ஈயாது பலவிதமான துன்பங்களுக்கு உள்ளாக்கினான், இராஜ்யத்தில் பாதியேயன்று, கால்பங்கு கூட அன்று, ஐந்து கிராமங்கள் கூட அன்று, ஒரு ஊசியளவு இடம் கூட பாண்டவர்களுக்குத் தரமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தான். இருவருக்கும் இடையில் ஸ்ரீ கிருஷ்ணர் தூது சென்றார். ஆயின் எவ்வித பலனும் இல்லாமல் போயிற்று, பாண்டவர்களின் எளிய கோரிக்கையைக் கூட துரியோதனன் அகங்காரத்துடன் மறுத்து விட்டதால் வேறு வழியின்றி பாண்டவர்கள் தர்மயுத்தம் மேற்கொள்ளும்படியாயிற்று. இரு பக்கமும் போர்வீரர்கள் போர் புரிவதற்கு எதிர்ப்பட்டனர், தர்ம க்ஷேத்ரமான குருக்ஷேத்திரத்தில் பாண்டவ, கௌரவ சேனைகள் அம்பு எய்வதற்கு தயார் நிலையில் உள்ளனர், போர்ச்சங்கும் முழங்கியாயிற்று, நாண் பூட்டியாயிற்று, அச்சமயத்தில் பார்த்தனின் கோரிக்கைப்படி பார்த்தசாரதி ரதத்தை இரண்டு சேனைகளுக்கிடையில் நிறுத்தவே, பார்த்தன்

எதிரி சைன்யங்களில் தம் அண்ணன்மார், தம்பியர், மாமன்மார், தந்தையர், தாத்தா, பக்திக்குரிய குருமார்கள் இருப்பதைக் கண்டு, 'என் சுற்றத்தார், என் மக்களுடன் போர் புரிவது எங்ஙனம்? இது பெரும் பாவத்திற்கு காரணமாகுமல்லவா? சுற்றாரையும், உற்றாரையும் கொன்றுகுவித்து, இராஜ்யமடைவதற்கு பதிலாக பிச்சையெடுத்து வாழ்க்கை நடத்துவதுமேல்' என்று பலவிதமாக வருந்தி, துக்க மேலீட்டால் காண்டீபத்தை நழுவவிட்டு, இரதத்திலேயே சோர்ந்து அமர்ந்துவிட்ட பார்த்தன், தானே முடிவு எடுக்கும் நிலையில் இல்லாது, தர்மம் எது, அதர்மம் எது எனக் குழம்பியிருந்த வேளையில், ஸ்ரீ கிருஷ்ணரின் பாதத்தைச் சரணடைந்து,

**"சிஷ்யஸ்தேஹம் பாஹி மாம் த்வாம் ப்ரபன்னம்"**

- நான் உன் சிஷ்யன். நின்னைச் சரணடைந்தேன். (எனது கடமையை போதித்து) என்னைக் காப்பாற்று என மிகவும் தீனமாக வேண்டி நின்றான். அப்போது பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்தார், கீதை ஏற்பட்டதற்கான முன் கதை இது, யுத்த களத்தில், 'நான்' 'எனது' (அஹம், மம) என்ற மாயையின் தோற்றத்தால் அர்ஜுனனிடத்து மோகம் (அஞ்ஞானம்) தோன்றி, அவனைக் கடமையாற்ற இயலாது செய்துவிட்டது, ஸ்ரீ கிருஷ்ணரின் போதனை அனைத்தும் அவ்வாறான மோகத்தின் மேல் செலுத்தப்படும் கதாயுதமே ஆகும். தேக அபிமானத்தால் ஏற்படக் கூடிய அஞ்ஞானத்தை பகவான் தன் ஆத்ம ஞான உபதேசத்தால் தூள் தூளாக்கினார், மற்றும், 'என் அஞ்ஞானம் தொலைந்தது, நீ சொன்னபடி நான் செய்கிறேன்' என்று ஸ்ரீ கிருஷ்ணர் அர்ச்சுனனைத் தன் வாயாலேயே சொல்ல வைத்தார்,

இவ்வாறாக, அர்ஜுனனின் அஞ்ஞானத்தைப் போக்கிய கீதை அனைவரின் அஞ்ஞானத்தையும் போக்கவல்லது, ஒருவரின் நோயைப் போக்கக் கூடிய சக்தி வாய்ந்த மருந்து அனைவரின் நோயையும் போக்கக் கூடியது. இதில் சிறிதளவும் ஐயமில்லை, பார்த்தனின் மூலமாக ஜனசமூகத்தினர் அனைவருக்கும் ஸ்ரீ கிருஷ்ணர் உபதேசம் செய்துள்ளார்

என்பதில் தவறேதுமில்லை, ஆயின் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே நன்றாகப் பரிசோதித்துக் கொண்டு, ஜன்ம ஜன்மாந்தரமாக நம்மிடத்து நிலைபெற்றுள்ள காமக் குரோதம் முதலான அஞ்ஞான இருளையகற்றி, கீதையெனும் ஞான ஒளியினால் முக்தியடைந்து நிலையான பேரின்பத்தை இந்தப் பிறவியிலேயே அடைந்து அனுபவிப்போமாக.

## கீதைக்கு அதிகாரி

கீதையைப் படிப்பதற்குரியர் யார்? என்ற வினா எழுதல் இயற்கை. நல்ல தண்ணீரை அருந்துவதற்குரியர் யார்? தாகம் உடையவர். அன்னம் தின்பதற்கு எவர்க்கு அதிகாரம் இருக்கிறது, பசியோடிருப்பவருக்கு. மருந்து எவருக்கு அவசியம்? நோய் உள்ளவர்க்கு, எனவே அனைவருமே கீதா ஞானம் என்ற மருந்தினை உண்பதற்குரியரே யாவர், பவரோகம் என்ற நோயால் பீடிக்கப்பட்டவர் எவர் என்ற வினா இங்கு எழுகின்றது, இவ்வுலகில் பிறந்தவர் யாவரும் பவரோகியேயாவர். துன்பங்கள் அனுபவிப்பவர் யாவரும் சம்சார நோயால் பீடிக்கப்பட்டவரே. பிறப்பிறப்பு எனும் சுழல் சக்கரத்தில் அகப்பட்டு உழலுவோர் அனைவருமே ஏதோவொரு விதத்தில் இந்நோயால் பீடிக்கப் பட்டவரே யாவர். எனவே ஜாதி, மதம், இனம், மூப்பு, இளமை என்ற பேதங்களின்றி அனைவருமே கீதையைப் படிப்பதற் குரியவராவர். கீதா ஞானத்தைப் பெறுவதற்குரியராவர். அப்படி யாயின் தனக்கு நோய் உள்ளதென்று உணர்ந்தவனே மருந்தினைத் தேடுவான். வைத்தியரிடத்தும் தான் உண்ணும் மருந்தினிடத்தும் முழு நம்பிக்கையுடையவனுக்கே அவை நன்றாக வேலை செய்யும். பிறப்பிறப்பெனும் சம்சார வியாதியால் தான் அவதியுறுகிறோம் என்று உணர்ந்தவனுக்கே கீதையைப் போன்ற நல்ல நூல்களை படிக்க வேண்டுமென்ற உணர்வு தோன்றும். மற்றும் சாத்திரங்கள் மீதும்இ அதனைப் போதித்த புண்ய புருஷர்கள் மீதும் முழுமையான நம்பிக்கை வைப்பவர்க்கே அவை நற்பலனை அளிக்கவல்லது. பிறருக்கு பலன் அளிப்பதில்லை. எனவேதான் ஸ்ரீ கிருஷ்ணர் 'கீதையைக்

கற்பதற்குரியர் யார்? என்ற வினா எழுந்த போது இவ்வாறாகக் கூறினார்.

"இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன
நசாஸுஸ்ருஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி"
(18-67)

'ஏ அர்ஜுனா., இந்த கீதாசாஸ்திரத்தை பிறப்பிறப்பெனும் சம்சாரத்தினின்றும் தப்பித்தல் வேண்டும் என்ற மனோவியாகூலம் இல்லாதவர்க்கும், பெரியோர்களையணுகி அவர்களுக்குச் சேவை செய்யாதவருக்கும், என்னை (பகவானை) நிந்திப்பவர்க்கும் எக்காலத்தும் போதிக்கவேண்டாம்." அத்தகையோர் கீதையைப் படித்தலும் கூடாது என்று கீதையின் முடிவில் கூறுகிறார். மற்றும் எவர் கீதையின் தத்துவத்தில் அக்கறையுள்ளவரோ, அசூயை அற்றவரோ, அனுதினமும் பின்பற்ற வல்லவரோ அவர் தத்தம் கர்ம பந்தத்தினின்றும் விடுபடுவர். அவ்வாறின்றி எவர் இதனை வெறுத்து, சொல்லிய வண்ணம் செய்யாது இருக்கின்றனரோ - அவர்கள் ஞானம் ஏதும் அற்றவராய், அறிவிலிகளாக நசித்துப் போனவராய் இருப்பர்." என்று வேறோரிடத்துக்கூறுகின்றார்.

1. "யே மே மதமிதம் நித்யமனுதிஷ்டந்தி மானவாஹா
ச்ரத்தாவந்தோ(அ)நஸூயந்தோ முச்யந்தே தே(அ)பி
கர்மபிஹி" -(3-31)

2. 'யே த்வேததப்யஸூயந்தோ நானு திஷ்டன்தி மே மதம்
ஸர்வக்ஞான விமூடாம்ஸ்தான் வித்தி நஷ்டாந
சேதஸஹ" - (3-32)

எனவே அக்கறை, நம்பிக்கையுள்ளவர் அனைவரும்., முக்தியடைதற்கு எண்ண முடையவரனைவரும் கீதையைப் படித்தற்குரியர் ஆவர். 'மானவாஹா' என்று பொதுச் சொல்லைப் பகவான் பயன்படுத்தியதால் ஜாதி, மத, குல, இன வேறுபாடின்றி அனைத்து மக்களும் கீதையின் சேவைக்கு முழுமையான அதிகாரமுடையவர் என்பது தெளிவாகின்றது.

இனி கீதையின் உள் நுழைந்து அதில் அமைந்த தனித்தன்மையினை ஒவ்வொன்றாக ஆராய்வோம்.

## கீதையில் அனுஷ்டானத்திற்கு முதன்மை

வெறும் கொள்கைகளை மட்டும் கூறிக் கொண்டே செல்லாமல் அதனைப் பின் பற்றும் வழிமுறைகளை பலவாறாக வலியுறுத்திச் சொல்லிக் கொண்டே போவது கீதாச்சார்யனுக்கு மிகவும் பிடித்தமானது. எனவேதான் பரமாத்வைப்பற்றி ஓரிடத்தில் மட்டும் சிறிதளவே கூறி அவரை அடையக் கூடிய சாதனை வழிமுறைகளை மிக விரிவாக கூறிச் செல்கிறார். இரண்டாம் அத்தியாயத்தில் நிறைஞானியின் இலக்கணம், ஆறாம் அத்தியாயத்தில் யோகாப்பியாச முறை, பன்னிரெண்டாம் அத்தியாயத்தில் பக்தனின் இலக்கணம், பதி-மூன்றாம் அத்தியாயத்தில் தேவ அசுர இயல்பு முதலானவைகளே இதற்கு எடுத்துக் காட்டு. கோட்பாடுகளை, விட செயல் முறையே சிறந்தது என இதன் வழி அவர் தெரிவிக்கிறார். கீதையை விரித்தவுடனேயே இவ்வுண்மை தெளிவாகப் புலப்படுகின்றது. நெறிதவறியவனுக்கு ஆன்மிக நெறிமுறைகள் எக்காலத்தும் எட்டுவதில்லை. சித்த சுத்தி இல்லாதவர்க்கு ஞானம் ஏற்படுவதில்லை. தரிசு நிலத்தில் எந்தப் பயிரும் விளைவதில்லை. எனவே இதய சுத்திக்கு சாதனைகள் மிகவும் அவசியமானதொன்று. இவ்வுண்மையை மீண்டும் மீண்டும் வலியுறுத்தவே கீதாச்சார்யன் ஒழுக்கத்திற்கு (Character - building) முக்கியத்துவம் அளிக்கின்றார்.

நாம் பரமாத்மாவிடம் காட்டும் அன்பில் ஒரு சிறு பாகமேனும் நாம் செய்யக் கூடிய சாதனைகளின் மேல் வைத்தால் நமது இலக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாய் எளிதில் கிடைக்கும். ஆயின் மக்கள் அவ்வாறு செய்வதில்லை. இறைவனிடம் உள்ள புனிதத்தன்மை ஜீவனிடமும் இருந்தால்தான் முக்தி சித்திக்கும், இல்லையெனில் இறைவனிடத்தும் ஜீவனிடத்தும் உள்ள இடைவெளி அப்படியே நின்றுவிடும்.

'சத்வ புருஷயோஹ் சுத்தி ஸம்யே கைவல்யம்' - சித்தம் பரமாத்விற்கு சமமான தூய்மையடைவதே கைவல்யம் என பதஞ்சலி முனிவர் கூறுகின்றார். எனவே சித்தம் நிர்மலமாக இருப்பதற்குண்டான வழிகளைக்கண்டு முமுக்ஷுக்கள் அதற்கான சாதனைகளைத் தவறாது செய்தல் வேண்டும். பாரததேசம் முன்பிருந்த உன்னத நிலையை இப்போது அடைய இயலாமல் போனதற்கான காரணம் இதுவேயாகும். கொள்கை மீதுள்ள பிடிப்பு வழிமுறைகளின் மீது இல்லாமல் போனதேயாகும். நடைமுறையில் பின்பற்றுவது' குறைந்து போய் வெறும் வரட்டு வேதாந்தமாகப் போனதே காரணம் என்பதை மக்கள் உணர்தல் வேண்டும். இவ்வழி கீதாச்சார்யனுக்கு உடன்பாடன்று, எனவேதான் அறியப்படும் பொருளைப்பற்றிக் குறைவாகவும் ஞானத்தைப் பற்றி விரிவாகவும் கூறுகிறார். இலக்கினைப் பற்றி சிறிதளவே கூறி தியானத்தை மிகுதியாகக் கூறுகிறார். முதன் முதலாக கீதா போதனையில் சாதகன் அறிய வேண்டிய பரம இரகசியம் இதுவே, கீதை நடைமுறை விஞ்ஞானம் (Practical Science) என்பதை அனைவரும் நினைவில் நிறுத்துவோமாக நடைமுறையில் பின்பற்றி பலன் அடைவோமாக.

## கீதை உலகியலினின்றும் வேதாந்தநிலைக்கு உயர்த்தக் கூடியது.

"கர்மாவைச் செய்தல் தவறன்று வியவகாரம் தூற்றப் பட வேண்டியதல்ல. உன் பார்வையைச் சரியாக வைத்துக் கொள். அப்போதே நீ செய்யும் செயல்கள் யாவும் ஒரு மஹா யக்ஞம் போன்றதாகும். உன் எண்ணத்தைச் சுத்தமாக வைத்துக்கொள். அச்சமயத்தில் நீ செய்யும் செயல்கள் உனக்கும் பிறருக்கும் மேன்மையையுண்டாக்குகிறது." என்று கீதை கோஷமிடு கின்றது. செயல்கள் எதுவுமின்றி ஒரு நிமிடம் கூட மனிதன் இருக்க இயலாது. எனவே கர்மாக்களை நிந்தித்து, ஒதுக்கித் தள்ளி வைக்கும் படி கூறப்படும் போதனைகளால் சாதாரண மனிதனுக்குச் சிறிதளவும் பயனில்லை. அத்தகைய போதனைகளால் அவன் செயலற்று ஜடமாய் மாறிப்

போவான். வாழ்க்கை ஒரு பிடிப்புமின்றி அர்த்தமில்லாமல் போகும். உலகில் 90 சதவிகித மனிதர் இல்வாழ்க்கையில் ஈடுபட்டவரே, அல்லது பிரம்மச்சாரிகளாக இருப்பவர். அவர்கள் செயலற்று இருத்தல் இயலாத காரியம். சமுதாயத்தினின்றும் ஒதுங்கித் தனிமையில் காலம் கடத்தும் சந்நியாசிகளும், முனிபுங்கவர்களும் மிகச் சிலரே. எனவே பலருக்கும் பயன்படும் அறிவுரையே தேவை. இவையனைத் தையும் ஆலோசித்தே கீதாச்சார்யன் செயலாற்றுதலைத் தூற்றாமல் அதற்கு புனிதத்வத்தைக் கொடுப்பதற்கான வழிகளை ஆராய முயன்றார். மேலும் அத்தகைய செயல்களை செவ்வனே செய்வதன் மூலமாக சித்த சுத்தியடைந்து முறையாக ஞானத்தைப் பெற்று அனுபவித்து முக்தியடைதல் கூடும் என்று பலவிடங்களில் வலியுறுத்துகிறார்.

"ஸ்வகர்மணா தமப்யர்ச்ச ஸித்திம்
விந்ததி மானவஹ (18-46)

அவரவர் கடமையைச் செய்வதன் மூலம் பரமாத்மாவை அர்ச்சித்து மனிதன் முக்தியடைய இயலும்" என்று பகவான் வாக்களித்துள்ளார். இதற்கு முக்கியமான சான்றாக நிற்பவன் அர்ஜுனனே. ஏனெனில் " நான் போர் புரிய மாட்டேன். எனக்கு இராஜ்யம் அவசியமில்லை. நான் தனிமையில் இருந்து பிச்சையெடுத்து உண்டு என் காலத்தைக் கழித்து விடுவேன்".

"ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே" - (2-5)

என்று கூறிய அர்ஜுனன், கிருஷ்ணரின் போதனையால் போர்க்களத்தில் புகுந்து போர்புரிந்து " நான் ஒன்றும் செய்யவில்லை" எனப் பற்றின்றியிருந்து, பயங்கரமான போர்க்களத்தை புனித யக்ஞமாக மாற்றியமைத்தான். கிருஷ்ணரை முன் வைத்து அர்ஜுனன் செயல்புரிந்தான். செய்யும் செயல்களே முக்திக்கு வழிகாட்டியாக மாறுதற்கு இதே வழி (இறைவனுக்கு அர்ப்பணித்தல்) இறை நாமங்களை உச்சரித்த வண்ணம் செயல் புரிதலே முக்திக்கு வழி.

"மாமனுஸ்மர யுத்யச"-

'என்னை நினைத்த வண்ணம் யுத்தம் செய்', இதுவே கர்ம இரகசியம். யுத்தம் செய்வது உயர்ந்ததன்று. இறைவனை நினைத்த வண்ணம் செய்தல் உயர்ந்தது. நாம் செய்யும் செயல்களின் பலனை ஈசுவரார்ப்பணம் செய்தல் உயர்ந்தது. அப்போது 'கர்மாவானது' 'கர்மயோகமாக' மாறிவிடும். (Work will be transformed into Worship) தனிமையில் சமாதி நிட்டையில் இருக்கும் முனிபுங்கவர்களுக்கும், உலகில் பலவிதமாம செயல்களில் ஒன்றிப் போய் ஈடுபட்டிருப்பவனுக்கும் ப்லன் ஒன்றே. இருவரும் பெறுவது ஆத்ம சாந்தியே, பகவத்கீதை போதிக்கும் தத்துவம் இதுவே. உலகில் சில சாத்திரங்கள் செயல்கள் புரிவதை முழுவதுமாகத் தடுக்கிறது. அவை 'நிவிருத்தி மார்க்கத்தையே' பெரிதும் போற்றுகின்றன. மற்றும் சில கர்மாவை ஓரளவு போற்றுகின்றது. அவை 'பிரவிருத்தி' மார்க்கத்தைச் சேர்ந்தவை. ஆயின் கீதை பிரவிருத்தியுமின்றி, நிவிருத்தியும் இன்றி இரண்டிற்கு மிடையே அனைவரும் பின்பற்றக்கூடிய ஒரு வழியைத் தோற்றுவித்தது, சரீரத்தை பிரவிருத்தியிலும், மனதை நிவிருத்தியிலும் வைக்குமாறு கீதை போதிக்கிறது. (Hands in the Society and head in the forest) கீதையின் இவ்வழியிலேயே ஜனகர் இராஜ்ய பரிபாலனம் செய்தார், விஷ்ணுமூர்த்தியும் மூவுலகையும் இவ்வாறே பரிபாலிக்கிறார்.

"கீதே ஞான முபாச்ரித்ய த்ரீன்
லோகான் பாலயாம்யஹம்"

இவ்வாறாக கீதாச்சார்யன், வேதாந்திகள் சாதாரணமாக அருவருக்கும் உலகியல் வாழ்க்கைக்கு ஒரு புதிய உருவம் கொடுத்து, கொள்கைகளைவிட உலக நடைமுறைக்கு முக்கியத்துவம் அளித்து அதற்கு ஒரு உயர்ந்த நிலையை அளித்தார், இத்தகைய உயர்ந்த ஒரு கொள்கை எந்த சாத்திரங்களிலும் கூறப்படவில்லை, எனவேதான் கீதைக்கும், கீதாச்சார்யனுக்கும் இத்தகைய உயர்வு கிடைத்தது,

# கீதை - அனைத்து யோகங்களின் தொகுப்பு

உலகில் கர்மா, பக்தி, யோகம், ஞானம் என்ற வழிகளைப் பின்பற்றுவோர் ஆன்மீக உலகில் பலர் உள்ளனர், ஆயின், அவர்களில் சிலர் தத்தம் வழிமுறையே சிறந்தது என்றும் பிறவற்றை இழிவானவை என்றும் வாதிப்பர், தத்தம் வாதங்களை பலப்படுத்துவதற்காக அவர்கள் சில பிரமாணங்களை எடுத்துக் காட்டுவர், இவ்வாறு தத்தம் மதத்தைப் போற்றுவதையும், பிறர் மதத்தைத் தூற்றுவதையும், தம் வழியை உயர்த்திப் பேசி பிறவற்றை விமர்சிப்பதும் இவ்வுலகில் பெருவழக்காக இருப்பதை கண்டு, இதனை ஒழிப்பதற்காக ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையை இயற்றி சர்வமத சமரசத்தை மக்களிடையே பரவச் செய்தார், மோக்ஷம் எனும் மாளிகைக்கு கர்மா, பக்தி, தியானம், ஞானம் என்ற நான்கும் நான்கு வழிகள் என்றும், எவ்வழியில் சென்றாலும் அதனை அடைதல் கூடும் என்றும் அவர் 'கூறுகின்றார், நதிகளனைத்தும் கடலில் ஒன்று கலப்பதைப் போல, அனைத்து வழிகளே ஜீவனை கைவல்ய பதத்திற்கு சேர்க்கும் என்றும் கூறுகின்றார். எவ்வழியில் சென்றாலும் தவறில்லை, அவரவர் வாழ்க்கை முறைக்கு ஏற்ப அவரவர்க்கேற்ற கொள்கைகளை பின்பற்றுவதற்கு முழு உரிமையுடையவர் என்று கீதை சொல்கிறது,

சிலரது மனம் இயல்பாகவே செயலில் ஈடுபடும் தன்மை வாய்ந்தது, அவர்கள் தவறாமல் கர்மமார்க்கத்தையே பின்பற்றுவர். இத்தகையோர் செயல் ஆற்றுவதிலேயே உலக சேவையில் ஈடுபடுவதிலேயே ஆனந்தம் அடைவர். கர்ம தத்துவத்தையும் அதன் இரகசியத்தையும் நன்கறிந்து நிஷ்காம நிலையில் செயலாற்றுமாறு கீதை 'கர்மயோகம்' என்ற அத்தியாயத்தை இயற்றியது போலும்.

சிலருக்குச் சித்தம் இயற்கையாகவே ஆவேச உணர்வுடன் பக்திப் பரவச நிலையிலும் இருக்கும். அத்தகையோர் பக்திமார்க்கத்தைப் பின்பற்றுவர். ஜபம், பூசை, பிரார்த்தனை,

சங்கீர்த்தனை, நாமஸ்மரணை முதலானவற்றில் மிகவும் ஈடுபாடுடையவராய் இருப்பர். அத்தகையோர்க்கு 'பக்திமார்க்கம்' என்ற அத்தியாயத்தை இயற்றி அதனையே பின்பற்றி முக்தியடைய உற்சாகப் படுத்துகின்றது.

அவ்வாறே சிலரது சித்தம் தியான வழியில் (Meditative) ஈடுபடும். வெளிப்படையான பூசை முறையில் விருப்பமின்றி மனத்தை உள் முகமாகச் செலுத்தி தியான நிட்டையில் இருப்பதற்கு முயல்வர், அத்தகையோருக்காக கீதை தியான யோகம் அல்லது ஆத்மசம்யம யோகம் என்ற அத்தியாயத்தை ஏற்படுத்தி உள்ளது.

இம்மூவரேயன்றி சிலர் ஞானியர். அவர் எந்நேரமும் அறிவுபூர்வமாக சிந்தித்துப் கொண்டேயிருப்பவர். (Rational) இத்தகையோர் உண்மை, பொய் - ஆத்மா, அநாத்மா, உடல், உயிர் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பர். அவர்களுக்கு எண்ணத்தின் ஆற்றல் அதிகம், (Will power) அத்தகைய இயல்புடையார்க்கு எனவே கீதையில் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் முதலானவை உள்ளன.

இவ்வாறு உலகில் உள்ள பலவித மனோ நிலையையுடையவர் அனைவர்க்கும் ஏற்ற விதத்தில் வீடு பேற்றிற்கான வழியை உபதேசித்து அனைத்து வழிகளும் சத்தியமே என நிருபித்து ஒருவருக்கொருவர் வெறுப் புணர்ச்சி, காழ்ப்புணர்ச்சி இவற்றைத் தவிர்ப்பதற்கு பெருமளவில் உதவியுள்ளது. இவ்வுண்மையை விவேகாநந்தர் கூறியுள்ளபடி உணர்தல் நன்று.

"The reconciliation of the different paths of Dharma and work without desire or attachment are the two special characteristics of the Gita"-

அனைத்து யோகங்களின் சமரசம், நிஷ்காம கர்மா இவ்விரண்டும் கீதையின் முக்கிய கொள்கைகள். இத்தகைய சமரசநோக்கு இருப்பதால்தான் அனைத்து சம்பிரதாயங் களையும் பின்பற்றுவோர் கீதையிடம் மிகுந்த மதிப்புடை

யோராய் உள்ளனர். அத்வைத மதத்தை ஸ்தாபித்த ஸ்ரீ சங்கராச்சாரியார் கீதையை உயர்வாகப் போற்றுகின்றார், விசிஷ்டாத்வைத்தை ஸ்தாபித்த இராமானுஜர் புகழ்கின்றார், துவைத மதஸ்தாபகரான ஸ்ரீமத்வாச்சாரியாரும் அதனைப் போற்றுகின்றார், சைவ மதத் ஸ்தாபகரான ஸ்ரீ கண்ட சிவாச்சாரியாரும் போற்றுகிறார், இங்ஙனம் பலவித யோகங்களும் இணைந்து, பலவித தத்துவங்களையும் தன்னுள் கொண்டு, பலவித நடைமுறை வழிகளையும் விளக்கிக்கூறி, இவற்றுக்கிடையே சமரசம் செய்வித்து அனைத்தும் பரமாத்மாவிடம் சேர்க்கக் கூடியதே என்ற உயர்ந்த நோக்கினை வெளிப்படுத்தும் அற்புதமான நூல் கீதை, யோகங்களின் கட்டமைப்பையும் சமத்துவத்தினால் அது காப்பாற்றியுள்ளது, தத்தம் மதமே உயர்ந்தது என்று வாதிப்போருக்குச் சிறந்த பாடம் புகட்டியுள்ளது கீதை, ஒருவருக் கொருவர் சண்டையிடுவதே மடமையேயென்றும், அகங்காரத்தை ஒழித்து ஆத்ம அனுபூதியை அடையச் செய்வதே அனைத்து மார்க்கங்களின் குறிக்கோள் என்பதையும் ஒரே குரலில் எடுத்துச் சொல்கிறது கீதை, இவ்வாறாக மக்களிடையேயும், மதங்களுக்கிடையேயும் முழுமையான சமரசத்தை நிலைநாட்டுவது என்பது கீதை சாதித்துக் காட்டிய பெருவெற்றிகளில் ஒன்று என்பதை படிப்போர் அனைவரும் நினைவில் நிறுத்திக்கொள்வோமாக

## கீதையில் ஜீவகாருண்யம்

கீதையில் உள்ளது வெறும் வறட்டு வேதாந்தமல்ல, நடைமுறை வேதாந்தம். ஒவ்வொரு சிறு விஷயத்திலும் நடைமுறைக்கேற்ற வழியைச் சார்ந்தே செல்கிறது, இருதய பரிபாகம் இல்லையெனில் வீடுபேறு எவருக்காயினும் கை கூடுவது கடினம் என்பது கீதாச்சாரியனின் மதம், சித்தம் ரஜோ, தமோ குணங்களால் பீடிக்கப்பட்டு கடினமாக இருக்கும்வரை, வெளிப்பூசைகளால், தோத்திரங்கள், தியானம் இவை செய்தாலும் மோக்ஷம் சித்திப்பதில்லை. பிற உயிர்களிடத்து அன்பு, கருணை இவை காட்டினால்தான்

யோகம், பக்தி, ஞானம், தியானம் முதலானவற்றில் வளர்ச்சியடைய முடியும் என்பது நிச்சயம், பகவானிடத்து மட்டும் பக்திகொண்டு பிற ஜீவராசிகள் இடத்து வெறுப்புடன் இருப்பின் அந்த பக்திக்கு பலனே இல்லை, அது இறைவனுக்குச் செய்யும் உபசாரமன்று, அபசாரமே.

"ஸர்வஜீவதிரஸ்காரஹ் கேசவம் ப்ரதிகச்சதி"

- எத்தகைய ஜீவனை ஒதுக்கித்தள்ளினாலும் தீங்கு விளைவித்தாலும் பகவானுக்குத் தீங்கு விளைவித்ததேயாகும். ஏனெனில் அனைத்து ஜீவ கோடிகளும் விராட் ரூபியான பரமாத்மாவின் அவயவங்களே. உடலின் எந்த அவயவத்திற்குத் தீங்கு நேரிடினும் மூல உடலுக்குத் தாக்கம் எற்படுகிறது. எனவே உயிர்களனைத்திடமும் கருணை காட்டுதல் என்பது யோகங்களனைத்திலும் மிகமுக்கியமானதொரு அங்கமாகும். இவ்வுண்மையையே முதலிலிருந்து முடிவுவரை பகவத்கீதை பலமுறை வலியுறுத்துகின்றது.

1. "அத்வேஷ்ட்டா ஸர்வ பூதானாம்"
2. "ஸர்வபூத ஹிதேரதாஹா"
3. "நிர்வைர ஸர்வபூதேஷு"

முதலான உலக அன்பினை போதிக்கும் வாக்கியங்கள் கீதையில் எத்துணையோ காணக் கூடும். 'ஸர்வபூத' என்று பயன் படுத்துவதால், மனிதர்களேயன்றி பிற ஜீவன்களிடத்தும் அன்பு காட்டுதல் வேண்டும் என்றும் அவற்றிடம் கருணையுடன் நடந்து கொள்ள வேண்டுமென்பதும் தெளிவாகிறது. ஸ்ரீ கிருஷ்ணர் இங்ஙனம் அன்பை போதிப்பது எதனால்? தியானம், பூசை, ஜபம், யோகம் இவற்றைப்பற்றிய விசாரணைகளைப் போதித்தால் போதாதா? என்ற வினா எழுமிடத்து, போதாது என்றே விடை கூறவேண்டி வரும். ஏனெனில், எவ்வாறு மருந்து மட்டும் உட்கொண்டு உணவைக் கட்டுப்படுத்தாமல் விட்டால் வியாதி குணமடைவ தில்லையோ, அவ்வாறே பகவானைப் பூசித்து, பகவத் ஸ்வரூபமான ஜனகோடிகளை துவேஷித்தால் பவரோகம்

எக்காலத்தும் குணமடைவதில்லை. எனவே மருந்து, பத்தியம் இரண்டும் அவசியமே. எனவே யோகப் பயிற்சிகளுடன் 'பூத காருண்யம்' மிகமிகத் தேவையாக உள்ளது. இவ்வுண்மையையே பகவான் கீழ்வரும் சுலோகத்தில் மிகத் தெளிவாக நிரூபிக்கின்றார்.

"மத்கர்மக்ருன் பரமோ மத்பக்தஸங்க வர்ஜிதஹ
நிர்வைரஸஸ் ஸர்வபூதேஷு யஸ்ஸ மாமேதி பாண்டவ"
- (11 - 55)

எவர் தெய்வகாரியங்கள், தெய்வத் தியானம், தெய்வ பக்தி, தெய்வ ஞானம் இவற்றுடன் அனைத்துயிர்களிடத்தும் கருணையுடன் இருக்கின்றார்களோ அவர்கள் என்னை வந்தடைகிறார்கள். மேலும் பன்னிரெண்டாம் அத்தியாயத்தில் பக்தனின் குணசீலங்களைப் பற்றிக் கூறுகையில் முதலிலேயே, 'அத்வேஷ்டா ஸர்வ பூதானாம்' - அனைத்துயிர்களிடத்தும் வெறுப்பின்றி இருத்தல்) என்ற நற்குணத்தைப் பற்றிக் கூறுகின்றார், இவ்வாறு போதிப்பதன் உட்பொருள் யாது? பக்தி, ஞான யோகத்தின் உண்மை உருவை நமக்குக் காட்டுவதற்கேயாம், அனைத்துயிர்களையும், இறைவடிவாகக் காண்பதற்கு பயிற்சி மேற்கொள்ளுதல் வேண்டும், பாகவதத்தில் சுதாமா ஸ்ரீ கிருஷ்ணரை மூன்று வரங்கள் கேட்டார்,

1. உன் பாத கமலங்களின் சேவை.
2. உன் சேவையில் ஈடுபட்டோரிடம் நட்புறவு.
3. எல்லையில்லா ஜீவ காருண்யம்,

இவற்றில் மூன்றாவதாகக் கூறப்பட்ட காருண்யம் மற்றைய இரண்டிற்கும் பலமளித்து அவற்றின் ஒளியை இரட்டிப்பாக்க உதவுகிறது. எனவே இது முமுக்ஷுக்களுக்கு மிகவும் தேவையான ஒன்றாகக் கருதப்படுகிறது. காருண்யம் இல்லாவிடில் பக்தி ஞானம் இவை ஒளியிழந்து சக்தியற்றுப் போகும்.

இவையனைத்தையும் நினைவுறுத்தியே ஸ்ரீ கிருஷ்ணர் அனைத்துயிர்களிடத்தும் காருண்யம் என்ற நற்குணத்திற்கு கீதையில் தக்க இடமளித்துள்ளார்.

## கீதையில் சமத்துவம்

கீதையில் இன்னுமொரு முக்கியமான செய்தி சமத்துவத்தைப் பற்றிய போதனை, மனம் சலனமின்றி நடுநிலையில் இருக்கும்போதே ஆத்மஸ்வரூபம் நன்கு புலப்படும், சலனமற்ற நீரில் சூரியனின் பிரதிபிம்பம் தெளிவாகத் தெரிவதைப் போல மனம் சலனமின்றி இருக்கும்போது மாத்திரமே பிரம்மானுபூதி, ஆத்மானந்தம் இவை ஏற்படுகின்றது, முமுக்ஷுக்கள் இதனைத் தவறாது கடைப்பிடித்தல் வேண்டுமென கீதையில் பகவான் எச்சரிக்கிறார், 'யோகமென்பது தனிப்பட்டதல்ல, சித்தம் சலனமற்றிருப்பதே யோகம்' என்கிறார், (ஸமத்வம் யோக உச்யதே') 'ஏ அர்ஜுனா, இன்ப துன்பங்களிலும், மான அவமானங்களிலும், தட்பவெட்பங்களிலும், புகழ்ச்சி இகழ்ச்சிகளிலும் உன் புத்தியைச் சமமாக வைத்துக்கொள், அவ்வாறான சம புத்தியுடைய தீரனே மோக்ஷத்தை அடைய முடியும், எவர் மனம் நடுவுநிலையில் நிலை கொண்டிருக்கிறதோ அவர்கள் தம் வாழ்நாளிலேயே இயற்கையை வென்றவர் ஆவர். அவர்களே பரமானந்தத்தை அனுபவிப்பர்'.

1. "ஸமதுக்க ஸுகம் தீரம் ஸோ ம்ருதத்வாய கல்பதே" - (2-15)
2. ஸுகதுக்கேஸமே க்ருத்வா ..... நைவம் பாப மவாப்ஸ்யஸி (2-38)
3. ஸித்யஸித்யோஹ் ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே" - (2-48)
4. இஹைவ தைர்ஜிதஹ் ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மனஹ" - (5-19)

என இவ்வாறாக, கீதாச்சார்யன் சாதகர்களுக்கு மிகவும் பயனுள்ள சமத்துவ தர்மத்தை சிறப்பாகக் கூறுகிறார். பலரும் மோக்ஷம் வேண்டுமென்று விரும்புவாரேயன்றி அதற்கு தடைகல்லாக உள்ள சித்தத்தினை நன்கு சீராக்கிக் கொள்ளும் முயற்சியைச் செய்வதில்லை. குரங்கினைப் போன்று சபலபுத்தியுடன் வாழ்வில் ஏற்படும் ஏற்ற இறக்கங்களில் விழுந்துஎழுந்து, எவரேனும் போற்றினால் மகிழ்ந்து, தூற்றினால் மனம்குன்றிப் போய் ஏற்றப் பாத்திரம் போல் அவதியுறுகின்றனர். இத்தகைய சபல புத்தியுடையோர் எங்ஙனம் பாரமார்த்த இலக்கினை அடைய முடியும்? முடியாது. எனவேதான் கிருஷ்ண பரமாத்மா எத்தகைய நிலையிலும் சமநிலையினின்றும் மாறுபடுதல் கூடாது என்கிறார்.

இவ்வுலகமனைத்தும் பகவானின் சொரூபமே அவனின்றும் வேறுபட்டதல்ல. நமது அஞ்ஞானத்தின் காரணமாக வேறாக நமக்குத் தோன்றுகிறது (அநேகத்வம்) ஆயின் அது உண்மையல்ல. கிருஷ்ணபகவான் விஸ்வரூப சந்தர்சன யோகத்தில் இந்த இரகசியத்தைத் தெளிவாக விளக்குகிறார். அனைத்தும் விராட் ரூபமே. பின்னமாக்குதற்கு இயலாத தெய்வ தத்துவம் இவ்வுலகில் உள்ளது. துண்டாக்குதற்கு இயலாத துணிஅது. எனவே இவ்வண்ட சராசரமனைத்திலுமுள்ள பிராண கோடிகளில் எதன் மீதும் வெறுப்பு கொள்ளுதல் தகாது. நண்பன் விரோதி எவராயினும் சமநோக்குடன் இருத்தல் வேண்டும். இதுமட்டுமன்று, பிராம்மணனிடத்தும், பசுக்களிடத்தும், யானைகளிடத்தும், நாயிடத்தும், சண்டாளனிடமும் கூட சம நோக்குடன் இருத்தல் வேண்டும்.

"வித்யா வினய ஸம்பன்னே பிராம்மணே கவிஹஸ்தினி
சுனிச்சைவ ஸ்வபாகே ச பண்டிதாஹ ஸமதர்சினஹ"

- (5-18)

மனிதர்களே மட்டுமின்றி மிருகங்களையும் கூட அன்புடன் அரவணைத்துச் செல்கிறது கீதை. "ஏ மனிதனே உன் அன்பும் தயையும் புண்யாத்மாக்கள் மீது மட்டுமன்றி, பாபாத்மாக்களின் மீது கூட பொழியட்டும். மனிதர்கள் மீது

மட்டுமின்றி அரக்கர்கள் மீதும் கருணை காட்டுங்கள், இரண்டு கால் மனிதர்களேயன்றி நான்கு கால் பிராணிகளிடத்தும் உங்கள் கருணை பரந்து விரியட்டும். நீ உன்னை எவ்வாறு நேசிக்கிறாயோ அவ்வாறே பிறரையும் நேசியுங்கள். சுக, துக்கம், தட்ப வெட்பங்களிலும் பிறரை அணைத்து வாழக்கற்று கொள்ளுங்கள்" என்று கீதாச்சார்யார் மக்களை வேண்டிக் கொள்கிறார்,

1. ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பச்யதி யோ(அ)ர்ஜுன
ஸுகம் வா யதி வா துக்கம் ஸ யோகீ பரமோ மதஹ் ஹ
(6-32)

2. ஸுஹ்ருன் மித்ரார் யுதாஸீனத் மத்யஸ்த தேஷ்ய
பன்துஷு ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர்
விசிஷ்யதே (6-9)

3. சமலோஷ்டாஸ்ம காஞ்சனஹ ...... (14-24)

4. ஸமஹ் சத்ரௌ ச மித்ரே ச (12-18)

சாதாரணமாக உலகில் சகோதரத்துவம் உயர்ந்த நிறைகுணமாகக் கருதப்படுகிறது. 'நீ உன் சகோதரனைப் போல பிறரை நேசி' என்று பெரியோர்கள் கூறுவார்கள். ஆயின் கீதை அதைவிட இன்னும் ஒருபடி மேலே சென்று விடுகின்றது. உலக சகோதரத்துவத்தினின்றும் முன்னேறி ஆத்மாவிற்கு ஈடான நிலையை அடைந்துவிட்டது. அதையே அது விளக்கமாக வர்ணித்துக் கூறுகிறது. உண்மையில் அதுவே அனைவரும் அடையக் கூடிய பொதுவான குறிக்கோள். எனெனில் இரு சகோதரர்கள் ஒருவருக்கொருவர் எப்போதேனும் சண்டையிட்டுக் கொள்ளக் கூடும். ஆயின் எக்காலத்தும் ஒருவன் தன்னைத்தானே வெறுத்துக் கொள்வதில்லை. எனவே தன்னைப் போன்றே பிறரையும் எண்ணும் மனப்பாங்கு மிகவும் உத்தமமான தர்மமாகிறது. இத்தகைய பரந்த நோக்கினை வெளியிடும் மதங்கள் உலகில் மிகமிகக் குறைவு. உலக சகோதரத்துவம் என்ற நோக்கு வரையிலேயே பிற மதங்கள் செல்ல முடிந்தது. ஆயின் இந்து மதம் உபநிஷத்துக்களிலும் கீதை போன்ற நன்னூல்களிலும்,

"ஸர்வபூதஸ்தமாத்மானம் ஸர்வபூதானி சாத்மனி
ஈக்ஷதே யேகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சனஹ"
-(6-29)

என்றவாறு சர்வாத்ம போதனை வழியாக அன்பின் எல்லையை பரந்து விரியச் செய்துள்ளது. உலகில் பிறமதங்கள், 'உன்னுடன் இருப்போனிடம் அன்புகாட்டு' என்று போதிக்கிறதேயன்றி, 'ஏன் அன்பு காட்ட வேண்டும்? என்ற கேள்விக்குச் சரியான விடை காணவில்லை. அதனால்தான் விஞ்ஞானிகளுக்கு - லௌகீக சாஸ்திர விஞ்ஞானிகளுக்கு, மதங்களின்மேல் சரியான நம்பிக்கை ஏற்படவில்லை, தர்க்கவாதத்தை எதிர் கொள்ள இயலாத மதம் நொடித்துப்போன ஒன்று என்று அவர்கள் கூறுகின்றார்கள், ஒரு காரியத்தை நாம் ஏன் செய்ய வேண்டும்? சில தர்மங்களை நாம் ஏன் கடைப்பிடித்தல் வேண்டும்? ஒரு தனி மனிதனிடம் நாம் எதற்காக அன்பு காட்டுதல் வேண்டும்? என்ற இது போன்ற வினாக்களுக்கு விடையளிக்க இயலாத மதமோ, சம்பிரதாயமோ முழுமையானதன்று என்று சொல்கிறார்கள். பௌதீகவாதிகளின் இச்சவாலினை ஆன்மீகவாதியான கிருஷ்ண பரமாத்மா ஏற்றார், கீதையில் அவர் பௌதீக வாதிகளின் வினாக்களுக்குச் சரியான விடையளித்துள்ளார். (ஆத்மௌபம்யேன ... முதலான சுலோகங்களின் வழி) அனைத்திலும் ஒரே ஆத்மா விரவி நிற்கையில் அனைத்து ஜீவன்களிலும் தானே பிரகாசிக்கையில் ஒருவர்மீது வெறுப்பு எங்ஙனம் ஏற்படுதல் கூடும்?" என்று அவர் கேட்கிறார், இவ்வாறாக ஸ்ரீ கிருஷ்ண பகவான் முமுக்ஷுக்களுக்குத் தேவையான சமத்துவ தர்மத்தைக் காரண காரியங்களுடன் பேருதவி செய்துள்ளார்,

## கீதையின் புதிய நோக்கு

**யக்ஞத்திற்கு புதிய விளக்கம்:**

கீதையில் சிற்சில புதிய போக்கு காணப்படுகிறது. இதற்குமுன் சாத்திர அறிஞர்கள் கூறியுள்ள பொருள்

விளக்கங்கள், பதங்கள் இவற்றுக்கு கீதையில் புதிய உருவம் கொடுக்கப்பட்டுள்ளது., அதன்மூலம் சமுதாயத்தில் புதிய எழுச்சியையும் ஏற்படுத்தியுள்ளது. அவை மக்களிடையே நன்முறையில் வளர்ச்சிக்கு வழிகாட்டியுள்ளது. யக்ஞம், தியாகம், யோகம், சந்நியாசம், தவம் முதலான பதங்கள் கீதையில் புதிய பொருளைப் பெற்றுள்ளன, அப்பதங்களுக்கு இதற்குமுன் எத்தகைய பொருள் கொள்ளப்பட்டதோ, கீதாச்சார்யன் அவற்றை எவ்வாறு மாற்றி அமைத்துள்ளாரோ அவற்றைக் குறித்து இங்கு விரிவாக விளக்கம் காண்போம். ஏனெனில் யக்ஞம், சந்நியாசம், இவை சாதாரண மக்கள் எளிதாக மேற்கொள்ளக் கூடியதல்ல. ஏதோவொரு சிலரைத் தவிர மற்றவர்க்கு இவை பின்பற்றக் கூடியவையல்ல, ஆயின் ஸ்ரீ கிருஷ்ணர் அவற்றின் உண்மைப் பொருளை விளக்கி, மக்களின் மனச்சுமையைக் குறைத்துள்ளார், மேலும், யக்ஞம், சந்நியாசம் இவை அனைவரின் உரிமையாக்கப்பட்டுள்ளன. எனவே அவை குறித்து அறிவது நம் கடமை.

**யக்ஞம்:**

'யக்ஞம்' என்ற பெயரைக் கேட்டவுடனேயே 'இது அனைவரும் செய்யக் கூடியதல்ல' என்ற எண்ணமே தோன்றுகிறது. செல்வப்பெருக்கு, ஆள்பலம் உடைய மஹாராஜாக்கள் முற்காலத்தே செய்து வந்தது என்றே எண்ணுவோம். அங்கபலம், அர்த்தபலம் இவை இருந்தால்தான் யோகக்கிரியைகள் செய்தல் இயலும். ஹோதா, உத்காதா, ரித்விக்குகள், பண்டிதர்கள், சாஸ்திரமறிந்தோர், தனதானியங்கள் இன்னும் எத்துணையோ செயல்முறைகள் இவ்வனைத்தும் யக்ஞம் செய்வதற்கு தேவைப்படுகின்றது, இதன் பலன் என்னவோ மிகவும் குறைவானதே. இது காம்ய கர்மாவானதால் அதன் பலன் எப்போதும் சூன்யமாகவே இருக்கும். நிலையான வீடு பேற்றின்பம் யக்ஞத்தின் மூலம் ஒருபோதும் கிடைத்தல் இல்லை. இவை அனைத்தையும் ஆலோசித்தே கிருஷ்ணர், கடினமில்லாததும், பண்டிதர் பாமரர், தனவந்தர், தரித்திரர், ஆண், பெண், பிராமணர், சண்டாளர் ஆகிய அனைவரும்

செய்யக்கூடியதும், பொருள் செலவின்றியும், பிறர் உதவியின்றியும் செய்யக்கூடிய யக்ஞத்தைக் கண்டு பிடித்துள்ளார். அதுவே நிஷ்காம கர்மா. நானே செய்பவன் என்ற எண்ணமின்றி செய்யப்படும் ஒவ்வொரு செயலும் ஒரு மஹா யக்ஞமே. தெய்வ நினைப்புடன் செய்யப்படும் காரியங்களனைத்தும் யக்ஞகிரியையாக மாறும் என்று பகவான் கீதையில் தெரிவிக்கிறார், இனியேனும் இவற்றைப் பின்பற்றி மனிதன் தான் செய்யக் கூடிய ஒவ்வொரு செயலையும் புனிதமான யக்ஞமாக மாற்றிக் கொள்வதற்கு இயலும். அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவையே நினைத்த வண்ணம் யுத்தம் புரிந்து, யுத்த களத்தையே யக்ஞமண்டபமாக மாற்றிக் கொண்டான்.

1. "யக்ஞானாம் ஜப யக்ஞோஸ்மி" - (10-25)
2. ஸ்வாத்யாயக்ஞானயக்ஞாஸ்ச யதயஹ ஸம்சித வ்ரதாஹா" - (4-28)

என ஜபம், வேத அத்யயனம், ஆகார நியமங்கள் முதலான சாமான்யக் கிரியைகளைக் கூட யக்ஞமாகக் கூறுகின்றார்.

பகவான் தெரிவித்த இவ்வியக்ஞங்களை எவராயினும் செய்ய கூடும். பொருட் செலவு இல்லை. எளிமையானது. ஆயின் அதன் பலனோ மிக அதிகம். கர்மபந்தத்தை அறுத்து அப்பால் தள்ளக்கூடிய அமோக சக்தி அதற்கு உண்டு. யக்ஞமாக ஆற்றப்படாத செயல்கள் அனைத்தும் ஜீவர்களுக்கு பந்தத்தை ஏற்படுத்த வல்லது.

"யக்ஞார்த்தாத் கர்மணஹ அன்யத்ர
லோகஹ அயம் கர்மபந்தனஹ" - (3-9)

எனவே இறைவன் காட்டிய எளியவழியில் சென்று ஒவ்வொரு வரும் அவரவர் அன்றாடக் கடமைகளை இறைவனுக்கு அர்ப்பணித்து, தானே செய்பவன் என்ற எண்ணமின்றி செயல் புரிந்து, செயல்களையே யக்ஞ கிரியையாக மாற்றிக் கொண்டு கர்ம பந்தத்தினின்றும் விடுபடுதல் வேண்டும். இல்லையெனின்

வாழ்க்கை ஒரு சுமையாக ஆகிவிடும். மேலும், கர்மா அதிகரித்து பிறப்பிறப்பு எனும் சம்சார பந்தமும் அதிகரிக்கும். கிருஷ்ண பரமாத்மா 'யக்ஞம்' என்ற சொல்லிற்கு புதிய விளக்கம் கொடுத்து, கடினமான அக்கிரியையை எளிமையாக்கி, இரட்டிப்பு பலன் உடையதாகச் செய்து ஜீவர்களனைவருக்கும் பேருதவி செய்துள்ளார்.

**தியாகம், சந்நியாசம்:**

தியாகமென்றால் அனைத்தையும் விட்டுக் கொடுத்தல் என்றும், சந்நியாசம் என்றால் வீடு, மனைவி, மக்கள், சுற்றத்தார், செல்வம் அனைத்தையும் துறந்து, காஷாய வஸ்திரம் அணிந்து காட்டிற்குச் செல்லுதல் என்று நாம் இதுகாறும் நினைத்து வந்துள்ளோம். எனவேதான் தியாகம், சந்நியாசம், இவை மக்களிடையே மிகவும் அரிதாகவே காணப்படுகிறது. ஆயின், ஸ்ரீ கிருஷ்ணர் இவ்விரண்டு சொற்களுக்கும் விரிவான பொருளைக்கூறி, அனைத்து ஆசிரமங்களைப் பின்பற்றுவோரும் அடையக் கூடியதாகச் செய்தார்.

1. ஸர்வ கர்மபலத்யாகம் ப்ராஹுஸ்
   த்யாகம் விசக்ஷணாஹ்" (18–2)

2. யஸ்து கர்மபலத் த்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே - (6–11)

முதலான பிரமாணங்களின் வழி செயல்களின் பலனை இறைவனுக்கு அர்ப்பணித்தலே தியாகம். இது அனைவரும் செய்யக் கூடியது. அவ்வாறே சந்நியாசத்திற்கும் நல் விளக்கத்தைக் கொடுத்துள்ளார்.

1. "அனாச்ரிதஹ் கர்மபலம் கார்யம் கர்ம கரோதி யஹ
   ஸ ஸந்நியாஸீ ஸயோகீச ந நிரக்னிர் ந சாக்ரியஹ"(6–1)

2. "காம்யானாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்யாஸம்
   கவயோ விதுஹு" (18–2)

- "அக்னி ஹோத்ரம் செய்வதும் வேறு செயல்கள் ஏதுமின்றி இருத்தல் மாத்திரம் சந்நியாசம் ஆகாது. பலனை எதிர்பாராது

கர்மங்களைச் செய்தலே சந்நியாசம். காம்ய கர்மாக்களை விடுத்தலே சந்நியாசம்."

(The Sanyasa of Gita is all work, yet no work) - என்று பகவான் கீதையில் தெளிவாக்குகிறார். ஆகா எத்தகைய எளிமையான முறை, வீடுவாசலைத் துறக்க வேண்டியதில்லை. உத்தியோகத்திற்கு முழுக்குப் போடவேண்டிய அவசியமில்லை. காஷாயத்தை உடுத்த வேண்டிய தேவையில்லை. தண்டம், கமண்டலம் இவற்றை சுமக்க வேண்டியதில்லை. நாம் எங்குள்ளோமோ அங்கிருந்தவாறே கடமைகளைச் செய்து வந்தால் போதும். ஆயின் நானே செய்பவன் என்ற எண்ணத்தினை மாத்திரம் விட்டுவிடுதல் வேண்டும். காம்ய புத்தியை விட்டுவிட்டால் போதும். கீதையில் சொல்லப்பட்ட சந்நியாசத்தை கிரஹஸ்தர்கள், பெண்கள் கூட ஏற்று வாழ்க்கையில் கடைத் தேற இயலும்.

**யோகம்:**

யோகம் என்ற சொல்லிற்கு கீதையின் விளக்கத்தினைக் காண்போம். யோகம் என்றவுடன் நமக்கு அஷ்டாங்க யோகம், ஹட யோகம் இவை மனக்கண் முன் தோன்றும்

1. **"ஸமத்வம் யோக உச்யதே "** - (2 - 48)
2. **"யோகஃ கர்மஸு கௌசலம் "** - ( 2 - 50 )

- "காரியம் கைகூடினும், இல்லாவிடினும் சமநிலை கூடியிருப்பதே யோகம். நன்மை, தீமை ஆகிய இரண்டு பலன்களையும் துறந்து திறமையுடன் செயல்படுதலே யோகம்" - என்று ஸ்ரீ கிருஷ்ணர் ஆணையிடுகிறார். ஜீவனை சிவனுடன் ஐக்கியப்படுத்துதற்குப் பயன்படும் ஒவ்வொரு செயலும் யோகமே யாகும். (யுஜ்யத இதியோகஹ) கர்மா, பக்தி, தியானம், ஞானம் இவையாவும் யோகமேயாகும். எனவேதான் இவை நான்கும் யோகமெனப் பெயரிடப் பட்டிருக்கின்றது. எனவே யோகாப்பியாசம் என்றவுடன் எவரும் பயப்படத் தேவையில்லை என்றும், கர்மாவின் பலனைக் கருதாது, சித்தத்தில் நடுவு நிலையோடிருப்பவரனைவரும் யோகிகளே

யென்றும், இன்னும் சொல்லப்போனால் இறைவனை அடைவதற்குதவும் எந்தவொரு செயலும் யோகமே யென்றும் கீதை கருணையுடன் உபதேசிக்கிறது.

**தவம்:**

அவ்வாறே தவம் என்ற சொல்லைக் கேட்டவுடன் மக்கள் நடுங்கிப்போய் கொளுத்தும் வெய்யிலில் தலை கீழாய் நின்று வெந்து போய், மழையில் நனைந்து அன்ன ஆகாரமின்றி நாட்கணக்கில் மாதக்கணக்கில் இருத்தலே என நினைத்தனர். இவ்வாறான பயம் மக்கள் மனத்தில் இன்னும் இருத்தலாலேதான் தவம் செய்வதைப் பற்றி பலர் நினைப்பதேயில்லை. 'அப்படியானால் தவம் செய்தால்தான் பாவங்கள் தொலையும் (தபஸா கில்பிஷம் ஹன்தி)., வேறுவழியில்லை என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளதே. இந்நிலையில் என்ன செய்வது?' என்று ஒன்றும் புரியாத நிலையில் பலர் குழப்பமடைந்து நிற்கும் மக்களுக்கு அபயக்கரம் நீட்டுகிறார் ஸ்ரீ கிருஷ்ணர். அவர் 'தவம்' என்ற சொல்லுக்கு நல்ல முறையில் விளக்கம் அளித்துள்ளார். கீதையின் 17 ஆம் அத்தியாயத்தில் - 'சாதகர்களே முமுக்ஷுக்களே ! வீடு பேற்றிற்குத் தவம் இன்றியமையாத தொன்று, ஆயின் அது நீங்கள் நினைத்துள்ளபடி துன்பத்தோடு கூடிய தவமன்று. அது நடைமுறைக்கு எளிதானது. சரீரம், வாக்கு மானசீகம் என்று மூன்று விதமானது. தேவதைகள், பிரம்ம நிட்டையில் உள்ளோர், குருமார்கள், அறிஞர்கள், சீல குணமுடைய மகான்கள் இவர்களைப் பூசித்தல்., தூய்மை, நேர்மை, பிரம்மச்சரியம், அகிம்சை முதலான நற்குணங்கள் நிறைந்திருத்தல் இவை சரீர தவம் எனப்படும். அன்புடனும் உண்மையுடனும் பேசுதல், வேத அத்யயனம் செய்தல் இவை வாக்கினால் செய்யப்படும் தவம். மனம் நிர்மலமாக இருத்தல், மௌனம், ஆன்ம ஒருமுனைப்பாடு, எண்ணத்தில் தூய்மை இவை மானசீகத்தவம் என்று கிருஷ்ணர் கூறுகின்றார். பகவான் தெரிவித்த இத்தவமுறையை முயற்சியினாலும், பயிற்சியினாலும் அனைவரும் இயற்றக் கூடும்.

இந்திரியங்கள், மனம் இவற்றிற்கு பூர்வ ஜன்மங்களின் தொடர்பால் ஏற்பட்டுள்ள, துர்வாசனையால் நேர்ந்துவிட்ட அழுக்குகளை நன்றாக கழுவிப் போக்குதலே தவம். சூக்ஷ்ம தேகத்தில் பிடித்துள்ள ஒட்டடையை விலக்கித் துடைத்தெறிதலே தவம். தரம் குறைந்த தங்கத்தை தட்டி அதன் தரம் உயர்த்துவதைப் போல இந்திரியங்களையும், மனத்தையும் ஞான அக்னியால் எரித்து புடம் போட்டு ஒளிரச் செய்வதே தவம்.

இவ்வாறாக பகவத் கீதை யக்ஞம் முதலான பல சொற்களுக்குப் புதிய விளக்கம் தந்து, வேதாந்தம் என்றாலே பயந்து பின் தங்கியவர்களை ஒருங்கிணைத்து, அணைத்து அவர்களுக்கு எளிதான வழிமுறைகளைச் சுட்டிக்காட்டி ஆன்மீக தலத்தில் பக்தர்கள் கூட்டம் நிறையுமாறு செய்தார். கீதை செய்த இந்நன்மையை ஒருபோதும் மறக்கலாகாது.

## கீதையின் அமைப்பு

கீதை பதினெட்டு அத்தியாயங்கள் உடையது. கீதை வேதங்களைப் போன்று மூன்று காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது: வேதத்தின் முதல் பாகம் கர்மத்தை வலியுறுத்தும் சம்ஹிதை, இரண்டாம் பாகம் உபாஸனையை வலியுறுத்தும் பிராம்மணம். மூன்றாம் பாகம் விஞ்ஞானத்தை வலியுறுத்தும் உபநிஷத்துக்கள். வேதங்களின் சாரமே கீதை யானதால் அதுவும் 'திரிஷட்கம் ஆக' மூவாறு பதினெட்டு அத்தியாயங்கள் கொண்டது. அவற்றுள் முதல் ஷட்கம் கர்மயோகம், இரண்டாம் ஷட்கம் பக்தியோகம், மூன்றாம் ஷட்கம் ஞானயோகம் இவற்றைப் பக்குவமாக போதிக்கின்றது. ஆயின் கர்மஷட்கத்தில் கர்ம, ஞானம் பற்றியோ, ஞான ஷட்கத்தில் கர்ம, பக்தியைப் பற்றியோ இல்லை எனக் கூறவியலாது, இப்பிரிவு மேலோட்டமானதொன்றே. உண்மையில் கூறப்போனால் யோகங்களனைத்தும் ஒன்றில் ஒன்று அடங்கியுள்ளது. அவற்றைத் தனித்தனியே பிரித்தல் இயலாது. வாழ்க்கைக்கு இம்மூன்றும் அவசியமே யாகும் (கர்மா, பக்தி, ஞானம்) ஜனகரின் செயல் சீலத்துவம், புத்தரின்

மென்மையான உள்ளம், சங்கராச்சாரியாரின் அறிவு மூன்றும் ஒரு மனிதனிடம் நிலை பெற்றித்தல் வேண்டும். (One should possess the head of Sankara, the heart of Buddha and the hand of Janaka)

கீதை யோகங்கள் ஒன்றினும் ஒன்று மேலானது என்றும், அனைத்தும் இறுதியில் ஜீவனை பரமாத்மாவிடம் சேர்க்கவல்லது என்றும் அறைந்து கூறுகிறது.

கீதையில் முதல் அத்தியாயம் முழுவதும் இரண்டாம் அத்தியாயத்தில் 10 ஆம் சுலோகம் வரையுள்ள பகுதியும் 'பூர்வபீடிகை' எனப்படும். கீதையின் போதனை உண்மையில் 2 ஆம் அத்தியாயம் 11 ஆம் சுலோகமான, 'அசோச்யானன்வ சோச ஸ்த்வம்' என்று தொடங்குகிறது. எனவேதான் கீதையின் 'அங்க நியாஸக் கிரமத்தின் பீஜமாகக் கருதுவர். அவ்வாறே கீதையின் இறுதியில் 18ஆம் அத்தியாயம் 73 ஆவது சுலோகத்தினின்றும் முடிவு வரை 'உத்திர பீடிகை' என்பர். அது அர்ஜுனன், சஞ்சயன் கூற்றாக உள்ளது. இவை இரண்டு பீடிகைகளைக் தவிர மற்றவையாவும் கிருஷ்ணபரமாத்மாவின் போதனையான அமிர்ததாரை. இடையில் அர்ஜுனன் கேட்கும் கேள்விகள் சாதகர்களுக்குச் சாதாரணமாக எழக்கூடிய ஐயங்களேயாகும். கீதையின் போதனை உரையாடல் முறையில் அமைந்துள்ளதால் சாதகர்களின் ஐயங்கள் அவ்வவ்விடத்திலேயே போக்கப் படுவதற்கு ஏதுவாகிறது.

கீதையில் அனைத்து அத்தியாயங்களிலும் இறைதத்துவம் போதிக்கப்பட்டிருப்பினும் 11 ஆவது அத்தியாயத்தில் (விஸ்வரூப சந்தர்சன யோகத்தில்) அது நேரிலேயே காட்டப்பட்டுள்ளது. இது கீதையின் தனித்தன்மை. தத்துவத்தைப் பற்றிய கேள்வி அறிவு மட்டும் போதாது. நேரிடையான அனுபவ அறிவு தேவை என இந்நிகழ்ச்சியின் வாயிலாக கீதை எடுத்துக் காட்டுகிறது. கல்லூரியில் இராசயனப் பாடம் கற்றுத்தரப்படும் போது வெறும் புத்தகப்பாடம் மட்டுமின்றி அனுபவத்தில் சோதித்தறிய வாய்ப்பு கொடுக்கப்படுகிறதோ, அது போன்று கீதையில்

அர்ஜுனனுக்கு தன் சுய உருவத்தைக் காட்டி அனுபவ அறிவின் முக்கியத்துவத்தையும் அவசியத்தையும் வலியுறுத்துகிறார்.

கீதையில் பலவித யோகங்கள் போதிக்கப் பட்டிருப்பினும் அனைத்திற்கும் அடிப்படையாக கர்மா, பக்தி, ஞானம் ஆகிய நான்கிலும் அவையனைத்தும் அடங்கிப் போகும். கீதையில் ஒவ்வொரு யோகத்தைப் பற்றியும் படிக்கையில் பகவான் இதனையே சிறப்பித்துப் கூறியுள்ளார் என்பதாக நமக்குப் புலப்படும். கர்ம யோகத்தை விரும்புவோர்க்கு கீதையில் கர்ம யோகமே வலியுறுத்தப்பட்டிருப்பதாகப் படும். அதற்கான ஆதாரங்களையும் கீதையின் பலவிடங்களிலும் அவர்கள் எடுத்துக் காட்டுவர். அவ்வாறே பக்தி, ஞான யோகிகளுக்கு அவையே வலியுறுத்தப் பட்டிருப்பதாகப் புலப்படும். உண்மையில் மூன்றையும் சமமாகவே போதித்து, அவற்றை ஒருங்கிணைத்து வீடுபேற்றிற்கு மூன்றும் அவசியமே என்கிறார். அவரவர் பண்பிற்கேற்ப வழிமுறையைத் தேர்ந்தெடுத்து வீடுபேறு அடையவேண்டும் என்று கருணையுடன் போதிக்கிறார். ஒருவர் ஒரு யோகத்தைப் பின்பற்றினும் அவை ஒன்றுக் கொன்று இணைந்திருப்பதால் பிறவற்றையும் நேசித்தவரேயாவர். இச்சர்வ யோகக்கலப்பு ஒருங்கிணைப்பு கீதையின் அற்புதமான சிறப்பியல்புகளில் ஒன்று.

## கீதையின் பொருள்.

கீதையின் அனைத்து யோகங்களும் கூறப் பட்டிருப்பினும் இந்நூலின் உட்பொருள்யாது? போதித்தவரின் நோக்கு குறிப்பாக எதன்மீது உள்ளது? என்ற செய்திகளை அறிவதற்கு விமர்சகர்கள் பலவாறு முயன்றனர். அவற்றில் ஒன்றிரண்டை நோக்குவோம். சாதாரணமாக நூலின் உட்பொருளை விசாரித்தறிவதற்கு, அதனை நிர்ணயிப்பதற்கு ஆறு பிரமாணங்களை நோக்குவர். அவற்றை 'ஷட்விதலிங்கம்' என்பர். அவையாவன் -

1. உபகிரம உபசம்ஹாரம் 2. அப்யாசம் 3. அபூர்வத்வம் 4. பலன் 5. அர்த்தாவாதம் 6. உபபத்தி ஆகியவை.

*சிலர் சரணாகதியே கீதையின் முக்கியமான பொருள் என மேற்சொன்ன ஆறு பிரமாணங்களையும் வைத்து ஆராய்ந்து சொல்கின்றார். எவ்வாறெனின், -*

1. **உபகிரமம்:**

“சிஷ்யஸ்தே அஹம் சாதிமாம் த்வாம் பிரபன்னம்”

(2 - 7)

*“கிருஷ்ணா நான் உனக்கு மாணவன். நின்னை சரணடைந்தேன். ஆக்ஞையிடுங்கள்” - இவ்வாறாக கீதை சரணாகதியுடனேயே ஆரம்பிக்கிறது.*

**ஆ. உபசம்ஹாரம்:**

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ

(18-66)

*-அனைத்து புற விஷயங்களையும் விடுத்து என் ஒருவனையே சரணடையுங்கள்' - இவ்வாறு கீதை சரணாகதியுடனேயே முடிவடைகிறது. கீதையின் நடுவில்,*

“அனன்யாஸ் சிந்தயன்தோ மாம்........
யோக க்ஷேமம் வஹாம்யஹம்”

*என்ற சுலோகத்திலும் சரணாகதியே போதிக்கப் படுகின்றது. கீதையின் முதல், இடை, கடை அனைத்திலும் சரணாகதியின் உருவமான பக்தியே வலியுறுத்தப் படுகிறது,*

2. **அப்யாசம்:**

*12ஆம் அத்தியாயத்தில்,*

“மய்யேவ மன ஆதத்ஸ்வ ....ந ஸம்சயஹ”
அத்வேஷ்டா ஸர்வ பூதானாம் ... க்ஷமீ”.

*முதலான சுலோகங்கள்*

“யே யதாமாம் ப்ரபத்யன்தே .......
“மாமேவ யே ப்ரபத்யன்தே .....”

*முதலானவை,*

7,10,11,15 ஆம் அத்தியாயத்தில் இன்னும் சில சுலோகங்கள் தி, சரணாகதி இவற்றை பயிற்சி செய்யும் வழிவ்யைக் வுகின்றன.

**அபூர்வத்வம்:**

கர்மா, பக்தி, ஞானம் என்ற மூன்றும் பலவிடங்களில் ப்பட்டிருப்பினும், ஞான கர்மாவிற்குத் துணையான பக்தி கமாக கூறப் பட்டிருக்கிறது. இதுவே இதன் அபூர்வத்வம்.

**பலன்:**

இறைவனின் ஆணையை நிறைவேற்றுதலே பலன். ஷ்யே வசனம் தவ' - இறைவனின் ஆணையாகக்கருதி னைத்து செயல்களையும் செய்து வரவேண்டும். இங்கு தியே முதன்மையாகிறது.

**அர்த்தாவாதம்:**

(அ) 'ஸ்வல்பமப்யஸ்ய' ஈசுவரார்ப்பண புத்தியுடன் யல்படுதல் அல்லது சரணாகதி ஓரளவேனும் சம்சார நத்தினின்றும் விடுவிக்கக் கூடியது.

(ஆ) ஜனகர் முதலானோர் பகவானுக்கு தம் செயல்களை ்ப்பணித்துப் பணி செய்து வந்தனர்.

**உபபத்தி (யுக்தி):**

**"மய்யாவேஸ்ய மனோ யே மாம்"......**

லான சுலோகங்கள் மூலம் பக்தியைக் குறித்த யுக்தி ாதிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறாக ஷட்வித லிங்கங்களை வைத்தும் பல வித மாணங்களைக் கொண்டும் 'சரணாகதி' கீதையின் பொருள் என்கின்றனர். அவையாவன.

**"பக்த்யா மா மபிஜானதி ..........** (18-55)

**"நாஹம் வேதைர்ந தபஸா ......** (11-53)

3. "பக்த்யா த்வநன்யயா சக்ய ...... (11-54)
4. தேஷாமஹம் சமுத்தர்தா ...... (12-7)
5. அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ ....... (10-8)
6. மத்தஹ் பரதரம் நான்யத் ....... (7-7)
7. .......... பஜஸ்வ மாம் (9-33)

## கீதையின் உட்பொருள் சரணாகதியே என்பது சிலரின் கருத்து

இன்னும் சிலர் நிஷ்காம கர்மாவே கீதையின் முக்கிய செய்தி என்கின்றனர். கீதையில் போதனைக்குப் பின் அர்ஜுனன் எதைச் செய்தானோ அதுவே கீதையின் உட்பொருள் என்று அவர்கள் நம்புகின்றனர். செயலற்றுப் போய் இரதத்தில் சோர்ந்து அமர்ந்துவிட்ட அர்ஜுனன் கீதையின் போதனையால் தைர்யம், உற்சாகம் அவை பெற்றதோடன்றி, (கரிஷ்யே வசனம் தவ - நீ கூறியவற்றை நான் பின்பற்றுவேன்) என்று போர்க்களத்தில் இறங்கினானே தவிர ஒரு மூலையில் ஒதுங்கிவிடவில்லை, அல்லது எல்லாவற்றையும் துறந்து சந்நியாசம் ஏற்று கானகம் போய் விடவில்லை. பலனைக் கருதாது செயலில் இறங்கினான். எனவே நிஷ்காம கர்மாவே கீதையின் வாக்கு என்று கூறி மேற்கோள் காட்டுவர்.

இன்றும் மூன்றாம் கட்சியைச் சேர்ந்தவர் ஞானமே கீதையில் பிரதானமாகக் கூறப்பட்ட செய்தி என்கின்றனர். அர்ஜுனனுக்கு ஏற்பட்ட துக்கத்திற்கு காரணம் யாது ? அஞ்ஞானம், மோகம். அஞ்ஞானம் அர்ஜுனனுக்கு எவ்வாறு விலகிற்று ? மோகம் எவ்வாறு தொலைந்தது?

"நஷ்டோ மோஹஹ., மோஹோ அயம் மிகதோ மம" - என் அஞ்ஞானம் விலகிற்று என்று எவ்வாறு கூற முடிந்தது? ஞானம் வந்தால்தான். அஞ்ஞானம், ஞானம் ஒன்றினால்தான் விலகுமே தவிர வேறு எதன் வழியுமியலாது. இருள், ஒளி

ஒன்றினால் தான் விலகும். அர்ஜுனனின் சோகம் தொலைந்தது. அச்சோகம் ஆத்மஞானம் ஒன்றினால் தான் தீரும்.

"தரதி சோக மாத்மவித்"

ஆத்ம ஞானியே துக்கத்தைக் கடக்கவல்லவன் என்று உபநிஷத்துக்கள் கோஷிக்கின்றன. எனவே ஆரம்பத்திலேயே கிருஷ்ணர் (இரண்டாம் அத்தியாயத்திலேயே) விரிவான ஆத்மஞான உபதேசத்தை ஆரம்பித்து விடுகிறார். கீதாச்சார்யன் தன் வாக்கினை ஆரம்பித்தவுடனேயே கர்மாவைப் பற்றி பேசவில்லை., பக்தியைப் பற்றிக் கூறவில்லை. தியானத்தைப் பற்றி விவரிக்கவில்லை. ஸ்வரூப நிலையைப் பற்றி மாத்திரமே வர்ணிக்கிறார். பிறப்பிறப்பில்லாத ஆத்மாவைக் குறித்து விவரிக்கிறார். "ஏ அர்ஜுனா நீ அழிவடையும் ஐம்பூதங்களின் தேகமத்தின் கூடு அல்ல. எங்கும் பரந்துள்ள அகண்ட ஆத்ம சைதன்யம்" என்று பல முறை கூறுகிறார். ஆத்மஞானமொன்றே பிறவி துக்கத்தையும் சம்சார பந்தத்தையும் முழுவதுமாகப் போக்கவல்லது. எனவே தான் அதனை முதலில் போதித்தார். ஞானத்தையும், ஞானமகிமையைப் பற்றியும்,

1. "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸாமாப்யதே" -(4-33)

2. ஸ ஹி ஞானேன ஸத்ருசம் பவித்ர மிஹ வித்யதே -(4-38)

3. ஞானீத்வாத்மைவ மே மதம் -(7-18)

4. ஞானம் லப்த்வா பராம் சாந்தி மசிரேணாதிகச்கதி -(4-39)

எனப் பலவாறு கூறி கீதையின் முடிவில்,

" அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம்
ஸம்வாதமாவயோஹ்
ஞான யக்ஞேன தேனாஹமிஷ்டஹ் ஸ்யாமிதி
மே மதிஹி" - (18-70)

என்ற கம்பீர உதாரணத்துடன் முடிக்கிறார். அதன் பொருள் - 'தர்மத்தினின்றும் விலகாததும் நம் இருவரின் உரையாடல் ரூபமானதுமான இந்த கீதா சாஸ்திரத்தை எவன் பின்பற்றுகிறானோ அவன் ஞான யக்ஞத்தின் மூலமாக என்னை பூசித்தவனாகிறான்.' இந்நூலில் கூறப்பட்டுள்ள போதனைகளனைத்தும் ஞான யக்ஞமாக பகவான் கூறுவதால் கீதையின் தெளிவான, பொருள் ஞானமென்றே புலனாகின்றது. மற்றும்,

"ஞானீத்வாத்மைவ மே மதம்" -(7-18)

'ஞானிக்கும் எனக்கும் பேதமில்லை. ஞானி நானே." என்ற 7 ஆம் அத்தியாயத்தில் பகவான் சொல்லியிருப்பதால் ஞானிக்கும், ஞானத்திற்கும் கீதாச்சார்யன் எத்தகைய மதிப்பை அளித்துள்ளார் என்பது தெளிவாகிறது. அர்ஜுனனின் மீது கீதா போதனை எத்தகைய செல்வாக்கை ஏற்படுத்தியது என்பதனை, உடன் நடந்த நிகழ்ச்சிகளை வைத்து நிர்ணயிக்காமல், அவனின் வாழ்க்கை முழுவதையும் கிரஹஸ்தாச்சிரமத்தில் இருந்த போதும் உறவுகளைக் துறந்து, துறவறம் பூண்டு நிர்விகல்ப சமாதி நிட்டைக்காகத் தனிமையை நாடியதாக பாரதம் ஸ்வர்காரோகண பர்வத்தில் கூறப்படுகின்றது. எனவே மனதை உள்முகமாகத் திருப்பி ஆத்மாவில் நிலைக்கும் கட்டத்தை அடைந்த போது மாத்திரமே ஜீவன் தன் இலக்கினை முழுமையாக அடைந்தவனாகிறான்

"ஆத்மஸம்ஸ்தம் மனஹ் க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்" - (6-25)

முதலான பிரமாணங்கள் இப்பொருளையே கொண்டுள்ளன.

எனவே எக்காலத்தும் ஞானமே புகலிடம். ஞானமே துக்கமின்மையையும், பரமானந்தத்தையும் தரவல்லது.

'ஸர்வம் கர்ம பலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே'

என்றவாறு கர்மா, பக்தி, தியானம் இவையாவும் ஞானத்திலேயே முடிகின்றன, இம்மூன்றும் சித்தத்தைத்

தூய்மைப்படுத்தி ஆத்ம விசாரணைக்குத் தகுந்த சூழ்நிலையை ஜீவனுக்கு ஏற்படுத்துகின்றன. பின்னர் ஜீவன் ஆத்ம விசாரணையில் ஈடுபட்டு மோக்ஷத்தை அடைகிறான் இவ்வுண்மையையே பகவான் கீழ்க்கண்ட சுலோகத்தின் மூலம் நிரூபிக்கிறார்.

"தேஷாம் ஸததயுக்தானாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம்
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயான்திதே
–(10-10)

'எப்போதும் அன்புடன் எவர் என்னை பஜிக்கிறார்களோ, அவர்களுக்கு நான் (ஆத்மா, அநாத்மா விசாரணையில் புலப்படும்) புத்தி யோகத்தினை (ஞானத்தினை) அளிக்கிறேன் அதன் மூலம் அவர்கள் என்னை அடைய இயலும்." பக்தி, நிஷ்காம கர்மா, தியானம் முதலானவை ஞானம் பிறப்பதற்கு உதவுபவையென்றும்,ஞானத்தின் வழியாக மோக்ஷம் எவ்வாறு சித்திக்கும் என்றும் மேற்சொன்ன சுலோகம் விவரிக்கின்றது. தன்னைத் தானே உணர்ந்து கொள்வதே மோக்ஷம். அவ்வாறு தெரிந்து கொள்ளும் சக்தியே ஞானம் எனப்படும். அத்தகைய சக்தி அனைவருக்கும் இருப்பதில்லை. வருவதுமில்லை. இறை அனுக்கிரகம் உடையவர்க்கே அது கிடைக்கும். அதுவும் அனைவர்க்கும் கிடைப்பதில்லை. எவர் நிஷ்காம கர்மாவின் மூலமாகவும், பஜனை, ஸங்கீர்த்தனம், ஜபம், தவம், பரோபகாரம் முதலியவற்றாலும் பரமாத்மாவை நீண்டகாலம் பூசிக்கிறார்களோ அவர்களுக்கே இறை அனுக்கிரகம் சித்திக்கும்.

"பகவத் பக்தி யுக்தஸ்ய தத்ப்ரசஸதம் போததஹ
ஸுகம் பந்த விமுக்திஹ் ஸ்யாதிதி கீதார்த்த ஸங்கிரஹஹ"

'பகவத் பக்தி மற்றும் நிஷ்காம கர்ம ஆசரணம் உடையவர்க்கு பகவத் அனுக்கிரகம் கிடைக்கும். பகவத் அனுக்கிரகம் உடையார்க்கு ஆத்மஞானம் உண்டாகும். ஆத்மஞானம் உடையவர்க்கு எளிதாக பந்தவிமுக்தி வந்து சேரும், இதுவே கீதாசாரத்தின் சுருக்கம்' என்பது பெரியோர்களின் கூற்று.

கீதாசாரம் எது என்று ஒரு மகனீயரைக் கேட்டபோது அவர் $W^3$ என்றார், அதாவது W x W x W = Work, Worship, Wisdom - கர்மா, பக்தி, ஞானம் - கர்மாவினால் பக்தி, பக்தியால் ஞானம், ஞானத்தினால் மோக்ஷம் என்பது பொருள்.

**"கர்மணா ஜாயதே பக்திஹி பக்த்யா ஞானம் ப்ரஜாயதே ஞானாத் ப்ரஜாயதே முக்திஹி இதி சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹம்"**

-'நிஷ்காம கர்மாவைப் பின்பற்றுவதால் பக்தி பிறக்கும். பக்தியால் ஞானம் முதிர்கின்றது - ஞானத்தால் யோகம் கை கூடுகின்றது. இதுவே சர்வ சாஸ்திர சித்தாந்தங்களின் சுருக்கம்' என்று அறிஞர்கள் கூறுகின்றனர். எனவே அர்ஜுனனின் சோகத்தை மாற்றி, மோகத்தை நசித்துப் போகச் செய்த ஞானமே கீதையின் முடிந்த நோக்கம் என்றும் அதுவே கீதையின் தாத்பர்யம் என்றும், கர்மா, பக்தி, தியானம் முதலான சாதனைகள் முறைப்படி ஞானத்தையே உண்டாக்குகின்றன என்றும், மோக்ஷத்திற்குச் சரியான வழி ஞானமேயென்றும் மற்றவை வழிவழியாக வந்தவையென்றும் முடிவுக்கு வருவதே சரியென்று புலப்படுகின்றது,

## கீதையின் போதனை.

மனிதனை தெய்வமாக மாற்றக்கூடிய ஆற்றல் கீதைக்கு உண்டு. இல்லையெனின் சாமான்யன் ஆன அர்ஜுனனை 'மகாத்மாவாக மாற்றியமைக்க இயலுமா? ஒரே நிமிடத்தில் வாழ்க்கையின் குறிக்கோள் என்னவென்று அர்ஜுனனுக்குக் காட்டப்பட்டது. ஸ்ரீ கிருஷ்ணர் தர்ம அமிர்தத்தைப் பொழிந்தார். அர்ஜுனன் போதுமென்ற வரை அருந்தி தன் வாழ்க்கைப்பலனை அடைந்தான். இவ்வாறாக, ஒரு நிமிடத்தில் ஒருவனுக்கு மோக்ஷத்தின் சிகரத்தையே காட்டிய அக் கீதையின் போதனை எத்தகையது என்று விசாரித்தறிதல் மிகவும் அவசியமாய் உள்ளது.

பள்ளியில் ஆசிரியர் மாணாக்கனுக்கு ஒவ்வொரு பாடத்தினையும் நன்றாகக் கற்றுத் தருவதைப் போல

கருணைமயமான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனின் கையைப் பிடித்த வண்ணம் ஒவ்வொருபடியாக மேலேற்றி மோக்ஷத்தின் வாயிலில் சேர்த்தருளினார். 'என்னை வந்தனை செய்' (மாம் நமஸ்குரு) என்னும் சிறிய சாதனை தொடங்கி 'தத்வமஸி' எனும் மகா வாக்கியத்தின் விசாரணை வரைக்கும் உள்ள சாதனை நியமங்கள் அனைத்தையும் பகவான் அர்ஜுனனுக்கு அன்புடன் உபதேசித்தார். கீதையின் இதயம் அன்னையின் இதயம். சம்சாரமெனும் கிணற்றுக்குள் இருந்து உழன்று நாநாவித துன்பங்களையும் அனுபவிக்கும் ஜீவகோடிகளிடம் கருணையுடன் கீதையன்னை நல்வழியைக் காட்டுகிறாள். முதன்முதலில் கர்மாவை போதித்தாள். அத்துடன் திருப்தியடையவில்லை. பக்தியைப் போதித்தாள் திருப்தியில்லை. தியான முறையை போதித்தாள். அத்துடன் திருப்தியடைந்துவிடவில்லை. முடிவாக ஞானத்தைப் போதித்து முக்தியின் வாயிலுக்கு இட்டுச் சென்று, இழிந்த வேட்கையுடையவனை பகுத்தறிவாளனாக மாற்றி கீதையன்னை திருப்தியடைநதாள். கீதையில் கூறப்பட்ட தலையாய இந்நான்கு யோகங்களைக் குறித்து சுருக்கமாக இங்கு விசாரித்தறிவோம். அதன் மூலம் கீதையின் தத்துவம் ஒரு சிறிதேனும் வெளிப்படாது போகாது.

## கீதையில் கர்ம யோகம்.

கீதை சந்நியாசிகளுக்கே பயன்படக் கூடியது என எவரும் எண்ண 'வேண்டாம். அது கிரஹஸ்தர்களுக்குக் கூடப் பயன்படும். தனிமையில் குகையில் தவம் செய்யும் சாதுக்களுக்கே பயன் படும் இலட்சியம் என்று எவரும் கருத வேண்டாம். மக்கள் தொகை நிறைந்த நகரங்களில் வசித்து வேலை செய்து வரும் குடும்பஸ்தர்களுக்கும், வியாபாரிகளுக்கும், விவசாயிகளுக்கும் கூட பயன்படும் சாஸ்திரம் இது. இதில் பிற யோகங்களுடன் கூட கர்ம யோகமும் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. செயல் புரிந்து கொண்டே வீடுபேற்றை அடையக் கூடிய முறை இதில் காட்டப் பட்டுள்ளது. இதுவரை வேதாந்தம் வாழ்க்கை

முறையுடன் கலக்காது என்பதாக ஒரு கருத்துண்டு. வேதாந்தத்திற்கும் வியவகாரத்திற்கும் ஒத்துவராது என்பது வாடிக்கை. ஆயின் கீதாச்சார்யன் அவ்வெண்ணத்தை தகர்த்தெறிந்து -

"Religion must rule even worldly pursuits"— இவ்வுலகக் காரியங்களை தெய்வ நினைப்புடன் செய்யவேண்டும்., செய்ய முடியும் என்று போதித்து, அதற்குமுன் பௌதீகத்திற்கும் ஆன்மிகத்திற்குமிடையேயுள்ள அகண்ட இடைவெளியினைக் குறைத்தார். பிரவிருத்தியில் நிவிருத்தியைப் போதித்தார். சம்சாரத்தில் சந்நியாசத்தைக் கலந்தார். ரதத்தின் சக்கரங்கள் சுழன்று கொண்டிருந்தாலும் எவ்வாறு இருசு (அச்சாணி) அசையாமல் இருக்கிறதோ அதைப் போன்றே சரீரம், இந்திரியங்கள் இவ்வுலகக் காரியங்கள் பலவற்றில் ஈடுபட்டிருந்தாலும், மனது சலனமின்றி தெய்வத்திடம் நிலை பெற்றிருத்தலை கிருஷ்ண பரமாத்மா கீதையில் கற்றுக் கொடுக்கிறார். இதுவே கர்மயோகம்.

"யோகஸ்தஹ் குரு கர்மாணி' -

சித்தத்தில் தெய்வத்தை நிறுத்தி (ஆத்மாவில்) நீங்கள் உங்கள் செயலை ஆற்றுவீராக; பலனை ஈசுவரனுக் கர்ப்பணித்து, நானே 'கர்த்தா' என்ற எண்ணத்தை விட்டு, எத்துணைகாரியமாயினும் ஆற்றுங்கள். அத்தகைய காரியங்களினால் உங்களுக்கு பந்தம் ஏற்படாது என்று பகவான் உபதேசித்துள்ளார். கணித சாஸ்திரத்தில் ஒரு கொள்கையுள்ளது. அது எதுவெனில்,

Infinity + Anything = Infinity

'முடிவில்லாததுடன் எதனைக் கூட்டினாலும் முடிவில்லாததே மீதமிருக்கும். தெய்வம் முடிவில்லாதது. ஞானம் முடிவில்லாதது. எனவே தெய்வ திருஷ்டி ஏற்பட்டு, ஆத்மஞானம் அடைந்து (தெய்வ நினைப்புடன், தெய்வார்ப்பண புத்தியுடன்) எந்தக் காரியத்தைச் செய்தாலும் (அது லௌகீக காரியமாயினும், பரமார்த்த காரியமாயினும்)

முடிவில் தெய்வமே மிகுந்திருக்குமேயன்றி கர்ம பந்தமன்று இதுவே கீதாச்சார்யன் தெரிவித்த கர்ம யோகத்தின் இரகசியம். அவ்வாறன்றி தெய்வ நினைப்பின்றி எந்தச் செயலைச் செய்தாலும் அல்லது பலனை எதிர்பார்த்து எந்தச் செயலை மேற் கொண்டாலும், அது ஜீவனை கட்டுப் படுத்த வல்லது. இல்லையெனின் அவன் கர்மபந்தத்தில் சிக்கிக் கொள்வான்.

'Work divorced of Spirituality is an artificial flower which has neither life nor fragrance." தெய்வத்தின் பார்வையில்லாத செயல்., பரமார்த்தம் புனிதம் இவையற்ற செயல் ஆகியவை வாசனையும் உயிருமற்ற செயற்கை மலரைப் போன்றதேயாகும் என்று ஒரு பெரியார் கூறியுள்ளார். எனவே கர்மாவை விட... அதனைச் செய்யும் முறையே உயர்ந்ததாக இருக்க வேண்டும். எதனைச் செய்ய வேண்டுமென்று கீதை போதிப்பதில்லை. எவ்வாறு செய்ய வேண்டுமென்று போதிக்கிறது இதுவே கீதையின் சிறப்பு. இச் சூத்திரத்தைப் பின்பற்றி அவ்வவ்வாசிரமங்களில் உள்ளோர், அவாவர் பண்பிற்கேற்ப அவரவர்க்குரிய தர்மங்களையும் கர்மங்களையும் செய்யக் கூடும்., அவற்றை விட வேண்டிய அவசியமில்லை.

கிருஹஸ்தன் தன் அன்றாட செயல்களைச் செய்யககூடும். வியாபாரி வியாபாரம் செய்யக் கூடும்., உத்யோகம் செய்பவன் தன் உத்யோகத்தை செய்யக் கூடும், விவசாயி தன் நிலங்களை உழுதல் கூடும்., புரோகிதன் புரோகிதம் செய்யக் கூடும். க்ஷத்திரியன் யுத்தம் செய்யக் கூடும்., ஆயின் (மாமனுஸ்மர) தெய்வசிந்தனையுடன் பலன் கருதாது, ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்ய வேண்டும். இதனையே கீதை வலியுறுத்துகிறது. அப்போது கர்மாவின் விஷம் (பந்தங்களை உண்டாக்கும் தன்மை) தொலைந்து சாமான்யக் கிரியைகள் கூட புனிதமாகிப் போகும்.

வியவகாரத்தில் பரமார்த்தத்தை இணைத்தல் (Vedanta in daily life) எனும் இந்தக்கலை கீதையில் சிறப்பாகக் காணப்படுகிறது. கீதையினை உலகெங்கும் பரவச் செய்த தர்மம் இதுவே. ஞானத்தின் இறுதியில் நிவிருத்தியென்பது

தவிர்க்க இயலாதது என கீதை போதிக்கிறது. அர்ஜுனனின் வாழ்க்கையே இதற்கு எடுத்துக்காட்டு. மோஹம் (அஞ்ஞானம்) நசித்துப் போனபின்பும், அர்ஜுனன் பிரவிருத்தியை விடவில்லை. சம்சாரத்தை விடவில்லை. கீதையைப் படித்தால், வைராக்யம் முதிர்ந்து காட்டிற்குச் சென்று விடுவாரோ என்ற சந்தேகத்துடன் சிலர் தம் பிள்ளைகளுக்கு கீதையைச் சொல்லிக் கொடுப்பதில்லை என்று தெரியவருகிறது. ஆயின் அத்தகைய கவலை எதுவும் தேவையில்லை. கீதையை நேரில் கேட்ட அர்ஜுனனே அவ்வாறு செய்ய வில்லையெனில் பிறரைப் பற்றிச் சொல்ல வேண்டுமா என்ன? எனவே அனைவரும் கீதையைப் பின்பற்றி அதன் பலனை முழுமையாக அடைதல் வேண்டும். வீடுபேறு என்பது ஞானமில்லாவிடில் சித்திக்காது. ஞானம் சித்த சுத்தி இல்லாவிடில் பெறுதல் கடினம். சித்த சுத்தி நிஷ்காம கர்மாவைச் செய்யாவிடின் நேர்வதில்லை. எனவே சாதகர்களனைவரும் முதன்முதலில் கர்ம யோகத்தினைச் செய்தல் அவசியமாகிறது,

"ஆருருக்ஷோர் முனேர் யோகம் கர்மகாரண முச்யதே"
- (6-3)

என்ற வாக்கியத்தின் மையக் கருத்தையே பகவான் நன்றாக விவரிக்கின்றார். ஞான மாளிகையின் நுழைய நினைப் போருக்கு கர்மா ஆரம்பத்தில் காரணபூதமாக புலப்படும் என்பது அதன் பொருள்.

கர்மாவை, செயலை விட்டுவிடுதல் என்பது எவர்க்கும் இயலாது. கர்மாவை புனிதமாக்கும் வழியை மட்டும் ஒருவன் கற்றுக் கொண்டுவிட்டால், அதனால் எத்தகைய ஒரு சிக்கலும் எற்படாது. அதுவே ஸ்ரீ கிருஷ்ணர் செய்த தந்திரம். பலனைக் கருதாது கர்மாவைச் செய்தலே அதனைப் புனிதமாக்கும் வழி. அதனை கர்ம யோகமென்பர் எந்த கர்மாவை சில வேதாந்திகள் இயலாதென்று ஒதுக்கினாரோ அதனையே கீதை எடுத்துக் கொண்டு நிஷ்காமமாக மாற்றியமைத்து வீடு பேற்றிற்கு உபயோகப் படுத்திக் கொண்டது. கீதை தோன்றுவதற்கு முன் உலகில் இரண்டு வகுப்பினரே

இருந்தனர். கர்மாக்களைச் செய்து அதன் பலனுக்கு ஆசைப் படுபவர் (உலக சம்சாரத்தில் உழல்பவர்) ஒரு வகுப்பினர். கர்மாவினை முழுமையாக விட்டு விட்டவர் (ஸந்நியாசிகள், தவத்தோர்) இரண்டாம் வகுப்பினர். ஆயின் மூன்றாவதாக ஒரு வகுப்பினரை ஏற்படுத்தியது கீதை. அவர்கள் கர்மாவைச் செய்த வண்ணம் பலனை எதிர்பாராதிருப்பவர். அத்தகையோரைக் கர்மா கட்டுப்படுத்துவதில்லை.

கீதையன்னை காட்டிய இம்மூன்றாம் வழிமுறையில் மக்கள் தத்தம் கர்ம அரங்கத்தைச் சுத்தம் செய்து கொண்டு அதன் வழி ஞானம் ஏற்பட்டு பரமானந்தத்தை அனுபவிப்பாராக.

## கீதையில் பக்தியோகம்.

பகவத் கீதையில் பற்பல சித்தாந்தங்கள் கூறப் பட்டிருப்பினும் எங்கும் ஒரே மாதிரியான கருத்தோட்டமே காணப்படுகிறது. அதுவே யோகம். சித்தாந்தங்களை செயல் முறைக்குக் கோண்டு வரும் கலையே யோகம் எனப்படும். ஜீவனை சிவனுடன் கலத்தற்குரிய சாதனையே யோகமெனப்படும். மக்களின் பண்பாடு, மனநிலை வேறுவேறாக இருப்பதால், இறைவனை அடைதற்கு அவர்கள் பின்பற்றும் வழிமுறைகளும் வேறு வேறாக உள்ளன. எனவே யோகத்தினையும் பலவிதமாக பிரிப்பதற்கு ஏதுவாயிற்று. மற்றும் வியாதிகள் பலவாக இருப்பதால் மருந்துகளும் பலவாகவே இருக்கும். இதனால் தான் பலவிதமான யோகங்கள் கீதையில் சொல்லப்படவேண்டி வந்தது. ஜைமினியின் கர்ம சித்தாந்தம், நாரதரின் பக்தி சித்தாந்தம், பதஞ்சலியின் யோக சித்தாந்தம், வேதவியாசரின் ஞான சித்தாந்தம் இவையனைத்தும் கீதையில் நன்றாக இணைக்கப் பட்டிருக்கிறது. பலவித பொருள்கள் ஒரே இடத்தில் கிடைக்கும் பெரிய அங்காடியே கீதை. எவரெவர்க்கு எது தேவையோ அது கீதையில் கிடைக்கும். இத்துணை யோகங்கள், வழிமுறைகள் கூறப்பட்டிருப்பினும் இவற்றினிடையே காணப்படும் ஒருங்கிணைப்பு கீதையின்

சாதனை. அதன் மகிமையின் சிறப்பு. வீடு பேற்றை அடைவதற்கு கர்மா, பக்தி, தியானம், ஞானம் இவையனைத்தும் தேவையே. எதையொன்றையும் புறக்கணித்தற்கியலாது. கர்மாவினால் தூய்மை (Purification), பக்தி, தியானம் இவற்றினால் அறிவொளி (Illumination), ஞானத்தினால் ஒன்று கலத்தல் (Union) இவைசித்திக்கும். ஒரு வீட்டைக் கட்டுவதற்து எங்ஙனம் செங்கல், சுண்ணாம்பு, மரம் இவை அவசியமோ - ரொட்டி சுடுவதற்கு கோதுமை மாவு, நெய், வெப்பம் இவை அவசியமோ அவ்வாறே கைவல்யத்தை அடைவதற்கு கர்மா, பக்தி முதலான சாதனங்கள் அனைத்தும் அவசியமேயாகின்றது. முக்காலியின் எந்தவொரு கால் இல்லையாயினும் அது நிற்பதற்கு இயலாது. அவ்வாறே மேற் சொல்லப்பட்ட சாதனைகளில் எதுவொன்று குறைந்தாலும் சாதனை முழுமை அடைவதில்லை. எனவேதான் மகனீயர்கள் அனைத்தையும் சாதித்து பரமசாந்தியினை அடைந்தனர். ஆனால் அவரவர் மனநிலைக்கேற்ப இம்மூன்றில் ஏதேனுமொன்றினை அதிகமாவும், மற்றவற்றை சிறிது குறைவாகவும் சாதனை செய்திருக்கக் கூடும். இவையனைத்தின் முதல் இலக்கு அகங்காரத்தைத் (ஈகோ) தொலைப்பதே யாகும்.

இனி, பக்தி மார்க்கத்தினைக் குறித்து ஒருவாறு ஆராய்வோம். இறைவனிடம் அன்புடன் இருத்தலே பக்தி. பக்தியில் ஒன்றுபவன், (நீயேயன்றி வேறெவரையும் வழிபடேன் 'என்று கூறுவான்'. எனது என்பதில்லை. அனைத்தும் உன்னதே. நீயே என் தாய், தந்தை. நான் உனது அடியார்க்கு அடியேன்' என இறைவனை எண்ணுவான். அர்ஜுனன் கிருஷ்ண பரமாத்மாவிடம் அனைத்தையும் அர்ப்பணித்து, "சாதி மாம் த்வாம் ப்ரபன்னம் - ஆணையிடுங்கள்' - என்று வேண்டினான்.

கீதை சாதாரண பக்தியில் திருப்தியடைவதில்லை. 'அனன்ய பக்தி' வேண்டுமென்று கோருகிறது. 'அனன்ய' என்ற சொல் கீதையில் பலமுறை பயன் படுத்தப்படுவது நினைவில் கொள்ளத்தக்கது.

1. "அனன் யாஸ் சிந்தயந்தோ மாம்" - (9-22)

2. "அனன் யேனைவ யோகேன" - (12-6)

3. "அனன்ய சேதாஹ் ஸததம்" - (8-14)

'அன்யம்' - பிறிது என்ற பாவம் இல்லாமல் இருப்பது 'அனன்யம்'. அப்படியெனின், இறைவனைத் தவிர வேறு எவர் மீதும், எதன் மீதும் சித்தத்தைச் செலுத்தாதிருத்தல் அனன்ய பக்தியாகும்.' இவ்வாறான அனன்ய பக்தி யோடிருப்பவன் எனக்கு மிகவும் நெருங்கிய அன்புடையவன். அத்தகையோனை நான் இறப்போடு கூடிய சம்சார சாகரத்தினின்றும் கரையேற்றுவேன். என கிருஷ்ணர் கருணையுடன் உபதேசித்துள்ளார். ஒருவேளை மனம் தெய்வத்திடம் நிலைபெறாவிடின், பயிற்சியால் அதனை எவ்வாறேனும் சாதித்தல் வேண்டுமேயன்றி அதன் மீதுள்ள பிடியை விட்டு விடலாகாது என்கின்றார் ஏனெனில், இவ்வுலகில் நிலையானதும் அழிவற்றதுமாகிய பொருள் ஒன்றேயுளது. அதுவே பரமாத்மா. மற்றவையனைத்தும் நிமிட நேரமே இருப்பவையும், நிலையற்றவையும் அழியக் கூடியவையுமாகும். அவற்றின் மீது நம்பிக்கை வைத்தால் அமைதியோ சுகமோ எந்நாளும் கிடைப்பதில்லை எனவேதான் மாயாதீதன் ஆன பரமேசுவரனை மாயையில் சிக்கித் தவிக்கும் ஜீவன் தப்பாமல் அடைக்கலம் அடையவேண்டியுள்ளது. ஜீவன் முக்திக்கு வேறு வழியில்லை. அவ்வாறு அடைக்கலம் புகுதலே பக்தியென்பர்.

மேலும் சர்வேசுவரனின் அருளும், குருவின் ஆசியும் இருந்தாலொழிய ஜீவன் பயங்கரமான சம்சாரக் கடலைக் கடத்தல் இயலாது. இது ஒரு பரம இரகசியம். இதனையறியாது பலரும் தத்தம் வெளி நினைப்புடன் (லௌகீக பிரக்ஞையுடன்) இயற்கையை வென்று விடலாமென்றெண்ணி பலன் பெறாது போயினர். ஏனெனில் இயற்கை பரமாத்வின் ஆதீனத்தில் உள்ளது. பரமாத்மாவை அடைக்கலமடையாதவர்க்கு அது அடிபணியாது. தடைகள் அகலாது. பரமாத்மாவே பக்திகுகந்தவன். பக்தியுடன் தன்னை

ஆராதிப்பவனுக்கு, தன்னிடத்தே சித்தத்தை நிலை நிறுத்தியவனுக்கு அருள் கூர்ந்து அவர்களை ஆபத்தினின்றும் காப்பாற்றி தன்னிடத்தே சேர்த்துக் கொள்கிறான். அவர்களது உலகத் தேவைகளை அவனே கவனித்துக் கொள்கிறான்.

1. "மச்சித்தஹ் ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி" - (18-58)

"தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்" - (9-22)

முதலான கீதா வாக்கியங்களின் மூலம் மேற் சொன்ன பொருளையே ஸ்ரீ கிருஷ்ணர் பிரித்துக் கூறியுள்ளார்.

மற்றும் வீடு பேற்றிற்கு வெளிப் படையான காரணமான ஆத்மா-அநாத்மா விசாரணையின் உருவான ஞானம் பெறுதல் வேண்டுமெனினும், முதன் முதலில் பக்தி முழுமையாக இதயத்தில் நிறைதல் வேண்டும். "பக்த்யா ஞானம் ப்ரஜாயதே' பக்தியால்தான் ஞானம் ஆரம்பமாகும் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. மகாத்மாக்களின் அனுபவமும் இதையே காட்டுகிறது. பக்தியெனும் மலர் மலரும் போதுதான் ஞானத்தின் பலன் தோன்றும். ஜீவனின் பக்தியை மெச்சி இறைவனே ஞானத்தின் பலனை, புத்தியோகம் இவற்றைக் கொடுப்பார் என்று கீதையில் விபூதியோகத்தில் கூறப்படுகிறது.

"மாயினம் து மஹேஸ்வரம்"

"தேஷாம் ஸததயுக்தானாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம்
ததாமி புத்தியோகம் தம் யேன மாமுபயாந்தி தே"
-(10-10)

இதனை வைத்துப் பார்க்கையில் பக்தியின் மேன்மை எத்தகையது என்பது புலப்படுகிறது.

கீதாச்சார்யன் ஆரம்பபக்தியுடனேயே அமைந்துவிடாமல் பராபக்தியைப் பற்றியும் தெரிவிக்கிறார். பழம், பூ இவற்றால் இறைவனை அர்ச்சித்தல் சாமான்ய பூசை. ஏனெனில் இவை

பகவானால் நியமிக்கப்பட்டவை. மனிதன் ஏற்படுத்தியவையன்று. இறைவனால் படைக்கப்பட்டதை இறைவனுக்கே ஒப்புவித்தல் மிகவும் எளிதான வேலை. மனிதன் தன் இதயமெனும் கோயிலில் இறைவனை இருத்தி, தியானமெனும் செடியை அவ்விதயத் தோட்டத்தில் தானே வளர்த்துக் காப்பாற்றி நற்குணம் என்ற மலரை தெய்வத்தின் மலரடியில் அர்ச்சித்தால் மாத்திரமே பராத்பரன் பெரு மகிழ்ச்சியடைகிறான், இதுவே பராபூசையெனப்படும். இதுவே பரபக்தி என்றும் சொல்லப்படும். எனவேதான் கிருஷ்ண பரமாத்மா பக்தியோகம் என்ற 12 ஆம் அத்தியாயத்தில் சிறு பூசைகளைப் பற்றி அதிகமாக வர்ணிக்காது, வெறுப்பற்ற தன்மை, நட்பு, கருணை முதலான முப்பதைந்து நற்குணங்களை (அத்வேஷ்டா ஸர்வபூதானாம் முதலியவை) விரிவாகக் கூறுகிறார். இத்தகைய நற்குணம் என்ற வாசமலர் மாலைகளால் இதயக்கோயிலை அலங்கரிப்பவனே உண்மையான பக்தன். அவ்வாறான குணங்களைப் பெற்றிருப்பதே பக்தி. 'பக்திமான் யஸ் மே ப்ரியஹ' என்று பலமுறை சொல்லி 'அத்வேஷ்டா' முதலான நற்குணங்கள் உடையவனே எனக்குப் பிரியமானவன் என்கிறார். இனியேனும் எச்சரிக்கையுடன் சாமான்ய பூசை, ஆராதனையுடன் நட்பு முதலான நற்குணங்களையும் பெற்று இறைவனின் அருளுக்குப் பாத்திரர்களாதல் வேண்டும். அப்போதே பக்தி யோகம் முழுமையாக பரிமளிக்கும்.

எல்லா யோகங்களையும் விட பக்தியோகம் மிகவும் எளிமையானது. அனைவராலும் அடையக் கூடியது. கடினமான சாதனைகள் எதுவும் இதில் இல்லை. இறைவனிடம் எதனையும் எதிர்பாராது அன்புடன் இருந்தால் போதும். அனைவருக்கும் எளிதானதால் பக்தியோகம் கீதையில் சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கிறது, ஒவ்வொரு அத்தியாயத்திலும் பக்தியைக் குறித்து ஏதோவொரு விதத்தில் குறிப்பிடப் படுகிறது. விரிவான ஞான உபதேசம் செய்யப்படும் 14 ஆம் அத்தியாயத்தில் கூட இறுதியில்,

"மாம் ச யோஅவ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே
ஸ குணான் ஸம்தீத்யைான் ப்ரஹ்ம பூயாய கல்பதே"
- (14-26)

'எவன் சலனமற்ற பக்தியோகத்தின் மூலம் என்னை சேவிக்கிறானோ அவன் திரிகுணங்களைத் தாண்டி பிரம்ம சாக்ஷாத்காரத்திற்குத் தகுதியானவனாகிறான்'. என பக்தியின் மகிமை புகழப்பட்டுள்ளது. விஸ்வரூப சந்தர்சன யோகத்தின் இறுதிப் பகுதியில் சிலவிடங்களில் அற்புத இரகசியத்தை வெளிப் படுத்துகிறார். அது எதுவெனின் -

பக்த்யா த்வனன்யயா சக்யஹ அஹமேவம்
விதோஅர்ஜுன
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப"
- (11-54)

-இத்தகைய விசுவரூபத்தினை தெரிந்துகொள்வதோ காண்பதோ அதில் பிரவேசிப்பதோ அனன்ய பக்தியின் மூலமே சாத்தியமாகிறது. பிறவற்றில் எதன் மூலமாகவும் சாத்தியமாவதில்லை - இதனின்றும் இறைவனைக் காண்பதற்கோ அவனில் ஒன்றுவதற்கோ பக்தியே முதன்மையான காரணமேன்று தெரிகிறது. மற்றும் அக்ஷர பரபிரமம் யோகத்தில், பரம புருஷனான பரமாத்மா அனன்ய பக்தியின் மூலமே கிடைக்கக் கூடியவன் என ஐயத்திற்கிடமின்றிக் கூறப் பட்டுள்ளது.

"புருஷஹ ஸ பரஹ பார்த்த பக்த்யா
லப்யஸ்த்வனன்யயா" - (8-22)

ஞான குணங்களைப் பயின்றால் அன்றி அறியப்படும் பொருளான பரபிரம்மம் அனுபவத்திற்கு வராது.

மற்றும் பகவத் கீதையின் 7ஆம் அத்தியாயத்தில் நான்கு விதமான பக்தர்கள் கூறப்படுகிறார்கள். அவர்கள் வரிசைப்படி - ஆர்த்தன், ஜிக்ஞாஸு, அர்த்தார்தி, ஞானி என்று பெயர்

பெறுகிறார்கள்.

"உதாரா ஸர்வ ஏவைதே ஞானீத்வாத்மைவ மே மதம்" -(7-18)

'பக்தர்கள் அனைவரும் உயர்ந்தவர்களே. ஆயின் அதில் ஞானி உண்மையில் நானே என்பது என் அபிப்ராயம்' என்று கிருஷ்ணர் ஞானத்தின் மிக உயர்ந்த நிலையை விவரிக்கிறார் ஞானி உண்மையில் பகவானே. பகவானுக்கும் ஞானிக்கும் எம்மாத்திரமும் பேதமில்லை என்பது அவ்வாக்கியத்தின் பொருள். துவைத சாதனைகள் அனைத்தும் முறைப்படி மலர்ந்து அத்வைதத்திற்கு ஜீவனை இட்டுச் செல்லும். அப்போது பகவானுக்கும், பக்தனுக்கும் வேறுபாடு இல்லை. இருவரும் ஒரே சச்சிதானந்த ஸ்வரூபமாக ஒளிர்வர்.

கீதையில் மற்றோரிடத்தில்,'என்னை எவரும் அறிதல் இயலாது' (மாம்து வேதன கச்சன) என்ற இறைவனின் வாக்கைக் கேட்டவுடனே திகைத்து நிற்கும் முமுக்ஷுக்களுக்கு ஆறுதல் அளிப்பதுபோல உடனேயே, 'பக்தியின் மூலம் என்னை அறிதல் கூடும்' (பக்த்யா மாமபிஜானாதி) என்கிறார், இதனின்றும் பக்தியின் மகிமை தெள்ளத் தெளிவாகிறது. எனவே இறைவாக்கில் நம்பிக்கை வைத்து எளிதான பக்தி யோகத்தினை மேற் கொண்டு பிரம்மானந்தத்தில் திளைப்பாராக.

## கீதையில் ராஜயோகம்

சூரிய கிரணத்தில் ஏழு நிறங்கள் உண்டு. அவையேழும் கலந்து வெள்ளையாகப் புலப்படும். வானவில்லில் இவ்வுண்மை நன்றாகப்புலப்படும். பூக்கள், மூலிகைகள் இவை அவற்றிற்கேற்ற நிறங்களை அக்கிரணங்களின்றும் ஏற்று, முழுமையும் அவற்றையே ஒத்து அவ்வடிவிலேயே ஒளிவிட்டு வளர்ச்சியடைந்து வரும். சூரிய கிரணத்தில் ஒரே வண்ணம் இருந்தால் பூக்கள், மூலிகைகள் ஆகியவை இத்துணை வண்ணங்களில் வளர்வதற்கு இடமேயில்லை. அவ்வாறே கீதையில் 18 விதமான யோகங்கள் கூறப்பட்டிருப்பின் எவர்க்கு எது தேவையோ அதைக் கடைப்பிடித்து முக்தியடைதல் கூடும்.

ஒரு வட்டத்தின் சுற்றளவினின்றும் (Circumference) மையத்திற்கு (Centre) வருவதற்கு பல ஆரங்கள் (Radii) இருக்கும். அவற்றில் எதன் வழியாக வந்தாலும் மையப் புள்ளியை அடைய முடியும். அவ்வாறே பிரம்ம சாக்ஷாத்காரம் என்ற இலக்கினை அடைவதற்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அநேக யோக முறைகளைக் கூறியுள்ளார் அதில் இராஜயோகம் ஒன்று. இதனையே தியான யோகமென்றும் ஆத்ம சம்சய யோகமென்றும் கூறுவர். பதஞ்சலி மகரிஷி இதனை விரிவாகக் கையாண்டுள்ளார். இராஜ யோகம் எட்டு அங்கங்களுடன் கூடியது. இதனையே அஷ்டாங்க யோகமென்பர். அவை வரிசைப்படிகீழ்வருமாறு -

1. யமம், 2. நியமம், 3. ஆசனம், 4. பிராணாயாமம், 5. பிரத்தியாகாரம், 6. தாரணை, 7. தியானம், 8. சமாதி ஆகியவை.

இவ்வெட்டு அங்கங்களும் கீதையில் நன்றாக விவரிக்கப்பட்டுள்ளது. கீதையில் இவ்வெட்டும் எவ்வெவ் விடங்களில் எவ்வெவ்வாறு கூறப்பட்டுள்ளன என்பது கீழ் கொடுக்கப் படுகின்றது. இதனை நன்கு கவனித்தால் கீதையில் கிருஷ்ண பகவான் இராஜயோகத்தினை நன்கு போற்றியுள்ளார் என்பது தெரியவரும்.

1. யமம் - அகிம்சை, சத்யம், அஸ்தேயம், பிரம்மச்சரியம், அபரிக்கிரகம் என்ற ஐந்து குணங்களும் சேர்ந்து யமம் எனப்படும்.

| | | |
|---|---|---|
| 2. அகிம்சை- | அ) "அஹிம்ஸா க்ஷான்திரார்ஜவம்" | - (?) |
| | ஆ) 'அஹிம்ஸா ஸமதாதுஷ்டிஹி | - (10-5) |
| | இ) 'ப்ரம்மச்சர்யமகிம்ஸா ச _ | - (17-14) |
| 2. சத்யம் | அ) ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ___ | - (17-15) |
| | ஆ) அஹிம்ஸா ஸத்ய மக்ரோத_ | - (16-2) |
| 3. அஸ்தேயம் | "அனபேக்ஷஹ ஸுசிர்தக்ஷஹ | - (12-16) |
| 4. ப்ரம்மச்-சரியம் | அ) "ப்ரம்மச்சர்ய மகிம்ஸா ச_" | (17-14) |

ஆ) "யதிச்சனோத்பிரம்மசர்யம் சரன்தி" (18-11)

(இ) ப்ரம்மச்சாரி வ்ரதே ஸ்திதஹ - (6-14)

ரிக்கிரகம் - "காமம், குரோதம் பரிக்ரஹம் விமுச்ய" (18-53)

மம் - சௌசம், சந்தோஷம், தவம், ஸ்வாத்யாயம், ஈசுவரப்ரணிதானம் என்ற ஐந்து குணங்களும் சேர்ந்து நியமம் எனப்படும்.

ா சம்- அ) "தேஜஹ் க்ஷமாத்ருதிஸ் சௌசம் ..." -(16-3)

ஆ) "ஆசார்யோபாசனம் சௌசம்..." -(13-8)

இ) "தேவத்விஜ குரு ப்ராக்ஞ பூஜனம் சௌசமார்ஜவம்" - (17-14)

தோஷம்-அ) "ஸந்துஷ்டஸ் ஸததம் யோகீ" (12-10)

ஆ) "ஸந்துஷ்டோ யேன கேனசித்" (12-19)

இ) "சாரீரம் தப உச்யதே" (17-14)

ம் அ) "வாங்மயம் தப உச்யதே (17-15)

ஆ) "தபோ மானஸ முச்யதே (17-16)

இ) "தபோ தானம் யசோ(அ)யசஹ (10-5)

ாத் யம் "ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம்" - (16-1)

"ஸ்வாத்யாயாப்யஸனம்சைவ" - (17-15)

வ- ிணி ாம் "மாமேகம் சரணம் வ்ரஜ" - (18-66)

"தமேவ சரணம் கச்ச" - (18-62)

ணா ம் "ப்ராணா பானகதீ ருத்வா ப்ராணாயாமாராயணாஹா" - (4-29)

"ப்ராணாபானௌ ஸமௌக்ருத்வா நாஸப்ய ந்தர சாரணௌ" - (5-27)

பா ம் "சப்தாதீன் விஷயாம் ஸ்த்யக்த்வா" (18-51)

| | | |
|---|---|---|
| | "பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா" | (5-21) |
| | "யதோயதோ நிஸ்சாதி " | (6-26) |
| | "யதா ஸம்ஹரதே சாயம்" | (2-58) |
| தியானம் | "த்யானேனாத்மனி பஸ்யந்தி" | (13-25) |
| | "த்யானயோகபரோ நித்யம்" | (18-52) |
| | "உபவிஸ்யாஸனே யுக்ஞாத் யோக மாத்மவிசுத்தயே" | (6-12) |
| தாரணை | "ஆத்மா ஸம்ஸ்தம் மநஹ் க்ருத்வா ந கிஞ்தபி சிந்தயேத்" | (6-25) |
| | "மய்யேவ மன ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய" | - (12-8) |
| சமாதி | "சமாதாவாசலா புத்தி— " | - (2-53) |
| | "போகைஸ்வர்ய ப்ரஸக்தானாம்" | - (2-44) |
| | "சமாதௌந விதீயதே—" | |
| | "ப்ரசாந்த மனஸம் ப்ரம்ம பூதம் கல்மஷம்" | - (6-27) |
| | "சுகமாத்யன்திகம் யத்தத் நசைவ்ாயம் ஸ்திதிஸ்சலதி தத்வதஹ" | (6-21) |

இவ்வாறாக பகவத் கீதையில் ராஜ யோகத்தின் எட்டு அங்கங்களைக் குறித்தும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. தியான யோகி எவ்விடத்தில், எவ்விதமாக, எவ்வாறான நியமங்களைக் கடைபிடித்து தியானத்தைத் தொடங்க வேண்டுமென்பது கீதையின் 6 ஆவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. ஆகார நியமம், நிவாசநியமம், அனுஷ்டான நியமம் - இம்மூன்றிலும் சாதகர்கள் வெகு எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்பதை கீதாச்சார்யர் வலியுறுத்துகிறார். சாதனையில் ஒரு சிறு விஷயத்தைக் கூட அலட்சியமாக ஒதுக்கிவிடாமல் நமக்குத் தெரிவித்தல் கீதையின் தனித்தன்மை ஏனெனில் சிறிய விஷயங்களில் எச்சரிக்கையாக இல்லாவிடில் பெரிய பலன்கள்

கைநழுவிப் போகும். எதனை உட்கொள்ள வேண்டும், எப்படி அமரவேண்டும், பார்வையை எதன் மீது வைத்தல் வேண்டும், முதலான சாதாரண விஷயங்களில் கூட கீதை மிகுந்த அக்கறை காட்டுகிறது. எனவே கீதையில் சொல்லியபடி ஆரம்ப பயிற்சிகளைக் கூட சிரத்தையுடனும் அக்கறையுடனும் கடைப்பிடித்து யோகத்தில் நிலையான தன்மையை அடைதல் வேண்டும்.

யோகமென்றால் என்ன? சித்தத்தின் இயல்புகளை அடக்குதல் யோகம் என்று பதஞ்சலி கூறுகிறார். *பல ஜன்மாந்திர வாசனையால் இந்திரியங்கள், மனம் இவை வெளியுலக விஷயங்களில் ஈடுபாடு கொண்டு போகங்களை விரும்பிஓடும்.

**"யோகஸ் சித்தவ்ருத்தி நிரோதஹ"** (1)

அதனை அணையிட்டுத்தடுத்தல் வேண்டும். ஆமை தன் அவயவங்களை உள்ளடக்கி வைத்திருப்பதைப் போல் இந்திரியங்களால் ஏற்படும் ஏழுவித ஆசைகளினின்றும் மனத்தினைக் கட்டுப்படுத்தி, அதனை உள்முகமாத் திருப்பி, ஆத்மாவில் நிலைபெறச் செய்தல் வேண்டும்.

**"ததா த்ரஷ்டுஹ ஸ்வரூபே அவஸ்தானம்"**

வெளியுலகில் நடக்கும் விஷயங்களை ஆராய்ச்சி அறிவின் பலத்தாலும், பயிற்சி, வைராக்யம் இவற்றாலும் தடுத்து நிறுத்தினால் அப்போது மனம் வெளியில் ஓடுவதற்கு இடமின்றி, அதிஷ்டானமாகிய ஆத்மாவில் (ஸ்வஸ்வருபத்தில்) தானே நிலைத்து நிற்கும். இவ்வாறு இருதய ஸ்தானமான ஆத்மாவில் மனதை நிலைநிறுத்தலே இராஜயோகத்தின் சாராம்சம் இராஜயோகத்தின் சாரமனைத்தையும் கீழ்வரும் சுலோகத்திலேயே ஸ்ரீ கிருஷ்ணர் அடக்கி வைத்துள்ளார்.

**"ஆத்ம ஸம்ஸ்தம் மனஹ க்ருத்வா
ந கிஞ்சிதபி சிந்தயேத்"** - (6-25)

'மனத்தினை ஆன்மாவில் நிறுத்தி வெளி நடப்புகள் எவற்றையும் சிந்திக்கலாகாது' என்பது இதன் பொருள். இங்கு இரண்டு சாதனைகள் கூறப்படுகின்றது. ஒன்று - வெளிநடப்புகளை ஒதுக்குதல். இரண்டு - ஆன்ம சிந்தனை. வெளிநடப்புக்களை ஒதுக்குதல், ஏனெனில் நாம் கனவில் உறங்கும் போது நடப்புகள் அனைத்தும் நினைவில் நிகழ்ந்து கொண்டேயிருக்கும். அதனால் ஜீவன் அடையக் கூடிய பலன் ஏதுமில்லை. எனவேதான் அதனுடன் ஆன்ம சிந்தனையும் வேண்டும். ஆரம்பநிலையில் மனத்தில் எந்த சிந்தனையு மற்றிருக்க இயலாது. எனவே முதன்முதலில் தெய்வ சிந்தனையிலோ, அல்லது ஆத்ம விசாரணையிலோ முதன்முதலில் ஈடுபடவேண்டும். தீவிர சாதனைக்குப் பிறகு முறையாக மனம் மிகவும் சூக்ஷ்மமாகி நிர்விகல்ப நிலையை யடைந்தவுடன் சுசுஸ்வரூப நிலையன்றி வேறு எந்தவிதமான எண்ணமும் இருக்காது. எனவே மனதை கெட்ட எண்ணங்களினின்றும் அகற்றி நல்லெண்ணங்களுக்கு மாற்றி அங்கிருந்து நிச்சங்கல்பத்திற்கு வழி நடத்திச் செல்ல வேண்டும். நிச்சங்கல்பஸ்திதியே சமாதி நிலை.

ஆயின் அத்தகைய நிலையை எட்டுவது நினைத்த மாத்திரத்தில் கிட்டுவதல்ல. எளியதும் அல்ல. ஏனெனில் மனம் மகாபலமுடையது.

**"வாயோரிவ ஸுதுஷ்கரம்"**

காற்றினை அணைக்கட்டுவதைப்போல மனதினை நிலைநிறுத்துதல் மிகவும் கடினமானது என்று அர்ஜுனன் கூறுகிறான். அத்தகைய சலனம் வாசனைகள் மூலம் ஏற்படுகின்றது. எனவே வெளிவிஷயங்களின் நிலையற்ற தன்மையை ஆராய்வதன் மூலம் அதில் விரக்தியைப் பயிற்சித்தல் வேண்டும். மனத்தை அதன்மீது செலுத்தாது உள்முகமாகத் திருப்பிக் கொண்டேயிருத்தல் வேண்டும். தினமும் இவ்வாறு பயிற்சி செய்து வந்தால் இறுதியில் மனம் நமக்கு அடிமைப்பட்டு விடும். எனவேதான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில்,

"அப்யாஸே கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே"
- (6-35)

வைராக்யத்தோடு கூடிய பயிற்சி வழியின்றி வேறு எதன்மூலமாகவும் மனது கட்டுப்படாது என்கிறார்.

இச்சித்தாந்தத்தையே வேதாந்த சாஸ்திரம் வேறுவிதமாகக் கூறுகிறது. வாசநாக்ஷயம், மனோநாசம், தத்வஞானம் இவை மூன்றினாலும் ஜீவனுக்கு பிரம்மசாக்ஷாத்காரம் சித்திக்கக் கூடும் என்கிறது. தத்துவ ஞானத்தின் உதவியால் வாசனாக்ஷயம் ஏற்பட்டு, அதனால் மனோநாசம் சம்பவிக்கும். வீடு பேறு கிடைக்க வேண்டுமென்றால் மனம் நசித்துப் போக வேண்டும். மனம் நசித்துப் போகவேண்டுமானால் வாசனைகள் மறந்துப் போதல் வேண்டும். அதற்கு தத்துவ விசாரணையில் ஈடுபடவேண்டும். எனவே பயிற்சி, வைராக்கியம், தத்துவ சிந்தனை இவற்றாலும், தியான நிட்டையாலும் எவ்வாறேனும் மனதினைக் கட்டுப்படுத்தி பவ சாகரத்தினைத் தாண்ட வேண்டும். இராஜ யோகத்தின் நோக்கம் இதுவே.

## கீதையில் ஞானயோகம்

ஜீவனுக்குத் துக்கம் எதனால் ஏற்படுகிறது? சரீரத்தை ஏற்றுக் கொள்வதால், சரீரம் எதனால் ஆனது? கர்மத்தினால். கர்மா எதனால் ஏற்படுகிறது? பற்றினால். பற்று எதனால் ஏற்படுகிறது? அஞ்ஞானத்தினால். அஞ்ஞானம் எவ்வாறு நீங்கும்? ஞானத்தினால்தான். எனவே ஜீவனுக்கு துக்கமின்மை ஞானத்தினால் தான் ஏற்படுகிறது. தன் சுய ரூபத்தை மறந்து போனதால் பந்தம், மறுபடியும் தன் சுய ரூபத்தையுணர்வதால் வீடுபேறு கிட்டுகிறது. இவ்வாறான ஸ்வஸ்வரூப அனுசந்தானத்தையே ஞானமென்று பெரியோர்கள் கூறுகின்றனர். வீடு பேற்றின் உருவமான பரமசாந்தியை விரும்புவோர் ஞானமெனும் அனுபவத்தைத் தப்பாது அடைதல் வேண்டும்.

"ஞானம் லப்த்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி"
- (4-39)

என்ற இவ்வுண்மை நான்காம் அத்தியாயமான ஞான யோகத்தில் தெரிவிக்கிறார். இவ்வத்தியாயம் பெரும்பாலும் ஞானத்தினை வர்ணிப்பதாகவே அமைந்துள்ளது. காட்டாகச் சிலவற்றைக் காண்போம்.

1. "பஹுவோ ஞானதபஸா பூதா மத்பாவமாகதாஹா" -(4-10)
2. "ச்ரேயான்த்ரவ்யமயாத்யக்ஞாஜ்ஞானயக்ஞஹ பரந்தப"
   - (4-33)
3. "ஸர்வம் ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி"
   - (4-36)
4. ஞானாக்னிஹ் ஸர்வகர்மாணி பஸ்மாத்குருதே ததா" -(4-37)
5. "தஸ்மாதக்ஞானஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம்
   ஞானா ஸினாத்மனஹ
   சித்த்வைன ஸம்சயம் யோகமாதிஷ்டோத் திஷ்ட பாரத"
   - (4-42)

ஞானத்தை பலவாறு கீதாச்சார்யன் வர்ணிக்கிறார்.

1. ஞானத்தவம் - ஞானத்தவத்தின் மூலம் எத்துணையோ பேர் புனிதமடைந்துள்ளனர்.
2. ஞானயக்ஞம் - தானங்களுடன் கூடிய யக்ஞத்தை விட ஞானயக்ஞம் சிறந்தது.
3. ஞானமாகிய கப்பல் - ஞானமெனும் கப்பலின் மூலம் பாவமாகிய கடலை எளிதாகக் கடந்து கரையேற முடியும்.
4. ஞானாக்னி - ஞானமாகிய அக்னி கர்மா எனும் விறகுகளைச் சாம்பலாக்கவல்லது.

5. ஞான கட்கம் - அஞ்ஞானத்தில் ஏற்படும் ஐயங்களை ஞானமென்ற வாளினால் அறுத்து அகற்ற வேண்டும்.

ஆஹா ! ஞானத்தைக் குறித்து எத்தனை உபமானங்களை பகவான் வெளியிடுகின்றார். இதனுடன் திருப்தியடைந்து விடாமல் ஐந்தாவது அத்தியாயத்தில் ஞானத்தினை சூரியனாக வர்ணிக்கின்றார்.

"தேஷாமாதித்யவஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம்"
- (5-16)

15ஆவது அத்தியாயத்தில் ஞானத்தினை எப்போதேனும் பிரகாசமடையும் தீபத்திற்கு உவமையாக்குகிறார்.

"நாசயாம்யாத்மபாவஸ்தோ ஞானதீபேன பாஸ்வதா"
- (10-11)

ஞானத்தைப் போன்ற அற்புத ஆற்றலுடையது எதுவுமில்லை. அதன் மகிமை அபாரமானது என விளக்குவதற்கே இத்துணை எடுத்துக் காட்டுகளை எடுத்துரைக்கிறார் ஸ்ரீ கிருஷ்ணர்

ஓ ஜீவர்களே ஞானத்தவத்தினை மேற் கொண்டு புனிதமாகுங்கள் ஞானயக்ஞத்தை நடத்தி முக்தியெனும் செல்வத்தை அடையுங்கள் ஞானமெனும் தெப்பத்தினால் பாவமாகிய கடலைத் தாண்டுங்கள். ஞானாக்னியை உண்டாக்கி 'கர்மா' எனும் விறகுக் கட்டைகளை எரித்து விடுங்கள். ஞானகட்கத்தினால் துன்பங்களை விலக்குங்கள் ஞான சூரியனின் திவ்ய ஒளியினால் அஞ்ஞானம் எனும் இருளை அகற்றுங்கள். ஞான தீபத்தை ஒளிரச் செய்து அமிருத மயமான காந்திக் கிரணங்களை பல விடங்களிலும் அள்ளித் தெளியுங்கள் என்று கீதையில் பகவான் மக்கள் அனைவருக்கும் இதமான வார்த்தைகளைக் கூறுகிறார். எனவே ஒவ்வொரும் தம் வாழ்நாளில் ஞானத்தினைப் பெறுதல் அவசியமென்பது திண்ணம்.

அப்படியாயின் ஞானமென்றால் என்ன என்பதைப் பற்றி இங்கு விசாரிப்போம். இயற்கையோடு பரமாத்மா ஒன்றி நிற்பதே இப்பிரபஞ்சம். இதில் ஆத்மா, அநாத்மா, க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன், காட்சி, நோக்கு அனைத்தும் ஒன்றாக அஞ்ஞானிக்குப் புலப்படுகிறது. அதனைப்பிரித்து பார்த்தறிவதே ஞானம். ஜடத்தை ஜடமாகவும், சைதன்யத்தை சைதன்யமாகவும் பாவித்தலே ஞானம். எனவேதான் 'விபாக யோகம்' எனும் பெயருடன் சில அத்தியாயங்கள் கீதையில் தனிப்பட்ட முறையில் சொல்லப்பட்டிருக்கிறது. (க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம், குணத்திரய விபாக யோகம், தெய்வாசுர சம்பத் விபாக யோகம், சிரத்தாத்ரய விபாக யோகம்) 'விபாகம்' என்றால் கலந்திருப்பதைப் பிரித்தல் (Division) என்று பொருள், நன்மை, தீமை கலந்திருப்பினும் அவற்றைப் பிரித்தறிந்து தீயவற்றைத் தள்ளி நன்மையைக் கொள்ளுதல் உலக வழக்கு. பழமும் தோலுமாக கலந்து நிற்கும் வாழைப் பழத்தை ஒரு சின்னக் குழந்தையிடம் கொடுத்தால் கூட அப்பழத்தை உறித்து தோலை எறிந்து விடும். தினமும் அதிகாலையில் இல்லத்தரசிகள் அரிசியிலுள்ள கல்லை நீக்கிக்களைவர். அவ்வாறே ஆத்மா அநாத்மா கலந்து நிற்கும் இந்த உபாதையிலும், கண்ணால் காணப்படும் இவ்வுலகிலாகட்டும், அவற்றைப் பிரித்தறிந்து, ஆத்மாவிலேயே சித்தத்தை நிறுத்தி, அநாத்மாவிடம் விரக்தி அடைந்திருத்தல் வேண்டும். இதுவே ஞானம். க்ஷேத்திரத்தினின்றும் க்ஷேத்ரக்ஞனை வேறுபடுத்தித் தானே க்ஷேத்ரக்ஞன் என நினைத்து க்ஷேத்திரத்திடம் பற்றற்ற தன்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும். 'அஸ்தி, பாதி, ப்ரிய, நாம, ரூபம்' - ஆகிய இவ்வைந்துடன் கூடிய ஒவ்வொரு பொருளிலும் முதல் மூன்றையும் உண்மை யென்றும், மற்றைய இரண்டும் அசத்தியம் என்ற எண்ணத்துடன் இருத்தல் வேண்டும்.

இனி, க்ஷேத்ரம் என்றால் என்ன? க்ஷேத்ரக்ஞன் என்பவன் யார் என்று சிறிது யோசிப்போம். பஞ்ச பூதங்கள், அகங்காரம், புத்தி, அவ்யக்தம், கர்மமேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள், சப்த ஸ்பர்சங்கள், இச்சை, துவேஷம், சுகம், துக்கம், தேக இந்திரியங்களின் கூட்டம், அந்தக்கரண விருத்திகள்

முதலானவை க்ஷேத்ரம் என்பபடும். இதனை அறிந்து கொள்ளும் சைதன்யமே க்ஷேத்ரக்ஞன்.

"க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோர் ஞானம் யத்தஜ் ஞானம் மதம் மம" -(13-2)

'ஏ அர்ஜுனா, அனைத்து க்ஷேத்ரங்களிலும் க்ஷேத்ரக்ஞன் நானே என்று நினைப்பாயாக', என்ற உண்மை, மக்கள் பின்பற்றக் கூடிய வரப் பிரசாதமாக உள்ளது. ஏனெனில் சாக்ஷத் பரந்தாமனே, வைகுண்டநாதனே, உலகெங்கும் வியாபித்திருக்கும் சின்மூர்த்தியே ஒவ்வொருவரின் இதய அந்தரங்கத்திலும் ஒளி விட்டுக் கொண்டிருக்கிறாரேயன்றி வேறெங்கோ தொலைவில் இல்லையென்பது தெரிகிறது. அவர் மிகமிக அருகிலேயே அனைத்திற்கும் சாட்சியாய் மனதிலேயே பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். எனவே முயற்சியால் அவரை அடைதல் கூடும் என்ற மனோ தைரியம் இதனால் நமக்கு ஏற்படுகின்றது. "ஸர்வ க்ஷேத்ரேஷு" - என்று கூறப்பட்டதால் ஜாதி, மதம், குலம் என்ற பேதமின்றி அண்ட சராசரங்களிலும் க்ஷேத்ரக்ஞன் ஆன பரமாத்மா விரவியுள்ளார் என்பது தெளிவாகிறது. ஆராய்ந்து பார்த்தால் அன்னமயம் பிராண மயம், மனோ மயம், விக்ஞான மயம், ஆனந்த மயம் என்கின்ற பஞ்ச கோசங்களை வேறாக்கிப் பார்க்கையில் இவற்றிற்கு உட்புறத்தில் சர்வ சாட்சியான ஆத்மா இருப்பதை ஒவ்வொருவரும் அனுபவித்தறிய முடியும். இத்தகைய ஆத்மானுபூதியே ஞானம். அதுவே மோக்ஷம். எனவே ஞானவிசாரணை ஜீவனை மகா உன்னத ஆன்மீக சிகரத்திற்கு இட்டுச் சென்று ஸ்வஸ்வரூப அனுபவத்தின் மூலம் ஜீவனை தேவனாக்கி பரமானந்தத்தை, முக்தியினை இப்பிறவியிலேயே அடைய வைக்கிறது. (ஞானவான் மாம் ப்ரபத்யதே).

ஞானம் அடைந்தபின் மனிதன் செய்யும் செயல்கள் மிகவும் புனிதமானதாக இருக்கும். ஏனெனில் புத்திக்கு அப்பாற்பட்ட (புத்தேஹ்பரம்) பரமாத்மாவை பூசித்தவர்

அந்நிலையை அடைந்தவர். தேக இந்திரியங்கள் முதலானவற்றின் சேர்க்கையில் அந்தக்கரணத்தினைச் சாட்சியாகக் கருதுவர். அவன் அப்போது கர்த்தாவாகான். தேக இந்திரியங்கள் அவற்றின் பணியை அவையே செய்து கொண்டு வரும். அதில் இவன் அகப்பட்டுக் கொள்ளாமல் அழிவில்லாத சநாதன பரபிரம்மத்தை அடைந்து, பற்றில்லாத புத்தியுடன் இருப்பான். ஞானியானவன் உலக வழக்கை யொட்டிச் செயல்களை செய்து கொண்டிருப்பினும் பற்றற்றவனாகவே செய்வான். அவனது செயல்கள் மிகவும் புனிதமானதாக அதியற்புத மகிமைகள் கூடியதாக இருக்கும். ஞானியின் கர்மாவிற்கும் அஞ்ஞானியின் கர்மாவிற்கும் இதுவே தனிப்பட்ட வித்தியாசம். அஞ்ஞானி தேக இந்திரியங்கள் முதலானவற்றுடன் ஒன்றிப் போய், 'தேகமே நான்' என்று பாவித்து பற்றுள்ளவனாய் செயல் செய்து பந்தங்களில் அகப்படுவான். ஞானி, 'நான் தேகமல்ல. சச்சிதானந்த ஸ்வரூபத்துடன், பிறப்பற்றவனாய், சனாதனமாக, கண்ணுக்குப் புலப்படாத ஆத்மாவே நான், அழிவுடைய தேகத்தின் கூட்டு அல்ல நான்.

'தத்ப்ருஹம் நிஷ்கலமஹம் ந ச பூத ஸங்கஹ' என்று திடமாக நிச்சயித்துக் கொண்டு, தான் என்ற எண்ணத்தை விட்டு, 'மமகாரம்' இன்றி தானே 'கர்த்தா' என்ற எண்ணத்தை விட்டு, பற்றற்ற புத்தியுடன் கர்மாக்களைச் செய்து வந்து முக்தனாவான். எனவே செயல்களைத் தொடங்கும் முன்பாகவே அதன்மீது பற்றின்மையை எவ்வாறு பெறமுடியும் என்னும் இரகசியத்தை தெரிந்து கொள்ள வேண்டும். அதனை ஞானத்தினால்தான் பெற முடியும்.

எனவேதான் கிருஷ்ணபரமாத்மா இரண்டாம் அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே ஞானத்தை உபதேசித்து, கர்மாவின் மீது பற்றின்மையை பெறுவதற்கான வழியைக் கூறி அதன்பின் கர்மயோகத்தைப் பற்றிக் கூறுகிறார்.

"யோகஸ்தஹ் குரு கர்மாணி" - (ஆத்மாவில் நிலைத்து நின்று பற்றற்ற புத்தியுடன் கர்மாக்களை செய்யுங்கள்) என்னும் மஹா மந்திரத்தை பின்னர் போதிக்கத் தொடங்குகிறார்.

எனவே மகாத்மாக்கள் ஞானப் பிராப்தியடைந்து உலகத்திற்குச் செய்யும் சேவை. சாமான்யரர்கள் செய்யும் சேவையைவிட எத்தனையோ மடங்கு உயர்ந்தது., எண்ணிக்கையிலடங்காதது., களங்கமற்றது. ஞானம் அடைந்தபின் அவரவர் பண்பாட்டிற்கேற்ப சிலர் நிவிருத்தி மார்க்கத்தைப் பின்பற்றுவர். சிலர் பிரவர்த்தி மார்க்கத்தைப் பின்பற்றுவர். அவர்கள் பிரவிருத்தி மார்க்கத்தைப் பின்பற்றினால் கூட நிவிருத்தி மார்க்த்தின் பலனை அடைவர்.

**"ப்ரவ்ருத்திரபி தீரஸ்ய நிவ்ருத்திபல பாகினீ"**

ஸ்ரீ கிருஷ்ணர், ஜனகர், இக்ஷ்வாகு முதலான சக்ரவர்த்திகள், சங்கராச்சாரியர், விவேகாநந்தா முதலிய சந்நியாசிகள் ஞானம் பெற்று உலக நன்மைக்காக எத்துணையோ செயல்களை ஆற்றினர். ஆயினும் ஞானத்தின் பலனால் கர்மா அவர்களைக் கட்டுப் படுத்தவில்லை. எனவே பிரவிருத்தியாயினும், நிவிருத்தியாயினும் ஞானம் அனைத்து ஜீவர்களும் பெற வேண்டிய ஒன்றாகிறது. எனவேதான் கிருஷ்ணபரமாத்மா;

**"நஹி ஞானேன ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே'**
**- (4-38)**

'ஞானத்திற்குச் சமமான பவித்ரமான தொன்று இவ்வுலகில் எவ்விடத்துமில்லை" என்று ஞானத்தின் மகிமையைப் புகழ்கிறார். ஆயின் அபரோக்ஷ ஞானம் இதயத்தில் தோன்ற வேண்டும் எனில் கீதை 13 ஆவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள அமானித்வம் முதலான ஞான குணங்களைச் சாதகன் நன்றாகப் பயிற்சி செய்தல் வேண்டும். அத்தகைய ஞானகுணங்களைப் பயின்றால் அன்றி அறியப்படும் பொருளான பரபிரம்மம் அனுபவத்திற்கு வராது.

மற்றும் பகவத் கீதையின் 7 ஆம் அத்தியாயத்தில் நான்கு விதமான பக்தர்கள் கூறப்படுகிறார்கள். அவர்கள் வரிசைப்படி - ஆர்த்தன், ஜிக்ஞாஸு, அர்த்தார்தி, ஞானி என்று பெயர் பெறுகிறார்கள்.

"உதாராஹ் ஸர்வ ஏவைதே ஞானீத்வாத்மைவ மேமதம்"
- (7-18)

"பக்தர்கள் அனைவரும் உயர்ந்தவர்களே. ஆயின் அதில் ஞானி உண்மையில் நானே என்பது என் அபிப்ராயம்" என்று கிருஷ்ணர் ஞானத்தின் மிக உயர்ந்த நிலையை விவரிக்கிறார். ஞானி உண்மையில் பகவானே. பகவானுக்கும் ஞானிக்கும் எம்மாத்திரமும் பேதமில்லை என்பது அவ்வாக்கியத்தின் பொருள். துவைத சாதனைகள் அனைத்தும் முறைப்படி மலர்ந்து அத்வைதத்திற்கு ஜீவனை இட்டுச் செல்லும். அப்போது பகவானுக்கும், பக்தனுக்கும், வேறுபாடு இல்லை. இருவரும் ஒரே சச்சிதானந்த கனஸ்வரூபமாக ஒளிர்வர். அதுவே வாழ்க்கையின் மகோன்னத நிலை. அதுவே சாதனைகளின் முடிவான நிலை. அதுவே ஜீவன் முக்தி. ஞானத்தின் பலன் இத்தகைய மகிமை கொண்டது. எனவே ஒவ்வொருவரும் தத்தம் வாழ்நாளிலேயே ஞானநிலையை யடைந்து ஜன்ம ஈடேற்றம் காண்தல் வேண்டும்.

## கீதையில் சாதனை.

இதுவரையில் கீதையில் கூறப்பட்டுள்ள வழிமுறைகளைப் பற்றி அறிந்தோம். இனி அவற்றை எங்ஙனம் சாதித்தல் கூடும் என அறிவது அவசியமாகிறது. கீதாச்சார்யனுக்கு நடைமுறையிலேயே (அனுஷ்டானத்திலேயே) மிகுந்த ஈடுபாடானதால் சாதனை முறைகளின் இரகசியங்கள் பலவற்றையும் பொதிந்து வைத்துள்ளார். சாதாரணமாக ஒவ்வொரு யோகத்தினையும் பயிற்சி செய்வதற்கு ஆரம்பித்தற்கு முன்பாக சாதகர்களுக்கு ஏற்படக் கூடிய தடங்கல்கள் எவை? அவற்றை எவ்வாறு விலக்கல் கூடும்? சாதனை காலத்தில் ஏற்படும் பிரச்சனைகளை அவன் எவ்வாறு தீர்க்கக் கூடும்? முதலான விஷயங்கள் பயிற்சி செய்பவனுக்கு மிக முக்கியமானவை. பகவான் கீதையில் இவையனைத்தையும் நன்றாக விளக்கிக் கூறி சாதகர்களுக்குப் பேருபகாரம் செய்துள்ளார். அவை எவை எனில் -

1. பலஹீனத்தை விட்டொழி -

சாதனையைத் தொடங்கும் போது அதைர்யம், கோழை மனப்பான்மை, பலஹீனம், உற்சாகமின்மை இவற்றை அருகில் நெருங்க விடக் கூடாது. எவரோ ஒரு சில மகரிஷிகளே வீடு பேற்றை அடைந்தனர். நான் அடைதல் கூடுமா? எனக்கு அத்தகைய சக்தி ஏற்படுமா? நான் கிருஹஸ்தன்., நான் பிள்ளைகுட்டிக் காரன். இவற்றையெல்லாம் துறந்து கானகம் செல்ல என்னால் முடியாது. சந்நியாசம் மேற்கொள்ளவும் முடியாது., சம்சாரத்தை விட்டகலவும் இயலாது., எனக்கு எவ்வாறு வீடு பேறு கிட்டும்? இவ்வாறாக பலமிழக்கச் செய்யும் எண்ணங்களை எவரும் நினைத்தல் தகாது என கீதை கூறுகிறது.

"க்ஷுத்ரம் ஹ்ருதய தௌர்பல்யம் த்யக்த்
வோத்திஷ்ட பரந்தப" - (2-3)

'ஏ அர்ஜுனா மிகவும் கீழ்மையான இருதய பலவீனத்தை விடுத்து எழுக, செயலாற்றுதற்கு எழுக. என்று அர்ஜுனனின் மூலமாக எல்லா ஜீவர்களையும் கீதையன்னை எச்சரிக்கை விடுக்கிறாள். மற்றும் பயமின்றி இரு (Be fearless!) (விகதஹீ) என்று தெய்வ வாக்கருளினார். "த்ருத்யுத்ஸாஹ ஸமன் விதஹ" - தைர்யம், உற்சாகம் இவற்றுடன் கார்யம் சித்திப்பினும், சித்திக் காவிடினும் மனக் கலக்கம் அடையாமல் சமபுத்தியுடன் செயலாற்றத் தொடங்குங்கள்" என்று ஆணையிடுகிறார். சந்நியாசிகளே வீடுபேற்றை அடையவல்லவர் என்று கிருஹஸ்தர்கள் பயப்பட வேண்டிய தேவையில்லை. அர்ஜுனன் கிருஹஸ்தன், ஜனகன் கிருஹஸ்தன். அவர்கள் வீடுபேற்றை அடையக் கூடுமானால் மற்றையோர்கள் ஏன் அடைய முடியாது? ஒருசில மதத்தவர், ஜாதியனர், குலத்தவர், ஆசிரமத்தவர் மட்டுமே முக்தி அடையக்கூடும் என்ற கொள்கையை எந்த மதமும் அங்கீகரிப்பதில்லை. கீதை இதன் அடிப்படையையே ஒத்துக் கொள்ளாது. அப்படியெனின், தடைகளுக்குத் தயங்காமல், எந்தவொரு பந்தங்களையும் பொருட்படுத்தாது பகவானின் மீது பரிபூரண நம்பிக்கை வைத்து செயலாற்ற முனையும்போது மாத்திரமே

எவருக்காயினும் முக்தி கிடைக்கும். எனவே தைர்யத்தை விடுதல் கூடாது என்பது கீதையின் முதல் கட்டளை, சாதகன் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாக கோழைத்தனத்தை விட்டு, தடங்கலுக்குத் தயங்காது, அதைர்யத்திற்கு இடம் கொடாமல், ஸர்வேஸ்வரனின் மீதும், சத்குருவின் மீதும், தன்மீதும் பரிபூரண நம்பிக்கை வைத்து பரமார்த்த பதத்தினை அடைவதற்கு முன்னேறுதல் வேண்டும்.

**2. சமநிலையை கடைப்பிடிக்க..**

இலக்கினை விரைவினில் அடைய வேண்டுமென்ற ஆசை நல்லதேயாயினும், விரைந்தோடும் பரபரப்பில் காலில் அடிபட்டு விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மனம் தைர்யமாக இருத்தல் வேண்டும். சாதனையில் ஒரு கம்பீரத்துவம் வேண்டும். "Slow and steady wins the race" சாந்தத்துடன் நிலையான யுத்தியுடனும் இருப்பவன்தான் வெற்றியடைவான் என்பது பழமொழி. "அதி ஸர்வத்ர வர்ஜயேத்" என்று பெரியோர்கள் கூறுவர். ஸ்ரீ கிருஷ்ணர் சாதகர்களை 'அதிகமாக உண்ணுதல் வேண்டாம். எதையுமே உண்ணாமல் இருத்தலும் வேண்டாம். அதிகமாக நித்திரை போதல் கூடாது. நித்திரையின்றி இருத்தலும் கூடாது. மிதமான ஆகாரம், மிதமான நித்திரை அனைத்திலும் மிதமாக இருத்தல் வேண்டும். அப்போது யோகம் நன்றாகக் கைகூடும்" என்று கருணையுடன் கூறியுள்ளார். எந்தப் பொருளையும் எச்சரிக்கையுடன் பயன்படுத்தினால் வெகுகாலத்திற்குப் பயன்படும். அதிகமாகப் பயன்படுத்தினால் சீக்கிரமாகவே கெட்டுவிடும். அவ்வாறே தேகம், இந்திரியங்கள் மிதமாகப் பயன்படுத்துதல் வேண்டும். அதன்மூலம் பவ சாகரத்தினை தாண்ட வேண்டியுள்ளது. இவற்றைக்குறித்து கீதையில் பின்வரும் சுலோகங்களில் காணலாகும்.

1. "நாத்யச்னதஸ்து யோகோ (அ)ஸ்தி
   
   ந சைகாந்தமனச்னதஹ
   
   ந சாதி ஸ்வப்னசீலஸ்ய ஜாக்ரதோ
   
   நைவ சார்ஜுன" ( 6 - 16 )

5ஈஹாரவிஹாரஸ்ய யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு
5ஸ்வப்னாவபோதஸ்ய - யோகோ
பவதி துஹ்கஹா" - (6-17)

ஏரினால் வழங்கப்பட்ட பிறவிக் கடலைக் கடக்கும்
ய வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றிக்
தற்குப் பதிலாக அவற்றின் சக்திக்கு மீறிய செயலைச்
ா மானால் அந்நாவாய் நடுக் கடலில் நம்மை
த் துவிடும். மற்றும் யோகத்திற்குப் பதிலாக
ஆத்தான் கொடுக்கும். எத்தனையோ சாதகர்கள்
யாமம் முதலியவற்றை தேவைக்கு அதிகமாகச்
ட்டு, பட்டினியால் உடலை வருத்திக் கொண்டு
க ச் செய்து அங்கு பரலோகத்திற்கும், இங்கு
கத்திற்கும் பயன்படாமல் இரண்டிற்கும் இடையே
ம் கெட்ட நிலையில் தயாராகின்றனர்.
க யோரின் வாழ்க்கை பயனற்றுப் போகிறது.
னைத்தையும் கணக்கில் கொண்டே கீதாச்சார்யன்
யில் சமநிலையை கடைப்பிடிக்கக் கோருகிறார்.
ழ முமுக்ஷுக்கள் தத்தம் சாதனையில் 'சனைஹ், சனைஹி'
ர கவான் சொல்லியதைப் போல மெல்ல மெல்ல
துடன் செயல்பட்டு வெற்றியினைக் கைப்பற்ற
ம்.

சியை விட்டு விடுதல் கூடாது., வைராக்கியத்தை ஏற்றுக்
ள்ள வேண்டும்.

பிறவிகளாக மனம் ஒவ்வொரு விதமான வழியில்
க்கு அடிமைப் பட்டு (பிரகிருதி தாசத்வம்) வாழ்ந்து
ா து. அதனை மாற்றி புதியதான பந்தத்தில் (தைவத்வம்)
த வேண்டியுள்ளது. போகத்தினின்றும் யோகத்திற்கு
வண்டியுள்ளது. எனவே இயற்கையாகவே அது
ம். எதிர்மறை செயல் (Reaction) ஏற்படும். ஜன்ம
தரமாக விஷய சுகங்களில் நன்றாக ஊறிப் போன
னை அதனின்றும் திருப்புவதற்கு அது சாதாரணமாக
ல்லை. சிறிது அடம் பிடிக்கும். ஆயின் சாதகர்கள்

முயற்சியை விட்டு விடலாகாது, தினமும் பயிற்சி செய்து வந்தால் நம் கட்டுக்குள் அடங்கிவிடும். கீதையில் 6 ஆவது அத்தியாயத்தில் அர்ஜுனன் தன் மனது மிகவும் சபலத்துடன் உள்ளது என்றும் அதனைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினமாக உள்ளது என்றும் கிருஷ்ணனிடம் முறையிட, அவர் "அதற்கு நான் செய்ய முடியும்? பயிற்சியின் மூலமாக நீயே அவற்றைக் கட்டுப்படுத்துவதை தவிர வேறு வழியில்லை வைராக்கியத்தை உன் உதவிக்கு அழைத்துக் கொள் என்கிறார். ஸ்ரீ கிருஷ்ணரின் மிக நெருங்கிய உறவினனும், பிரியமானவனும், நண்பனும், பக்தனும் ஆகிய அர்ஜுனனும் கூட மனக் கட்டுப்பாட்டினை சுய முயற்சியினாலும், பயிற்சியினாலுமே பெற முடிந்த போது பிறர்மட்டும் வேறு எங்ஙனம் பெறுதல் இயலும்? எனவே மனக் கட்டுப் பாட்டிற்கு நன்றாகப் பயிற்சி செய்தல் வேண்டும்.

கீதையின் 12 ஆம் அத்தியாயத்தில், யோகத்தைப் பற்றிக் கூறுகையில், சில சாதனைகளைப் பற்றிக் கூறி, 'முதன்முதலில் என்மீது மனதை நிலைநிறுத்து. அவ்வாறு செய்தால் நீ என்னிடத்தே வசிக்கக்கூடும்' என்று போதிக்கிறார். 'ஒருவேளை உன்னிடத்தே நிலைநிறுத்த இயலாவிடின் என்ன செய்ய வேண்டும்?' என்று உடனேயே அர்ஜுனன் கேள்வி கேட்பான் என்று ஊகித்து, அதற்கு இடமளிக்காமல் பகவான் எச்சரிக்கையாகத் தானே அதற்குத் தகுந்த பதிலை இவ்வாறளித்துள்ளார்.

"அப்யாஸ யோகேன ததோ மாம் இச்சாப்தும் தனஞ்ஜய"
-(12-9)

'ஒரு வேளை என்மீது மனத்தை நிலை நிறுத்த இயலாவிடின் பயிற்சியின் மூலம் நிலைநிறுத்தி என்னை அடைவதற்கு முயற்சி செய்.' எனவே மனக் கட்டுப்பாட்டிற்கு, பகவானை அடைவதற்கு பயிற்சியைத் தவிர வேறு வழியில்லை. எனவேதான் 'அப்யாஸயோகம்' என்று பெயர் வைத்து கர்ம யோகம், பக்தி யோகம், ஞானயோகம் இவற்றுடன் அப்யாஸ யோகம்' என்ற சொல் கீதையின் 8ஆவது அத்தியாயத்தில் கூடக் காணப்படுகிறது.

"அப்யாஸயோகயுக்தேன சேதஸா நான்யகாமிநா"
- ( 8 - 8 )

அக்ஷர பரபிரம்மத்தை அடைவதற்கு ஒருநிலைப்பட்ட தியானத்துடன். கூடிய தொடர்ந்த பயிற்சியே வழி என்று போதித்துள்ளார். எனவே கர்ம யோகமாயினும், பக்தி யோகமாயினும், தியான யோகமாயினும், ஞான யோகமாயினும் இப்பயிற்சி முறையின்றி, அவை சாதகர்களை விழுங்கி விடுவதற்கு எப்போதும் தயாராக காத்து நிற்கிறது. எனவே அவற்றை வெற்றி கொள்வதற்கு விவேகம் என்ற வாளுடன் சாதகன் எப்போதும் தயார்நிலையில் இருக்க வேண்டும். 'தஸ்மாத் ஜாக்ரத, ஜாக்ரத' என சாத்திரங்கள் எச்சரிப்பதற்கு இதுவே காரணம். கீதையில் 'ஸததம்' (எப்போதும்) என்ற சொல் பலவிடத்தும் காணப்படுகிறது.

1. "தேஷாம் ஸதத யுக்தானாம் (10- 1)
2. "ஸததம் கீர்த்தயந்தோ மாம்" (9-14)

ஆரம்ப நிலை முமுக்ஷுக்கள் தியானம் முதலானவற்றை குறிப்பிட்ட வேளைகளில் செய்து வந்தாலும், முறையாகத் தொடர்ந்து அவற்றை அதிகரித்து நிரந்தரம் தெய்வ நினைப்புடன் இருத்தற்கு முயற்சி செய்தல் வேண்டும். ஸ்தித்வாஸ்யாமந்த காலே அபி' - அந்திமக் காலம் வரைக்கும்கூட தெய்வ நினைவை விடுதல் கூடாது. பிரம்ம நிலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். பரிபக்குவமும், திடத்தன்மையும் நேர்வதில்லை. எந்த யோகமாயினும் முடிவில் அப்யாச யோகத்தைப் பின்பற்ற வேண்டியதே.

ஆயின் இந்தப் பயிற்சியை எப்போது செய்தல் வேண்டும். இதற்கு பதிலாக கீதையில் 'எப்போதும்' (நிரந்தரம்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. மாயை மிகவும் ஆபத்தானது. அது மறைந்திருந்து சாதகன் சிறிதளவே அஜாக்கிரதையாக இருப்பினும் மூடி மறைந்து விடும். எனவே எப்போதும் மிகுந்த கவனத்துடன் இருத்தல் வேண்டும். இல்லையெனில், 'தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர' - எக்காலத்தும் என்னை நினைத்திருங்கள் என்று பகவான் ஏன் கூறுகிறார்? காலை, மதியம், மாலை ஆகிய வேளைகளில் என்னை

முயற்சியை விட்டு விடலாகாது, தினமும் பயிற்சி செய்து வந்தால் நம் கட்டுக்குள் அடங்கிவிடும். கீதையில் 6 ஆவது அத்தியாயத்தில் அர்ஜுனன் தன் மனது மிகவும் சபலத்துடன் உள்ளது என்றும் அதனைக் கட்டுப்படுத்துவது மிகவும் கடினமாக உள்ளது என்றும் கிருஷ்ணனிடம் முறையிட, அவர் "அதற்கு நான் செய்ய முடியும்? பயிற்சியின் மூலமாக நீயே அவற்றைக் கட்டுப்படுத்துவதை தவிர வேறு வழியில்லை வைராக்கியத்தை உன் உதவிக்கு அழைத்துக் கொள் என்கிறார். ஸ்ரீ கிருஷ்ணரின் மிக நெருங்கிய உறவினனும், பிரியமானவனும், நண்பனும், பக்தனும் ஆகிய அர்ஜுனனும் கூட மனக் கட்டுப்பாட்டினை சுய முயற்சியினாலும், பயிற்சியினாலுமே பெற முடிந்த போது பிறர்மட்டும் வேறு எங்ஙனம் பெறுதல் இயலும்? எனவே மனக் கட்டுப் பாட்டிற்கு நன்றாகப் பயிற்சி செய்தல் வேண்டும்.

கீதையின் 12 ஆம் அத்தியாயத்தில், யோகத்தைப் பற்றிக் கூறுகையில், சில சாதனைகளைப் பற்றிக் கூறி, 'முதன்முதலில் என்மீது மனதை நிலைநிறுத்து. அவ்வாறு செய்தால் நீ என்னிடத்தே வசிக்கக்கூடும்' என்று போதிக்கிறார். 'ஒருவேளை உன்னிடத்தே நிலைநிறுத்த இயலாவிடின் என்ன செய்ய் வேண்டும்?' என்று உடனேயே அர்ஜுனன் கேள்வி கேட்பான் என்று ஊகித்து, அதற்கு இடமளிக்காமல் பகவான் எச்சரிக்கையாகத் தானே அதற்குத் தகுந்த பதிலை இவ்வாறளித்துள்ளார்.

"அப்யாஸ யோகேன ததோ மாம் இச்சாப்தும் தனஞ்ஜய"
-(12-9)

'ஒரு வேளை என்மீது மனத்தை நிலை நிறுத்த இயலாவிடின் பயிற்சியின் மூலம் நிலைநிறுத்தி என்னை அடைவதற்கு முயற்சி செய்.' எனவே மனக் கட்டுப்பாட்டிற்கு, பகவானை அடைவதற்கு பயிற்சியைத் தவிர வேறு வழியில்லை. எனவேதான் 'அப்யாஸயோகம்' என்று பெயர் வைத்து கர்ம யோகம், பக்தி யோகம், ஞானயோகம் இவற்றுடன் அப்யாஸ யோகம்' என்ற சொல் கீதையின் 8ஆவது அத்தியாயத்தில் கூடக் காணப்படுகிறது.

**"அப்யாஸயோகயுக்தேன சேதஸா நான்யகாமிநா "**
**- ( 8 - 8 )**

அக்ஷர பரபிரம்மத்தை அடைவதற்கு ஒருநிலைப்பட்ட தியானத்துடன் கூடிய தொடர்ந்த பயிற்சியே வழி என்று போதித்துள்ளார். எனவே கர்ம யோகமாயினும், பக்தி யோகமாயினும், தியான யோகமாயினும், ஞான யோகமாயினும் இப்பயிற்சி முறையின்றி, அவை சாதகர்களை விழுங்கி விடுவதற்கு எப்போதும் தயாராக காத்து நிற்கிறது. எனவே அவற்றை வெற்றி கொள்வதற்கு விவேகம் என்ற வாளுடன் சாதகன் எப்போதும் தயார்நிலையில் இருக்க வேண்டும். 'தஸ்மாத் ஜாக்ரத, ஜாக்ரத்' என சாத்திரங்கள் எச்சரிப்பதற்கு இதுவே காரணம். கீதையில் 'ஸததம்' (எப்போதும்) என்ற சொல் பலவிடத்தும் காணப்படுகிறது.

1. **"தேஷாம் ஸதத யுக்தானாம் (10- 1)**
2. **"ஸததம் கீர்த்தயந்தோ மாம்" (9-14)**

ஆரம்ப நிலை முமுக்ஷுக்கள் தியானம் முதலானவற்றை குறிப்பிட்ட வேளைகளில் செய்து வந்தாலும், முறையாகத் தொடர்ந்து அவற்றை அதிகரித்து நிரந்தரம் தெய்வ நினைப்புடன் இருத்தற்கு முயற்சி செய்தல் வேண்டும். ஸ்தித்வாஸ்யாமந்த காலே அபி' - அந்திமக் காலம் வரைக்கும்கூட தெய்வ நினைவை விடுதல் கூடாது. பிரம்ம நிலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். பரிபக்குவமும், திடத்தன்மையும் நேர்வதில்லை. எந்த யோகமாயினும் முடிவில் அப்யாச யோகத்தைப் பின்பற்ற வேண்டியதே.

ஆயின் இந்தப் பயிற்சியை எப்போது செய்தல் வேண்டும். இதற்கு பதிலாக கீதையில் 'எப்போதும்' (நிரந்தரம்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. மாயை மிகவும் ஆபத்தானது. அது மறைந்திருந்து சாதகன் சிறிதளவே அஜாக்கிரதையாக இருப்பினும் முடி மறைந்து விடும். எனவே எப்போதும் மிகுந்த கவனத்துடன் இருத்தல் வேண்டும். இல்லையெனில், 'தஸ்மாத் ஸர்வேஷு காலேஷுமாமனுஸ்மர' - எக்காலத்தும் என்னை நினைத்திருங்கள் என்று பகவான் ஏன் கூறுகிறார்? காலை, மதியம், மாலை ஆகிய வேளைகளில் என்னை

நினையுங்கள் என்று ஏன் கூறவில்லை?. காமம் முதலானவை ஜீவனுக்கு நிரந்தர எதிரிகள்., நித்ய வைரிகள் என்ற காரணத்தால் (ஞானினோ நித்ய வைரிணா) என்று கீதையன்னை ஆணையிடுகிறாள். ஏனெனில் அந்திம சுவாசத்தில் கூட மாயை மனிதனை ஏமாற்றக் கூடியது. எனவேதான் மகனீயர்கள் தம் ஆன்மீக சாதனைகளில் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்து எப்போதும் பயிற்சி செய்து கொண்டேயிருப்பர்.

இனி, மனக்கட்டுப்பாட்டினை பயிற்சி செய்தல் எங்ஙனம் என்பதைப் பற்றி ஓரிரு வாக்கியங்கள் கூறவேண்டியுள்ளது. கீதையில் தெரிவிக்கப்பட்ட முறை எதுவெனின், - எப்போது மனம் சபலமடைந்து கட்டுமீறிச் செல்கிறதோ அப்போது அதனை நன்வழிப்படுத்தி, புத்தி கூறி, நிதானமாக உட்திருப்பி, ஆத்மாவில் நிலை நிறுத்த வேண்டும்.

"யதோ யதோ நிஸ்சரதி மனஸ் சஞ்சலமஸ்திரம்
ததஸ்ததோ நியம்யைததாத்மன்யேவ வசம் நயேத்"
- (6–26)

கீதையில் வைராக்யத்திற்கு முக்கியமான ஸ்தானம் கொடுக்கப்பட்டிருப்பது கீழ்க்கண்ட பிரமாணங்களின் வழி புலப்படுகிறது.

1. "அப்யாஸேன து கௌன்தேய வைராக்யே
ண ச கிருஹ்யதே" - ( 6-35 )
2. "வைராக்யம் ஸமுபாச்ரிதஹ" - (18–52)
3. "இந்திரியார்த்தேஷு வைராக்யம்" - (13–8)

கண்ணால் காணப்படும் பொருள்களில் துக்கத்தையும், தோஷத்தையும் நாம் கண்டறிதல் வேண்டும் என்று கீதை கூறுகிறது. புறத்தே காணப்படும் பொருள்களில் பாஞ்சபௌதிகங்கள், ஜடம், ஒரு விநாடியே நிலைத்திருப்பவை முதலானவை நிலையானவையல்ல என்று மனதிற்கு,

இந்திரியங்களுக்கு நன்றாக போதிக்கப்பட்டு விட்டால், இவற்றின் மீதான ஆசைகளை அவை விட்டு நிலையான ஆத்மாவிலேயே நிலைத்து நிற்கும். எனவே சாதகர்களுக்கு பற்றின்மை மிகவும் தேவையானது. அவ்வாறின்றி போக ஐசுவரியங்களின் மீது மனம் இருப்பின் -

**"போகைசுவர்யப்ரஸக்தானாம்**
**தயாபஹ்ருத சேதஸாம்**
**வ்யவஸாயாத்மிகா புத்திஹ்ஸமாதௌ ந**
**வித்யதே"** - (2 - 44)

என்றவாறு விஷய சுகங்களினின்றும் மனதை இழுத்துக் கட்டுவதால் தியான நிட்டையில் சித்தம் நிலையாக இருப்பதற்கு தடையேதுமிருக்காது. எனவே சாதகன் முயற்சியின் வழி விரக்தியினை பயிற்சி செய்து மனதினை நிதானமாக உள்முகமாகத் திருப்பி ஆத்மாவில் நிலைநிறுத்த வேண்டும். இவற்றை சீக்கிரம் செயல்படுத்தி பரமானந்த பதவியான கைவல்யத்தினை இப்பிறவியிலேயே அடைக என்று கீதையன்னை கருணையுடன் உபதேசிக்கிறாள். எனவே பயிற்சியையும், வைராக்யத்தையும் எவரும் விட்டுவிடுதல் கூடாது.

**4. சிரத்தை, நம்பிக்கையுடன் இருக்க., ஐயங்களை விலக்குக..**

பரமாத்மாவின் இருப்பிலும், உலகத்தின் பொய்மையிலும், ஐயம் ஏற்படக்கூடாது. ஏனெனில் இவ்விஷயத்தில் சாஸ்திரங்கள் நன்முறையில் சில நிர்ணயங்களைச் செய்து நமக்கு சொல்லிச் சென்றிருக்கின்றன. மகாத்மாக்கள் தத்தம் அனுபவங்களில் அவற்றை உணர்ந்தும் உள்ளனர்.

"தஸ்மாச் சா ஸ்திரம் பிரமாணம் தே" என்று கீதை சாஸ்திர பிரமாணங்களைப் பின்பற்ற வேண்டுகிறது. பிரமாணங்களின் உண்மையில் எள்ளளவும் சந்தேகத்திற்கு இடமேயில்லை. எனவே அவற்றின்மீது சிரத்தையும், நம்பிக்கையும் வைத்து பரமார்த்த நிலைக்கு முன்னேறிச் செல்ல வேண்டும்.

"ஸம்சயாத்மா வினஸ்யதி" (முக்காலத்திலும் இருப்பவற்றை) சந்தேகிப்பவன் விநாசத்தையே என்று கீதை தெரிவிக்கிறது. மற்றும், "சிரத்தா ஞானம்" சிரத்தையுடனும், பக்தியுடனும், நம்பி சாதனை புரிபவன் தவறாது ஞானத்தினை அடை கீதை சொல்கிறது. கீதையில் இவ்விரண்டு வாக்கி அஷ்டாக்ஷரீ மகாமந்திரம் என்று பாவி காரியங்களிலும், ஆன்மீக சித்தாந்தங்களிலும் சிர ஐயத்தை விரட்டி பரமாத்ம பதத்தினை சாதித் வேண்டும்.

'சிரத்தை' எனும் சொல் கீதையில் எண்ணில பயன்படுத்தப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

1. **"ச்ரத்ததானம த்பரமா "**
2. **"ச்ரத்தயா பரயா தப்தம்"**
3. **"ச்ரத்தயா பரயோபேதாஹா"**
4. **"ச்ரத்தயார்ச்சிதுமிச்சதி"**
5. **"ச்ரத்தாவந்தோ அநஸூயன்தோ"**
6. **"ச்ரத்தவான ன யா யஸ்ச்ச"**
7. **"ச்ரத்தவான் பஜதே யோ மாம்**
8. **"ச்ரத்தா விரஹிதம் யக்ஞம்"**

தேவதை, தீர்த்தம், மந்திரம், சோதிடம், ஔ ஆகியவற்றில் மனிதனுக்கு எத்தகைய சிரத்தை, பக் நம்பிக்கை இருக்குமோ அந்த அளவுக்குப் பலனும்

"தேவே தீர்த்தே த்விஜே மந்த்ரே தைவக்ஞே
யாட்த்ருசீ பாவனா யஸ்ய ஸித்திர் பவதி த

எனவே பகவானின் இருப்பினில் எத்தகைய ஐ அவன் மீது பரிபூர்ண நம்பிக்கை வைத்து, சிரத்ை தெய்வபக்தி இவற்றுடன் விக்னங்களை உதறித்தள் ஆன்மீக பதத்திற்கு விரைவில் முன்னேறுதல் வே

**கீதையில் ஒதுக்கப்பட்டுள்ள ஆசார விசாரங்கள் -**

பகவத் சாக்ஷாத்காரத்திற்கு ஆசைப் படுபவர்கள் நன்நெறியிலேயே நடத்தல் வேண்டும். முறையற்ற வழியில் செல்லின் இலக்கினை அடைய முடியாமல் போவதுடன் மனச்சாந்தியின்றி இடையிலேயே பலவித துன்பங்கள்பட வேண்டியிருக்கும். சம்சார கிலேசங்கள், பிறப்பு இறப்பு இவற்றிற்கு உட்பட வேண்டியிருக்கும். எனவே கீதாச்சார்யன் சிற்சில துராசாரங்களை எடுத்துரைத்து அவற்றை அனுசரித்தல் கூடாது என்று மிகத் தீவிர எச்சரிக்கை விடுக்கிறார். அவற்றைத் தெரிந்து கொள்ளுதல் சாதகனுக்கு மிகவும் அவசியமானது. எனவே அவை இங்கு விரித்துரைக்கப்படுகின்றன -

1. கோரிக்கையுடன் கூடிய யக்ஞங்கள் செய்தல்
2. அகர்மண்யத்வம் (செயலின்றி இருத்தல்)
3. சார்வாக மதம்
4. பௌதீக வாதம்
5. சரீரத்தை வருத்திச் செய்யப்படும் பகட்டான தவம்.
6. மித்யாசாரம்

என்ற இவ்வாறு விஷயங்களிலும் முமுக்ஷுக்கள் மிகவும் எச்சரிக்கையாக இருந்து அவற்றின் வழிக்கே செல்லலாகாது என்று கீதையில் போதிக்கப்பட்டுள்ளது. அவற்றைக் குறித்து விரிவாக இங்கு விசாரித்தறிவோம்.

**1. ஸகாம யக்ஞம் முதலான கர்மாக்கள்:**

விஷய போகங்களுக்கும் பரமார்த்த வாழ்க்கைக்கும் ஒத்துப்போவதில்லை. ஒன்றுக்கொன்று நேர் எதிரானது. இகலோக போகமாயினும், பரலோக போகமாயினும் இரண்டும் ஒன்றே. ஜீவனின் ஆன்மீகவுணர்வு சரிவிற்குக் காரணமாவதில் இரண்டும் ஒன்றே. அப்படியாயின் சுவர்க்க போகங்கள் சிறிது மேலாக இருக்குமோ என்னவோ? (கருப்பிலும் ஒரு அழகு இருப்பதைப் போல்). ஆயினும் அதனால் உபயோகமெதுவுமில்லை.

"க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்றபடி யோகானுபவத்தினால் புண்யம் தீர்ந்தவுடனேயே சுவர்க்கத்தினின்றும் கீழே விழுந்து மறுபடியும் பூலோகத்தில் ஆன்மீக வழியில் 'ஓ, ந, மா" என்று ஆரம்பப் பாடம் ஆரம்பிக்க வேண்டியதே. எனவே பிறப்பு இறப்பெனும் ஜீவனின் சுழற்சிக்கு, போக்கு வரவிற்கு இடமான காம்ய கர்மாக்களை, சுவர்க்க போகங்களைக் கொடுக்கும் யக்ஞம் இவற்றை கிருஷ்ண பரமாத்மா முழுமையாக எதிர்க்கிறார். ஜீவனின் வீடுபேற்றிற்கு, துக்கத்தை நீக்குவதற்குத் தடையாக இருக்கும் எந்த காரியமாயினும் அது சுவர்க்க போகமாயினும், பூபோகமாயினும், பாதாளலோக போகமாயினும் விலக்க வேண்டியதே.

**"கதாகதம் காமகாமா லபந்தே"** **(9 - 21)**

ஏனெனில் மனம் ஆசைகளுடன் வெளி முகமாக அலைந்து கொண்டிருந்தால் தியான காலத்தில் ஆத்மாவில் நிலைப்பதற் கியலாது. மனம் ஆத்மாவில் நிலைக்காவிடில் வீடுபேறு எக்காலத்தும் கைகூடாது. எனவேதான் சுவர்க்க சுகங்களுக்கு ஆர்ப்பரிக்கும் மக்களை 'அவிபச்சிதஹ' (விவேகமற்றவர்கள், அல்ப புத்தியுள்ளவர்கள்) என்று பிரித்து அவர்களின் நடவடிக்கைகளை முழுமையாகக் கண்டிக்கிறார். கீதை 2ஆம் அத்தியாயத்தில் கீழ்க்காணும் சுலோகங்களில் இக்கருத்தே புலப்படுகிறது.

**"காமாத்மானஹ் ஸ்வர்கபராஹ் ஜன்ம கர்ம பலப்ரதாம்**
**க்ரியா விசேஷ பஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி"**
**- ( 2 - 43 )**

**"போகைச்வர்யப்ரஸக்தானாம் தயாபஹ்ருதசேதஸாம்**
**வ்யவஸாயாத்மிகா புத்திஹ் ஸமாதௌ ந விதீயதே"**
**-(2-44)**

எனவே கோரிக்கையுடன் கூடிய யாகங்கள் செய்வதைவிட வீடுபேற்றை அளிக்க வல்ல ஜபம், வேதம் ஓதுதல் முதலிய நிஷ்காம யக்ஞங்களைப் பின்பற்றுதல் நன்மையுண்டாக்கும்.

2. **செயலின்றி இருத்தல்:**

எந்தவிதமான செயலுமின்றி இருத்தல் மிகவும் உயர்ந்த நிலை என்று நினைக்கக் கூடும். அவ்வாறிருத்தல் வைராக்கியத்தின் சின்னமென்று சிலர் ஊகித்தல் கூடும். ஆயின் அது தவறானது. மனதில் வாசனைகள் உள்ளவரை ஸ்தூலதேகமுடன் கர்மாக்கள் செய்யாவிட்டாலும் ஜீவனின் பந்தங்கள் விடாது. மனதில் எண்ணங்கள் தோன்றிக் கொண்டேயிருக்கும். எவ்வித செயலும் செய்யாது இருப்பவன் தமோ குணத்துடன் இருப்பவன் அல்லது விசுத்த சத்வ மயமான நிர்விகல்ப சமாதி நிலையிலாவது இருத்தல் வேண்டும். இரண்டாவது வகுப்பினர் மிகக் குறைவானவரே. அத்தகையோர் பூஜிக்கத் தகுந்தவர்கள், அவர்களின் இதயம் வாசனைகளற்று, மாசற்று இருக்கும். அவர்கள் செயல்கள் புரியினும், புரியாதிருப்பினும் பந்தங்கள் ஏற்படாது. (நைவ தஸ்ய க்ருதேநார்தோ நா க்ருதேனஹ கச்சன) ஆயின் மற்றையோர் அவ்வாறில்லை. அவர்கள் கர்மாக்களை செய்தே தீரவேண்டும். ஏனெனில் தமோ குணத்தினின்றும் ரஜோ குணத்திற்கு, ரஜோ குணத்தினின்றும் சத்வ குணத்திற்கு, சத்வ குணத்தினின்றும் விசுத்த சத்வ குணத்திற்கு அல்லது குணாதீதத்திற்குப் பிரயாணம் செய்ய வேண்டியுள்ளது. இந்நிலையில் எந்தவித செயலும் செய்யாதிருப்பது மூர்க்கத் தனமேயாகும். அதனால் வாழ்க்கை வீணாகிப்போகும். பந்தங்கள் இன்னும் அதிகமாகி விடும். எனவே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா,

**"கர்மஜ்யாயோ ஹ்யகர்மணஹ "** - (3-8)

- கர்மா செய்யாதிருப்பதைவிட செய்வது மேல் என்றும்,

**"தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே"** -(5-2)

இவ்விரண்டில் கர்ம தியாகத்தை விட கர்ம யோகமே உயர்ந்தது" என இவ்வாறாக கீதையில் அகர்மத்வம் தாக்கப்படுகின்றது, கும்பகர்ணனைவிட இராவணன் மேலானவன். தமோ குணத்தைவிட ரஜோகுணம் உயர்ந்தது.

ரஜோ குணத்தைவிட சத்வ குணம் உயர்ந்தது. எனவே எச்செயலையும் செய்யாதிருப்பதைவிட, காலத்தை வீணாக்குவதைவிட ஏதோவொரு செயலைச் செய்வது உத்தமம். முறையாக அச்செயல் நிஷ்காம கர்மாவாக மாறும். அதன்வழி சித்த சுத்தி, சித்த சுத்தியின் மூலம் ஞானம் இவற்றை அடைய முடியும். இவ்வாறாக கர்மாவைச் செய்து வந்தால் இறுதியில் வீடுபேற்றிற்கு வழி கிடைக்கிறது. எனவே சாதகர்கள் தமோ குணத்தை சத்வ குணமென்ற பிரமையில் விழுந்துவிடாமல் மிகுந்த எச்சரிக்கையுடன் அகர்மண்யத் வத்தை விலக்கி, ஆன்மீக உன்னத நிலைக்கு உயர்த்தும் சத்கிரியைகளைச் செய்து வந்து ஜன்ம சாபல்யம் அடைய வேண்டுமென கிருஷ்ணர் சொல்கிறார்.

3. **சார்வாக மதம்:**

"நம்முன் காணப்படுவது நிரந்தரமான சத்யம். புனர் ஜென்மம் இல்லை. எனவே உயிருடன் இருக்கும் நான்கு நாட்கள் நன்கு உண்டு, குடித்து சந்தோஷமாக நாட்களைக் கடத்த வேண்டும் ஸ்தூல தேகத்தைப் போற்றிக் காப்பதே பரம புருஷார்த்தம்" - சார்வாகர்களின் எண்ணம் இத்தகைய தாகவே இருக்கும். கீதாச்சார்யனுக்கு இத்தகைய எண்ணத்தில் சிறிதளவுகூட உடன்பாடில்லை. எனவேதான் கீதையின் 16 ஆவது அத்தியாயத்தில் அத்தகைய நாஸ்திக எண்ணத்தை வன்மையாகக் கண்டிக்கிறார்.

"தூய்மையோ, ஆசாரங்களோ உண்மை இல்லாதவர்களை இவ்வுலகில் ஈசுவரன் படைக்கவில்லை. ஆண், பெண் சேர்க்கையால்தான் இவ்வுலகம் ஏற்பட்டது என்று வாதிப்பவர்களும், தீராத காமத்தினால் பகட்டான மதத்துடன் கூடியவர்களாய் போகத்தினையே குறிக்கோளாகக் கொண்டு அதற்கென அநியாயமாய் பொருளீட்டுபவர்களும், பொருளை அடைந்தவுடன் பணச்செருக்கினால் கர்வம் அடைபவர்களும் ஆன ஈன மனிதர்களை நரகத்திலும் மிகவும் கீழ்த்தரமான பிறப்புகளிலும் வீசியெறிகிறேன் அவர்களின் கதி அதோ கதியே" என்று அத்தகைய அல்பர்களைக் குறித்து

மிகுந்த ஆவேசத்துடன் கூறியுள்ளது சாதகர்களுக்கு ஒரு நல்ல எச்சரிக்கை. எனவே முமுக்ஷுக்கள் அத்தகைய நாஸ்திக எண்ணங்களை, சார்வமாக மதத்தை அணுகவிடாது, பரமாத்மாவை உண்மையென்றும், தேகம் முதலான பௌதீக வஸ்துக்களின் ஜாலங்கள் பொய்யானவை என்றும் உணர்ந்து, போகப் பற்றை ஒழித்து யோகப்பற்றை வளர்த்து, பரமார்த்த நெறியில் ஒன்றிப் போய் பிரம்மானந்த அனுபவத்தை இப்பிறவியிலேயே அடைந்து மகிழ்தல் வேண்டும்.

4. **பௌதீக வாதம்:**

இயற்கையினாலேயே எல்லாம் நடந்து வருகின்றது. எனவே புருஷனின் தேவை இனி இல்லை., கார்ய, காரண ரூபமான இச்சராசரமனைத்தும் இயற்கையின் கட்டுப்பாட்டில் உள்ளது. இயற்கை தானே சேதனமாகிறது. எல்லாச் சக்திகளையும் அது உள்ளடக்கியது. " என்ற பௌதீக வாதத்தினை கீதை அங்கீகரிக்காது, இயற்கையின் நடப்பு உண்மையை கீதை ஒப்புக் கொண்டாலும், அவ்வியற்கை புருஷனுக்கு கட்டுப்பட்டேயுள்ளது என்றும், சுயமாக (ஸ்வதஹ) ஜடப்பொருளாய் இருந்து புருஷனால் சைதன்யத்தைப் பெற்றுக் கொண்டு செயலாற்றுகிறது என்றும் சொல்கிறது.

**"மயாத்யக்ஷேண ப்ரகிருதிஹ ஸூயதே ஸசாசரம்"**
**- (9-10)**

சைதன்யமான பரமாத்மாவின் கருணையினால் இயற்கை இத்தாவர ஜங்கமப் பொருள்களான உலகை உருவாக்குகிறது என்பதை மேற்சொன்ன கீதா வாக்கியம் நிரூபிக்கிறது, உலகம் என்ற சபைக்கு பகவான் தலைவர், இயற்கைச் சபையை நடத்துபவர். தலைவர் இல்லாவிடில் மற்றையோர் இருப்பினும் எங்ஙனம் சபை நடத்தப் படுவதில்லையோ உலகின் விஷயத்திலும் அவ்வாறே என்று கருத வேண்டும். பரமாத்மா இயற்கைக்கு ஆதாரனமானவன். ஆதாரம் இல்லாமல் ஆதேயம் நிலைப்பதில்லை. 'சூத்ரே மணிகணா இவ' என்றபடி இந்த பிரம்மாண்டத்தை மணி ஆரத்திலுள்ள

நூலைப் போன்று ஆதாரத்திற்குக் காரணமான பரமாத்மா வியாபித்துள்ளான். நூல் இல்லாவிடில் மணிகள் சிதறிப்போகும். அவ்வாறே புருஷன் இல்லாவிடில் இயற்கை என்பதே இல்லாதது போலாகும். மேலும்,

**"க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத"**
**-(13-34)**

"ஏ அர்ஜுனா! க்ஷேத்ரக்ஞன் ஆன பரமாத்மா க்ஷேத்ரங்களைப் பிரகாசிக்கச் செய்கிறான்.' என்பது கீதா வாக்கியம் (இயற்கையை) இதன் மூலம் க்ஷேத்ரம் ஜடமானது என்றும், அதற்கு இயற்கையான ஒளி இல்லை என்பதும், க்ஷேத்ரக்ஞன் ஆன புருஷனே (பரமாத்மாவே) க்ஷேத்ரமான அவ்வியற்கையை பிரகாசிக்கச் செய்கிறார் என்றும் தெரியவருகின்றது. இவ்வாறாக இயற்கையே தானாக தன்சக்தியினால் எல்லாவற்றையும் நடத்துகின்றது என்ற பௌதிக வாதத்தினை கீதை எதிர்க்கிறது.

மற்றும் பஞ்சபூதங்கள் ஸ்திரமற்றவை, சலனங்கள் உடையவை, விகாரமடையக் கூடியவை, அழியக்கூடியவை. இவற்றை நம்பினால் ஜீவன் அழிவை அடைவான். ஆடிக் கொண்டிருக்கும் ஒரு கம்பத்தைப் பற்றிக் கொண்டு அதனைச் சுற்றி ஆடிக் கொண்டிருப்பவன் அதனுடன் தானும் விழுந்து விடுவான் அல்லவா? இப்பிரபஞ்சத்தில் சலனமின்றி நிலைத்து நிற்பது ஒன்றே. அதுவே பரமாத்மா. 'அசலோ அயம் ஸநாதனஹ' என்று கீதை சொல்கிறது. பரமாத்மா சர்வ சாக்ஷி. அப்பொருளை நம்பினவர்க்கு அழிவைக் குறித்த பயமில்லை. பௌதீக வஸ்துக்களை நம்பினவர் தவறாமல் துன்புறுவர். இதுவரை பலரும் அவ்வாறு அழிந்துள்ளனர். கானல் நீரைக் கண்டு ஓருபவர், பிரதி பிம்பத்தின் பலனைத் தள்ளிவிடாது அடைய விரும்புவோர், ஏமாற்றத்தை அடைய வேண்டி இருக்கும். எனவே

இயற்கையை நம்பாது, புருஷனையே நம்பி ஆன்மீக நோக்குடன் ஜன்ம ஈடேற்றம் அடைதல் வேண்டுமென்று கீதை போதிக்கின்றது. "என்னால்தான் இவ்வுலகம் நடந்து வருகின்றது. (மத்தஹ ஸர்வம் ப்ரவர்த்ததே). நான்

இஜ்ஜகத்திற்குத் தந்தை, தாய், தாத்தா, விதாத்தா (பிதாமஹஸ்ய, ஜகதோ மாதா தாதா, பிதாமஹஹ). எனவே பிறவற்றை அணுகாது ஆன்மீக ரூபமான என்னையே பின்பற்றுவீராக (மாமேகம் சரணம் வ்ராஜ) என்று பகவான் கீதையில் கருணையுடன் பலவிடங்களில் போதிக்கிறார். எனவே சம்சார துக்க சாகரத்தினின்றும் விடுதலை கோரும் முமுக்ஷுக்கள் பௌதீக வாதத்திற்கு விடை கொடுத்து ஆன்மீக வாதத்தினை ஊக்குவித்து இதயத்தில் இருக்கும் பரமாத்மாவை அடைந்து பரமானந்தம் அனுபவிப்பீராக

5. **தேகத்தினை வருத்திச் செய்யும் தவம்:**

மோக்ஷத்திற்கு எதிரி சித்தத்தில் இருக்கும் துஷ்ட வாசனைகள், எண்ணங்கள், கெட்ட நடவடிக்கைகள், அவையேயன்றி தேகமல்ல. தேகத்திற்கு எதுவும் தெரியாது. அதனை வருத்தினால் மோக்ஷம் கிடைக்கும் என்று எண்ணுவது பெருந் தவறு. புற்றினை அழித்து விட்டால் மட்டும் பாம்பு சாவதில்லை. ஜன்ம ஜன்மாந்திரமாக இதயத்தில் நன்றாக ஊறிவிட்ட காமக்குரோதங்கள், தேகத்தினை வருத்தினால் மட்டும் ஒருபோதும் அழிந்துவிடாது. எனவே மகனீயர்கள் தம் சித்தத்தினை, இந்திரியங்களை நன்றாகப் புடம் போட்டு எறித்துச் சாம்பலாக்கி, புலனடக்கத்தைப் பயிற்சி செய்து அதில் விருப்பு வெறுப்பெனும் காஷாயத்தினையும் புற அழுக்குகளையும் களைந்து எறிந்து விடுவர். இதுவே உண்மையில் தவம். விருப்பு வெறுப்பு முதலான அழுக்குகளைச் சித்தத்தினின்றும் களைதலே தவமேயன்றி தேகத்தினை வருத்துதல் அன்று. இதனைக் குறித்து கிருஷ்ண பரமாத்மா கீதையின் 17 ஆவது அத்தியாயத்தில் எச்சரித்துள்ளார்.

**"அசாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே**
**தபோ ஜனாஹா**
**தம்பாஹங்காரஸம்யுக்தாஹ் காமராக**
**பலான்விதாஹா" - (17-5)**

கர்யஷயந்தஹ் சரீரஸ்தம் பூதக்ராமம
சேதஸஹ
மாம் சைவாந்தஹ சரீரஸ்தம் தான்
வித்த்யாஸுரநிஸ்சயான்" - (17-6)

அவ்வாறு கோரத்தவம் செய்து சரீரத்தை வருத்திக் கொள்பவர்கள் அசுரர்களேயென்று இழித்துரைக்கிறார். அவற்றுக்கு மாற்றாக அவ்வத்தியாயத்திலேயே சரீர, வாசா, மானசிகத் தவம் என்ற மூன்றுவிதமான தவங்களைக் குறித்து நன்றாக போதித்துள்ளார். அவை ஒவ்வொருவரும் பின்பற்றக் கூடிய நடைமுறை யோகங்களாகும். ஆயின் 'தேக ஆரோக்கியத்திற்காக அவ்வப்போது ஏகாதசி முதலான விரத நாட்களில் உபவாசம் முதலானவை இருத்தல் கூடும். தேக சுத்திக்காக அவ்வாறான சிறிய விரதங்களை மேற்கொள்ளக் கூடுமேயன்றி, கோர தவத்தினால் சரீரத்தைத் துன்புறுத்துவதால் பலன் ஏதுமில்லை. எனவே அவ்வாறானவற்றைத் தவிர்த்து ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் காட்டிய சாத்வீக தவத்தினை மாத்திரமே மேற்கொண்டு முமுக்ஷுக்கள் பரமார்த்த சித்திக்கு முயற்சித்தல் வேண்டும்.

6. **மித்யாசாரம்:**

சிலர் கர்மேந்திரியங்களுடன் எந்த விதமான செயலும் செய்யாதிருந்து, மனதினால் மாத்திரம் மூவுலகங்களிலும் நடப்பனவற்றை அறிவர். அத்தகையோர் சரீர இந்திரியங் களால் செயல்புரியா விட்டாலும் மனதினால் பலவித கர்மாக்களைச் செய்வதால் கர்ம புத்தியுடையவர்களேயாவர்.

"கர்மேந்திரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்
இந்திரியார்த்தான்வி மூடாத்மா மித்யாசாரஹ் ஸ உச்யதே"
- (3-6)

கர்மேந்திரியங்களை ஒதுக்கித் தள்ளி எவன் மனதினால் சப்தாதி விஷயங்களை சிந்தித்திருப்பானோ, அத்தகையோன் விவேக சூன்யனேயாவான், அவன் செயல் மித்யா சாரமென்றும், கபடாசாரமென்றும் சொல்லப்படும்"

என்கிறார். எனவே முதலில் மனதினை பழுது பார்த்துக் கொள்வது மிக முக்கியமான வேலை. விஷய வாசனைகளன்றி அதனை முதன் முதலில் தூய்மை செய்து கொள்வது அவசியம். இவ்வுலக விஷயங்கள் என்ற வழிக்கே போதல் கூடாது. எப்போது விஷய சங்கல்பங்களில் ஈடுபடாது, வாசனைகளற்று இருக்குமோ அப்போது கர்மேந்திரியங் களால் செய்யப்படும் கர்மாக்களைச் செய்தாலும் மனிதன் பந்தத்தில் கட்டுப் படமாட்டான்.

**"யஸ்த்விந்திரியாணி மனஸா நியம்யாரபதே அர்ஜுன
கர்மேந்த்ரியைஹ் கர்மயோகமஸக்தஹ ஸ விசிஷ்யதே"**
- (3-7)

எனவே சாதகர்கள் கீதாச்சார்யனின் இந்த எச்சரிக்கையை நன்றாக கவனத்தில் இருத்தி, மித்யாசாரத்தை ஒதுக்கிப் பயிற்சி காலத்தில் மனத்தில் அத்தகைய விஷய சங்கல்பங்களை வரவிடாது தடுத்து, தெய்வ பாவனை மட்டுமே இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். ஆரம்பத்திலேயே அத்தகைய நிலையை அடைய இயலாது போயினும் பல காலப் பயிற்சியினால் அதனை எப்படியாவது அடையவேண்டும். கர்மேந்திரியங்களைக் கட்டுப் படுத்துவதால் மட்டும் எத்தகைய பலனும் இல்லை. மனதினை உள்முகமாக அடக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

கீதையைப் படிப்பவனுக்கு ஏற்படக் கூடிய சில ஐயங்கள்..

**1. ஐயம்:** கிடைத்த சில நிமிட நேரத்திலேயே இவ்வளவு பெரிய கீதையை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா எங்ஙனம் கூற முடிந்தது?

**விடை:** உண்மையில் கூறப்போனால் ஸ்ரீ கிருஷ்ணர் செய்ய இயலாத காரியம் இவ்வுலகத்திலேயே ஏதுமில்லை. நடக்கமுடியாததையும் நடத்திக் காட்டும் நாயகன் அவன். மாயையை யடக்கி ஆள்பவன். தன் யோக மாயையால் பெரியலீலைகளைச் செய்து காட்டி உலகினை ஆச்சரியத்தில் ஆழ்த்தியவன் அவன். அத்தகையவன் சிறிது நேரத்திலேயே பேருபதேசம் ஆற்றுவது கடினமான தொன்றில்லை.

2. யுத்த சமயத்தில் பகவான் சூத்திரங்கள் மூலம் சில தர்மங்களை போதித்தருள, வேத வியாசர் அவற்றைச் செய்யுள் ரூபத்தில் விரிவான நூலாகச் செய்திருக்கக்கூடும்.

3. யுத்த ஆரம்ப தினத்தில் இருபக்கப் படைகளும் போர்க் கருவிகளைப் பூண்டு நின்ற உடனேயே போர் துவங்கிவிடவில்லை. ஒன்றிரண்டு சிறிய நிகழ்ச்சிகள் நடந்தன. தர்மராஜன் கால் நடையாக எதிரிப் படைகளின் முன் நடந்து சென்றான். சகோதரர்களும் அவரைப் பின்பற்றினார்கள். தர்மர், பீஷ்மர், துரோணர், கிருபாச்சாரியார் ஆகியோரிடம் சென்று அவர்களின் ஆசியைப் பெற்று வந்தார். இறுதியில் எதிரிப் படைகளில் யாரேனும் தன்னைச் சரணடைந்து விட்டால் அவர்களைக் காப்பாற்றுவதாகவும், அபயம் அளிப்பதாகவும் பிரகடனம் செய்தபின் தான் பாண்டவர்கள் பக்கம் வந்து சேர்ந்தார். இம்மாதிரியான நிகழ்ச்சிகள் நடந்தபின் தான் யுத்தம் ஆரம்பித்தது என நாம் ஊகித்துக் கொள்ளக் கூடும். மேலும் அது யுத்தத்தின் முதல் நாள் ஆனதால் யுத்த சம்பந்தமான சில ஏற்பாடுகள் செய்து கொள்வதற்கு சிறிது நேரமாகியிருக்கக் கூடும். அந்த நேரத்தில்தான் கீதோபதேசம் செய்யப்பட்டது. இதில் விபரீதம் ஏதுமில்லை.

4. யுத்த நீதியை யனுசரித்து ஒவ்வொருவரும் போர்க் களத்தில் பின்பற்றப்பட வேண்டிய சில தர்ம சூத்திரங்கள் உள்ளன. அதிலொன்று - எதிரிபக்கத்தில் இருப்பவன் நிராயுத பாணியானாலோ, சோகத்தில் இருந்தாலோ அவன் மேல் சஸ்திரப் பிரயோகம் செய்தல் கூடாது என்பதாகும். இரு பக்கத்திலும் யுத்த நீதியைக் கௌரவிக்கக் கூடிய பெரியோர்கள் பலர் இருந்தனர். அர்ஜுனன் யுத்த ஆரம்பத்தில் தன் வில் அம்புகலை நழுவவிட்டு, சோகம் நிறைந்த மனத்தவனாய் இருந்தான். பாண்டவர் பக்கத்தில் அர்ஜுனன் முதன்மையான ஸ்தானத்தை ஆக்ரமித்துக் கொண்டுள்ளவன். அத்தகையோன் ஆயுத மற்றிருக்கையில் எதிரி உடனேயே யுத்தத்தை ஆரம்பித்திருப்பானா? எனவே அவர்கள் சிறிது நேரம் தாமதித்தபின் ஸ்ரீ கிருஷ்ணர் உபதேசத்தினால்

அர்ஜுனன் மனத்தை திடப் படுத்திக் கொண்டு மறுபடியும் பாணமெடுத்து போர்க்களத்தில் இறங்கியவுடன்தான் யுத்தம் ஆரம்பித்தது எனலாம்.

இங்கு மேற் சொல்லப்பட்டக் காரணங்களால் யுத்த அரங்கத்தில் கீதை உபதேசம் நடந்தேறியிருக்காது என்பதற்கான காரணம் ஏதுமில்லை என்பது தெளிவாகிறது.

வினா - கிருஷ்ணரும் அர்ஜுனனும் சிறு வயதிலிருந்தே பல நேரங்களில் கலந்து உரையாடிக் கொண்டிருந்தனர். அவ்வாறிருக்கையில் அமைதியான நேரத்தில் கீதையை உபதேசிக்காது, சுற்றும் குழப்பமான சூழ்நிலை இருக்கையில், யுத்த சமயத்தை ஏன் கிருஷ்ணர் தேர்ந்தெடுத்தார்?

விடை - 1. சரியான சமயத்தில் செய்தால் தான் எந்தவொரு காரியமும் நற்பலனை அளிக்கும். இக்கருத்து ஆன்மீகத் துறையில் இன்னும் நன்றாகவே பொருந்தும். இரும்பு நன்றாகப் பழுக்கக் காய்ந்தவுடன்தான் கன்னான் அதனை வளைத்தற்கு முயற்சி செய்வான். அஸ்திவாரம் நன்றாகக் கெட்டியானவுடன்தான் பணியாளன் அதன்மீது கட்டத் தொடங்குவான்: நோய் இருக்கும்போதுதான் வைத்தியன் மருத்துவம் செய்வான். நிலத்தை நன்கு பண்படுத்திய பின்தான் உழவன் விதைகளை நடுவான். அவ்வாறே அர்ஜுனனின் இதயம் வைராக்கியத்துடன் நிறைந்திருப்பது கண்டு 'இதுவே ஞான போதனைக்குச் சரியான சமயம்' என்ற நிச்சயித்து உடனேயே தத்துவ உபதேசம் செய்யத் தொடங்கினார். அத்தகைய நிலை அதுவரை அர்ஜுனன் வாழ்க்கையில் ஏற்படவேயில்லை. எனவே அத்தகைய உபதேசத்திற்கு காலம் வரவில்லை. மற்றும் யுத்த களத்தில் அர்ஜுனன், தருமம் சம்பந்தமாக குழம்பிப் போய் எதைச் செய்தல் வேண்டும், எது செய்தல் கூடாது என ஞான போதனைக்காக பரிதவிக்கும் நிலையில் இருந்தான். அத்தகைய தீவிர தாப நிலை, தர்மத்தை அறிய வேண்டும் என்ற தீவிர வேட்கை அதுவரை அவனுக்கு எப்போதும் ஏற்பட்டதில்லை. எனவே ஸ்ரீ கிருஷ்ணர் அதுவரை அவன் வழிக்குச் செல்லவில்லை. இப்போது

யுத்தகளத்தில் இறங்கியவுடன் அத்தகைய ஞானதாகம் ஏற்பட்டது. எனவே உடனே அவர் ஞானமெனும் அமுத மழையைப் பொழிந்தார்.

2) மற்றும், வாழ்க்கை யென்பதே ஒரு யுத்தகளம். ஒவ்வொரு நாளும் தர்ம அதர்மத்திற்கு, சத்ய அசத்யங்களுக்கு, நியாய -அநியாயங்களுக் கிடையே பயங்கரமான போராட்டம் மனிதனின் சித்தமெனும் குகையில் நடந்து கொண்டேயிருக்கிறது. அத்தகைய போராட்டத்தின் பிரதிபிம்பமே பாண்டவ கௌரவ யுத்தம். பாண்டவர்கள் சத்குணங்களின் பிரதிநிதிகள், கௌரவர்கள் தீய குணத்தின் பிரதிநிதிகள். ஸ்ரீ கிருஷ்ணர் சத்குணங்களின் பக்கம் சேர்ந்து அவர்களை உற்சாகப் படுத்தி, தீய குணங்களின் மீது படையெடுத்து அரக்கக் குணங்களை வென்றார். அவ்வாறே ஒவ்வொரு ஜீவியும் பரமாத்மாவினைப் பின்பற்றி, கெட்ட எண்ணங்களை விடுத்து, இதயத்தினை தர்ம மயமாக ஆக்கிக் கொண்டு பரமானந்தம் அனுபவித்தல் வேண்டுமென்று போதிப்பதற்காகவோ என்னவோ புறப் போரான யுத்த களத்தினை கீதா போதனைக்கு ஏற்ற களமாக ஸ்ரீ கிருஷ்ணர் கருதியிருக்கக் கூடும்.

**3. வினா** - பீஷ்மர், துரோணர், கிருபாச்சார்யார், தர்மர், பீமன், கர்ணன் முதலான பல நல்லோரிருக்கையில் அர்ஜுனனுக்கு மட்டுமே ஏன் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையை உபதேசித்தல் வேண்டும்?

விடை - அர்ஜுனன் சாதாரண மானவன் அல்லன். நர நாராயணரில் ஒருவன். நாராயணர் ஸ்ரீ கிருஷ்ணரின் ரூபமாக அவதரிக்க, நரன் பார்த்தனின் ரூபமாக பிறவியெடுத்தான். 'பாண்டவானாம் தனஞ்ஜயஹ - பாண்டவர்களில் அர்ஜுனன் நான்' என்று பகவான் கீதையில் தெரிவித்துள்ளார் அல்லவா? இதனின்றும் அர்ஜுனன் எத்தகைய சக்தி யுடையவன் என்பது புலனாகின்றது. அர்ஜுனன் பல தேவர்களின் பாராட்டுக் குரியவனாகி பலவித அஸ்திர சஸ்திரங்களையும் பெற்றான். ஒரு சமயம் அவன் கடுந்தவம் செய்து சிவன் மெச்சும் படியாகச்

செய்து பாசுபத அஸ்திரத்தைப் பெற்றான். ஒரு சமயம் 'கோகிரகண' சமயத்தில் தனியாக பீஷ்மருடன் இருந்த கௌரவ சேனையனைத்தையும் எதிர்த்துப் போரிட்டு ஓடச் செய்தான். இவை அவனது அபரிமிதமான பல பராக்கிரமத்திற்கு எடுத்துக் காட்டு. அவனது சில குணத்தைப் பார்க்கப் போனால், சுவர்க்கத்தில் ஊர்வசியின் பகட்டுக்கும், வலை விரிப்பிற்கும் சிக்காது வெளிவரத் தக்க கட்டுப்பாடுடையவன்.

"சிஷ்யஸ்சா ஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்" -'நான் உனது சிஷ்யன், உன்னையே சரணடைந்தேன். ஆக்ஞையிடுக என்று ஸ்ரீ கிருஷ்ணரை வேண்டி அர்ஜுனன் நட்புடன் பக்தியையும் கலந்து கொண்டான். எனவே தான் ஸ்ரீ கிருஷ்ணர் அவனை "பக்தோ அஸி மே ஸகாசேதி - நீ என் சகாவேயன்றி பக்தனும் ஆவாய்" என்று சொல்வதைப் பார்க்கலாம். ' நீ என் சகாவாகவும் பக்தனாகவும் இருப்பதால் உனக்கு மிகவும் இரகசியமான பிரம்மவித்தையை " ரஹஸ்யம் ஹ்யேதத் உத்தமம்" உபதேசிக்கிறேன் என்று பகவான் கூறுகிறார். 'நீ எனக்கு மிகவும் பிரியமானவன்.' (ப்ரதிஜா ப்ரியோ அஸிமே, இஷ்டோ அஸி மே த்ருடமிதி) என்று பலவிடங்களில் கூறுகிறார். அர்ஜுனனின் பக்தியே பகவானின் பிரியத்திற்கு வழிகோலியது. இவ்வாறாக பௌதீக, ஆன்மிக பலம் நிறைந்தவனும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் நெருங்கிய நண்பனும் ஆகிய பெரும் அருகதையுள்ளவனாக இருப்பதால் கீதையை உபதேசிப்பதற்கு அர்ஜுனனையே பகவான் தேர்ந்தெடுக்க நேர்ந்தது எனலாம்.

4. வினா - 'யுத்தம் செய்' என்று போதிப்பதால் கீதையில் ஹிம்சையை ஆதரித்தாக ஆகாதா?

விடை - இல்லை. கீதை ஒரு நாளும் ஹிம்சையை ஆதரிக்காது. அகிம்சையையே ஆதரித்து வந்துள்ளது.

1. "அஹிம்ஸா சாந்தி ரார்ஜவம்" - (13-8)
2. "அஹிம்ஸா ஸத்ய மக்ரோதஹ" - (16-2)
3. "அஹிம்ஸா ஸமதா துஷ்டிஹ" - (10-5)

4. "ப்ரம்மசர்ய மஹிம்ஸா ச" - (17-14)

5. "அத்வேஷ்டா ஸர்வ பூதானாம் மைத்ரஹ்
கருண ஏவ ச - (12-13)

கீதை தத்துவத்தின் சரியான பொருளைப் புரிந்து கொள்ளாதவனே இங்ஙனம் கூறுவான். 'யுத்தம் செய்' என்று எதற்கு, எவருக்கு, எந்நிலையில் சொல்ல நேர்ந்தது என்பதை விசாரித்தால் அத்தகைய விமர்சனத்திற்கே இடமேயிருக்காது. அகிம்சை தத்துவத்தை மிகவும் நுணுக்கமாகப்புரிந்து கொள்ளல் வெண்டும். அர்ஜுனன் க்ஷத்திரியன் அரசன். இராஜ்ய பரிபாலனம் அவனது தர்மம். துஷ்டர்களைத் தண்டிப்பதும் நல்லோர்களை காப்பதும் அவன் செய்தல் வேண்டும். அதன்மூலம் தர்மத்தினை, சாந்தியினை உலகில் நிலவுதற்கு உதவுதல் வேண்டும். (Peace and Security) கிருஷ்ணரின் அவதாரம் அதற்காகவே ஏற்பட்டது என்பது கீதையில் மிகவும் தெளிவாக்கப் பட்டுள்ளது.

**"பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" -(4-8)**

தீய செயல்களில் ஈடுபட்டவர்கள், சமூகத் துரோகிகள், தேசத்துரோகிகளுக்குத் துணை போவார். இவர்களைத் தண்டிககாமல் விட்டால் தேசமும், சமூகமும் சிதறிப் போய் அராஜகம் தலைவிரித்து. துஷ்ட சக்திகள் பெருகி, மக்கள் நிம்மதியின்றி துன்பத்திற்குள்ளாவார்கள். வேர்ப் புழுக்களை சரியான காலத்தில் அழிக்காவிட்டால் சிறிது நாட்களில் செடியையே வெட்டி எறிய நேரிடும். புண்ணினை அறுவை சிகிச்சை (Operation) செய்து நன்முறையில் கவனிக்காவிட்டால் அதுவே பெரிதாகப் போய் தேகமெங்கும் பரவி, கோரமான விபத்து சம்பவிக்கக்கூடும், அதற்காகப் புண்ணினை அறுவை செய்தல் இங்கு இம்சையாகாது. அகிம்சையே. அவ்வாறே சமூக விரோத சக்திகள் சிலர் இருப்பின் அரசை பரிபாலிப்போர் அவர்களின் மீது நடவடிக்கை எடுத்து அழித்தல் வேண்டும். இல்லையெனின் சமூகமனைத்தும் நசித்துப்போகும். திருட்டுத்தனம் செய்தவனை, கொலை

செய்தவனை காவலர்கள் பிடித்து மாஜிஸ்ட்ரேட்டிடம் ஒப்புவித்து சிறைவாசமோ, தூக்குத் தண்டனையோ விதிப்பர். இச்செயல், திருடர்களை இம்சிப்பதாகாது. அத்தகைய நடவடிக்கையினால் உலகிற்கு அஹிம்சை, சாந்தி, காவல் அனைவருக்கும் நன்மை ஆகிய இவற்றையே உலகிற்களித்தவர் ஆவர்.

அவ்வாறே துரியோதனன் முதலானோர் கயவர்களாகி உலகிற்கு துன்பம் அளித்தனர். உடன்பிறப்புகளான பாண்டவர்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டியதைக் கொடுக்காது, ஊசிமுனை நுழையும் அளவு நிலம்கூட தரமாட்டேன் என்று அடம் பிடித்தான் ஸ்ரீகிருஷ்ணர் தூது சென்று எத்துணை நயமாக எடுத்துச் சொல்லியும் அவர்களின் கடின இதயம் சிறிதும் உருகவில்லை. வேறு வழியின்றி பாண்டவர்கள் யுத்தத்தில் இறங்கநேரிட்டது.

எனவே யுத்தம் தவிர்க்க முடியாது போயிற்று. உலக நன்மைக்காக அரசர்கள் தீயோரைத் தண்டிப்பது எக்காலத்தும் இம்சை எனப்படாது. அவ்வாறு செய்வது க்ஷத்திரியர்களின் தர்மம். அர்ஜுனன் க்ஷத்திரியன் ஆனதால் அவனது தர்மத்தை ஸ்ரீ கிருஷ்ணர் போதித்தார். இம்சை, அகிம்சைத் தத்துவங்களைப் பரந்த நோக்குடன் பார்த்தல் வேண்டுமேயன்றி குறுகிய நோக்குடன் அல்ல. கீதையில் பல்வேறிடங்களில் அகிம்சையே போதிக்கப்பட்டுள்ளதே யன்றி இம்சையன்று. எல்லாப் பிராணிகளிடத்தும் தயையுடன் இருத்தல் வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளதே அன்றி வெறுப்பைக் காட்டு என்று சொல்லவில்லை. இத்தகைய அகிம்சை நோக்குடைய கீதாச்சார்யன் இம்சையை போதித்தான் என்பது நகைப்பிற்குரியது. காரணமற்றது. தனிப்பட்ட சமயத்தில், தனிப்பட்ட நிலையில், தனிப்பட்ட மனிதனுக்கு (க்ஷத்திரியனுக்கு) குறிப்பாகச் சொல்லப்பட்ட நீதி அது. அது க்ஷத்திரியன் ஒவ்வொருவருக்கும் போரைப் பற்றி வலியுறுத்தும் கட்டம். நானே கர்த்தா என்ற எண்ணமின்றி, ஈசுவரார்ப்பண புத்தியுடன், பலனையோ நிஷ்பலனையோ எதிர்பாராது சமபுத்தியுடன் நிஷ்காமமுடன் செயலாற்றுக

என்று போதிக்கப்பட்டது. நியாயாதிகாரி குற்றம் புரிந்தவர்க்கு தண்டனை விதிப்பதில் எத்தகைய இம்சை உள்ளதோ, அர்ஜுனன் யுத்தம் புரிவதிலும் அத்துணை இம்சையே உள்ளது. எனவே கீதை அகிம்சையையே ஊக்குவிக்கிறதே யன்றி இம்சையையன்று என்று பன்முறை அறைந்து கூற இயலும்.

## கீதை - யோக வாசிஷ்டம்

இதுவரை கீதையைப் படிப்போருக்கு ஏற்படக்கூடும். ஐயங்களை விசாரித்தறிந்தோம். இனி ஆன்மீக இலக்கியத்தில் பெரிதும் வழக்கில் இருப்பதும், சிறந்த உதாரண காவியமாக எண்ணப்படுவதும், மிகவும் பழமையானதாகவும் கருதப்படும் யோக வாசிஷ்டத்திற்கும் கீதைக்கும் உள்ள ஒற்றுமைகளையும் அவற்றிற்கிடையேயுள்ள தொடர்பையும் தெரிந்து கொள்வது படிப்போர்க்கு மிகவும் அவசியமாகையால், சுருக்கமாக இங்கு அலசி ஆராயப்படுகிறது. திரேதாயுகத்தில் மகரிஷி வால்மீகி யோக வாசிஷ்டத்தை 32,000 சுலோகங்களுடன் கூடிய மிகப்பெரிய நூலை இயற்றினார். கீதைக்கும் அதற்கும் கீழ்சொல்லப்பட்டுள்ள ஒற்றுமைகளைக் காணலாகும்.

1. கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு உபதேசித்ததைப் போல் யோகவாசிஷ்டத்தை வசிஷ்டர் ஸ்ரீ ராமசந்தரமூர்த்திக்கு தத்வ உபதேசம் செய்தார். இரண்டும் வினா-விடையாக அமைக்கப்பட்டுள்ளது.

2. அர்ஜுனன் உலக ஐசுவரியங்களின் மீது விரக்தி ஏற்பட்டு திரைலோக சாம்ராஜ்யத்தினையும் வேண்டாம் என்று வெறுத்து, செயல் புரிவதற்கு இயலாது யுத்த களத்தில் இருந்த போது கிருஷ்ணர் கீதையின் தர்மங்களை எவ்வாறு உபதேசித்தாரோ, அவ்வாறு பதினாறு வயதுப் பிராயத்திலேயே ஸ்ரீ இராமன் கண்ணால் காணப்படும் உலகத்தின் நிலையாமையை நினைத்துப் பார்த்து. போகங்களின் மீது முழுமையான விரக்தியுற்று செய்வதறியாது எதிலும் ஈடுபாடின்றி இருக்கையில் அவரின் குலகுருவான ஸ்ரீ வசிஷ்ட முனிவர் அவருக்கு

தைர்யமும் உற்சாகமும் ஏற்படுத்தும் வகையில் யோக வாசிஷ்டமெனும் ஒப்பற்ற ஆன்மீக போதனையை அளித்தார்.

ஸ்ரீ கிருஷ்ணரின் நற்போதனையால் அர்ஜுனன் மோஹநித்திரையினின்றும் எவ்வாறு விழித்து செயலாற்றுதற்கு எழுந்தானோ அவ்வாறே ஸ்ரீ வசிஷ்டரின் ஆன்மீக போதனையால் ஸ்ரீ இராமர் மிக்க துயரத்தைத் துறந்து, செயலின்மை விடுத்து செயலாற்றத் தொடங்கினார்.

ஸ்ரீ யோக வாசிஷ்டம் திரேதா யுகத்தினது, பகவத் கீதை துவாபர யுகத்தின் இறுதி காலத்தது. இரண்டிற்கு மிடையில் சுமார் இரண்டு யுக கால இடைவெளி. ஆயினும் யோக வாசிஷ்ட கிரந்தத்தில் கீதை சம்பந்தமான விஷயங்கள் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. யோக வாசிஷ்டத்தில் நிர்வாண பிரகரணத்தில் அர்ஜுனோ பாக்யானத்தில் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனர்களின் இடையில் நடக்கவிருக்கும் ஸ்ரீ பகவத் கீதாரூப சம்பாஷணை அனைத்து விவரங்களோடு காட்டப்படுகிறது. அச்சந்தர்ப்பத்தில் சிற்சில கீதா சுலோகங்கள் உள்ளது உள்ளவாறே அந்நூலில் பொதிந்து வைக்கப் பட்டுள்ளது. ஓகோ, இது வசிஷ்ட மகரிஷி போன்ற திரிகால ஞானியின் மேன்மை எனக்கூடும். மற்றும் யோக வாசிஷ்டம் போன்ற ஒரு சிறந்த நூலில் ஒரு பகுதி முழுவதும் கீதைக் கெனத்தனியாக ஒதுக்கியிருப்பதைப் பார்க்க கீதை எத்தகைய மகிமையைப் பெற்றுள்ளது என்பது தெளிவாகிறது. யுகயுகங்களுக்கு முன்பாகவே அதனின் புகழ் உலகமெங்கும் பரவியிருந்ததைப் போல் தோன்றுகிறது. எனவே பழைய காவத்திலிருந்தே வசிஷ்டாதி மகரிஷிகள் இதய பீடத்தில் இடம் பெற்று, இராமசந்திரன் முதலான மகனீயர்களுக்கு செய்ய வேண்டிய செயலை போதிக்கவல்ல கீதையைப் போன்ற தலைமையான இலக்கிய நூலை முமுக்ஷுக்கள் அனைவரும் பின்பற்றி பந்தங்களைத் தொலைத்து பரமானந்தத்தை அனுபவிப்பாராக.

**அன்றாட வாழ்க்கையில் கீதையின் பயன்:**

இவ்வுலகில் எண்ணிக்கையற்ற நூல்கள் தினமும் வெளியிடப் படுகின்றன. சில நாவல்கள், சில நாடகங்கள், சில கதைகள், சில இலக்கிய நூல்கள், சில சரித்திர விஞ்ஞான ஆராய்ச்சி நூல்கள் - இவ்வாறாக எத்தனையோ நூல்கள் வெளிவருகின்றன. இவற்றை ஒரு முறை படித்தபின் புறத்தில் வைத்து விடுவர். ஆயின் இவை அனைத்திலும் ஒன்றை மாத்திரம் தினந்தினம் விடாமல் பயன்படுத்துவர். அதுவே அகராதி. அதனை எவரும் ஒதுக்கித் தள்ள முடியாது. ஸ்ரீ பகவத் கீதை வாழ்க்கையின் அகராதி போன்றது. அதனை எவரும் ஒதுக்கித் தள்ளுதல் இயலாது. தினந்தோறும், மணிக்கு மணி அதனின் தேவை மனிதனுக்கு ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும். வைத்தியர் மருந்துப் புத்தகத்தை (Materia Medica) தினந்தினம் திறந்து பார்ப்பதைப் போல பிறப்பெனும் வியாதியால் பீடிக்கப்பட்டுள்ள ஜீவர்கள் கீதையை தினந்தோறும் பார்த்தல் தப்பாது. ஏனெனில் தினசரி வாழ்க்கைக்குத் தேவையானவை அதில் சொல்லப் பட்டிருக்கின்றன. மனிதனின் தினசரி வாழ்க்கைக்குப் பயன்படாத மத நூல்களுக்கு உலகில் அதிகமான மதிப்பு இருப்பதில்லை. ஆயின் பகவத்கீதையில் மனிதர்கள் தினந்தினம் எதிர் கொள்ளும் பௌதீகநெறி முறைகள், ஆன்மீகம் குறித்த ஐயங்கள் அனைத்திற்கும் தகுந்த தீர்வு கீதையில் காட்டப் பட்டுள்ளது. எனவே அது மனிதனின் வாழ்க்கைப் பயணத்திற்கு மிகவும் உபயோகமான நூல் என்பதில் எந்தவிதமான ஐயமும் இல்லை. கீதை எவ்விதமாக மக்களுக்குப் பயன்படக்கூடியது என்பதை ஒருவாறு விசாரிப்போம்.

**1. கோபம் வந்தபோது** - கோபம் மனதில் அலையாக எழுவது. அது முதலில் மெல்லிய காற்றைப் போல ஆரம்பித்து, சுழல் காற்றாக மாறி, சூறாவளியாக உருக்கொண்டு புயல் காற்றாக வளர்ந்து ஜீவனை அதோகதிக்குத் தள்ளிவிடும்.

"க்ரோதாத்பவதி ஸம்மோஹஹ் ஸம்மோஹாத்
ஸ்ம்ருதி விப்ரமஹ (2-63)

ஸங்காத் ஸஞ்ஜாயதே காமஹ காமாத்
க்ரோதோ அபிஜாயதே" -(2-62)

"குரோதத்தால் மனிதன் தன்னையே மறந்து விடுவான். அதனால் மோகம் ஏற்படும். மோகத்தால் ஞாபக சக்தி நசித்துப் போய்விடும். அதனால் புத்தி கெட்டு விடும். இறுதியில் அவன் அதோகதியடைவான்" என்று கீதையில் பகவான் முதலிலேயே கோபத்தினால் ஏற்படும் தீமைகளை அனைவருக்கும் தெரியப் படுத்துகிறார். மனிதனை விலங்காக மாற்றுவதில் கோபம் முக்கியப்பங்கு வகிக்கின்றது அதனால் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்று கீதை சொல்கிறது. கோபம் கள்ளைப் போன்றது, கோபம் கொண்டவன், கள் குடித்தவன் இருவரும் தன்னை மறந்து நடந்து கொள்வர். அவர்களுக்கு எது நல்லது எது கெட்டது என்பது தெரியாது. எனவே அவர்களால் உலகிற்குத் தொல்லையே. குரோதம் ரஜோகுணத்தினின்றும் உண்டாகிறது. ரஜோகுணமுடையவனுக்கு எத்தகைய மருந்தினாலும் சாந்தியும் சுகமும் கிடைப்பதில்லை

"ரஜஸ்ஸ்து பலம் துக்கம்" என்று பகவான் சொல்கிறார். "—— குரோதஹ பாருஷ்யமேவ ச அக்ஞானம் சாபி ஜாதஸ்ய பார்த்த ஸம்பதமாஸுரீம்" -(16-4) என்று குரோதத்தை அசுர இயல்பாகக் குறிப்பிடுகிறார். இவற்றை நினைவில் நிறுத்தி மேற் சொன்ன கீதை சுலோகத்தை கோபம் வந்தவுடனேயே மனனம் செய்ய அந்த துஷ்ட அதிதியை வருமுன்பே இதயத்தினின்றும் விரட்டி அடித்து விடவேண்டும்.

2. **போக வஸ்துக்களின் மேல் ஆசையுண்டாகும் போது -**

"போகா பவமாஹ ரோகஹ" என்று வசிஷ்டர் கூறியுள்ளார். அப்படியென்றால் போகங்கள், சம்சாரம் இவை பெரிய ரோகங்கள் என்பது பொருள். இவ்வாக்கியம் திரேதா யுகத்தில் யோக வாசிஷ்டத்தினை எழுதியவர் கூறியது. துவாபர யுகத்தில் கீதாச்சார்யன் ஆன கிருஷ்ணரும் அதை ஆமோதித்து "போகா துஹ்கயோனய ஏவ தே" - (5-22) - போகங்களே துக்கத்திற்குக் காரணம் என்று வாக்களிச்

துள்ளார். அனுபவசாலிகளான பெரியோர்களனைவரும் இவ்வாறே கூறுகின்றனர். சாஸ்திரங்கள், உபநிஷத்துக்கள், இவ்வாறே போதித்துள்ளன ஆயின் எவர் எவ்வாறு கூறினும் பல ஜன்மங்களின் வாசனையால் மக்களுக்கு விஷய போகங்களின் மீதே நாட்டம் ஏற்படுகின்றது. இதனைப் பற்றி சிந்திக்காமல் இருப்பதால்தான் போகங்கள் ருசிகரமாகத் தோன்றுகின்றன. அதில் பொய்யான வசீகரம் உள்ளதேயன்றி உண்மையான அழகு இல்லை. இருப்பின் அதனால் மக்களுக்கு முழுமையான அமைதியையும், திருப்தியையும் ஆனந்தத்தையும் அளிக்கும். அளிக்க வியலும், ஆயின் அது அவ்வாறு அளிப்பதில்லை. 'ஸௌக்யம பிந்து மாத்ரேண துக்கம் பர்வதமேவ ச' என்பது போல் சிறிதளவு சுகம் அவற்றால் கிடைப்பினும் உடனேயே இமயமளவு துக்கம் தொடர்ந்து அணுகுவதற்குக் காத்துக் கொண்டிருக்கும்.

எனவே பாரம அமைதி ரூபமான மோக்ஷத்தினை அடைய விரும்புவோர் அத்தகைய உலக போகங்களைத் தள்ளுதல் வேண்டும் என கீதை பலமுறை வலியுறுத்துகிறது. எவ்வாறெனின்,

"போக ஐசுவர்யங்களில் ஆசையுடையவர் ஆதலால் அபகரிக்கப்பட்ட சித்தத்தையுடையவர் ஆதலால் தியானம் முதலானவற்றில் அவர்களுக்கு முழுமையான ஈடுபாடு இருப்பதில்லை. மற்றும்,

1. **"போகைச்வர்ய ப்ரஸக்தானாம் தயாபஹ்ருத சேதஸாம்**
   **வ்யவஸாயாத்மிகா புத்திஹ் ஸமாதௌ ந விதீயதே"**
   **- (2-44)**

2. **"பாஹ்ய ஸ்பர்சேஷ் வஸக்தாத்மா விந்தத் யாத்மனி யத் ஸுகம்**
   **ஸ ப்ரஹ்மயோக யுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே"**
   **- (5-21)**

3. **"யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா துஹ்கயோனய ஏவ தே**
   **ஆத்யந்தவந்தஹ் கௌந்தேய ந தேஷு ரமதே புதஹ**
   **- (5-22)**

3. "காமோபபோகபரமா ஏதாவதிதி நிஸ்சிதாஹா" -(16-11)

சப்தாதி விஷய போகானுபவமே பரமபுருஷார்த்தம் என்று அசுர இயல்புடையோர் எண்ணியிருப்பர். அது மிகவும் தவறானது. அத்தகையோரை ஈனமான நரகத்தில் நான் வீசி எறிவேன்.'

4. "நிஹ்ஸ்ப்ருஹஸ் ஸர்வ காமேப்யோ யுக்த
இத்யுச்யதே ததா" - (6-18)

(விஷய சலனங்களின்றும் விடுபடும்போது சாதகன் முக்தியடைவான்.)

இவ்வாறு கீதையில் எத்துணையோ, போக தியாகத்தைப் போதிப்பவை உள்ளன. எவ்வப்போது சாதகனுக்கு கண்ணால் காண்பவற்றின் மீது ஆசையுண்டாகிறதோ அவ்வப்போது கீதையில் மேற் சொன்ன வாக்யங்களைப் பல முறை படித்து தைரியத்தை மேற்கொண்டு சித்தத்தை மாற்ற வேண்டும். சாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மாவே எதிரில் நின்று இவ்வாக்கியங்களைச் சொல்வது போல் நினைத்துக் கொள்ள வேண்டும்.

'சப்தாதி விஷயங்களாகிய போகங்கள், துக்கமே விதையாகக் கொண்டுள்ளன, மேலும் அவை அழியக் கூடியவை. அதனால் அறிஞர்கள் அதன்மீது எப்போதும் ஈடுபடமாட்டார்கள் 'என்று பகவான் போகங்களின் கீழ் நிலையைத் தெளிவாக எடுத்துரைக்கிறார். நிலையான சுகம் நமக்குள்ளாகவே இருக்கிறதேயன்றி வெளியில் இல்லை என்றும், அது அழிவில்லாதது என்றும் கூறுகிறார் (5-21) போகத்தின் இழிவைக்குறித்த ஒன்றிரண்டு உதாரணங்களை இங்கு எடுத்துக் காட்டுதல் சரியெனப்படுகின்றது.

1. "இந்திரியார்த்தேஷு வைராக்யம்" -(13-9)

சப்த ஸ்பர்சாதி விஷய போகங்களில் வைராக்கியத்துடன் இருத்தல் வேண்டும்.

2. "சப்தாதீன் விஷயான்ஸ் த்யக்த்வா ராகத்
வேஷெள வ்யுதஸ்ய ச" - (18-51)

சப்தாதி விஷய போகங்களை ஒதுக்குதல் வேண்டும்.

3. மரண பயம் ஏற்படும் போது:- பயங்கள் அனைத்திலும் மரண பயமே மிகவும் பயங்கரமானது. பண்டிதர், பாமரர், செல்வந்தர், ஏழை, பலமுள்ளவர், பலமற்றோர், பிராம்மணர், சண்டாளர் - என்று ஒவ்வொருவரும் 'மரணம்' என்ற வார்த்தையைக் கேட்டவுடனேயே நடுங்கிவிடுவர். ஆயின் அவ்வாறு பயப்படுவது நகைப்பிற்குரியது என்பது கீதையில் நிரூபிக்கப்படுகிறது. மரணம் என்றால் தேகத்தை விடுத்தல். நாம் தேகமாய் இருந்தால்தானே தேகத்தை விடுவதைப் பற்றி நினைத்து அழுவதைப் பற்றி யோசிக்க வேண்டும். ஆயின் நாம் உண்மையில் தேகமல்ல தேஹி. பாஞ்ச பௌதீக வஸ்துவல்ல. நிலையான சச்சிதானந்த ஸ்வரூபமே நாம். சிதிலமடைந்த ஆடைகள் போனால் எவரும் வருந்துவதில்லை. அவ்வாறே தேகம் மூப்பினால் அழியும்போது விவேகிகள் எப்போதும் துயரம் அடைவதில்லை. ஏனெனில் அத்தேகத்திற்குச் சாட்சியாய் நிற்கும் அந்தராத்மா தானேயென்று அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபாஹா
ந சைவ ந பவிஷ்யாமஹ ஸர்வே வயமதஹ பரம்"
- (2-12)

- ஏ அர்ஜுனா ! நான், நீ, இங்குள்ள அரசர்கள், யாவரும் நிலையான ரூபமுடையவர்கள். நாம் இதற்கு முன்பும் இருந்திருக்கிறோம். இன்னும் இருப்போம். நமக்கு எக்காலத்தும் அழிவில்லை' என்று ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு 'தத்வமஸி' எனும் மகாவாக்கிய உபதேசத்தை போதித்து நிறைந்த தைரியத்தை ஊட்டினார். எவருக்கேனும் மரணபயம் ஏற்படும் போது, சுற்றத்தார், நண்பர்களுக்கு மரணம் ஏற்படும் போதும் கீழ் காட்டப்படும் கீதா வாக்கியங்களைப் படிப்பதன் மூலம் மரணபயம் விட்டுவிலகும்.

1. "அச்சேத்யோ அயமதாஹ்யோ அயமக்லேத்யோ
அசோஷ்யஹ ஏவ ச
நித்யஹ் ஸர்வகதஹ ஸ்தாணுரசலோயம் ஸநாதனஹ
(2-24)

*இவ்வாத்மா வெட்டப்படாதவன், தகனமடையாதவன், நனையாதவன், உலர்பவனு மல்லன். இவ்வாத்மா நித்யமானவன், எங்கும் நிறைந்தவன், சலன மற்றவன், தொன்மையானவன்.*

2. தேஹீ நித்யமவத்யோ அயம் தேஹே ஸர்வஸ்ய பாரத
தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிதுமர்ஹஸி "
- (2-30)

*ஏ அர்ஜுனா ! தேகம் இறந்துவிட்டாலும், ஆத்மா சாவதில்லை. அனைவருக்கும் இவ்வுண்மை தெரியும். எனவே எவரைக் குறித்தும் வருத்தப் படவேண்டிய அவசியமில்லை.*

"ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந் நாயம் பூத்வா பவிதா
வா ந பூயஹ
அஜோ நித்யஹ் சாச்வதோ அயம் புராணோ ந ஹன்யதே
ஹன்யமானே சரீரே" (2-20)

*ஆத்மாவிற்கு எப்போதும் பிறப்பில்லை, இறப்பில்லை. முன்பிருந்து இப்போது இல்லாதிருப்பதில்லை. இப்போதிருந்து இல்லாது போவதில்லை. மிகத் தொன்மையானது, நிலைத்திருப்பது.*

*இவ்வாறான உதாரணங்கள் கீதையில் பல உண்டு. அவற்றைத் தினந்தோறும் மனனம் செய்தால் மரணபயம் மனித இதயத்தில் சற்றுமிருக்காது. 'நான் தேஹி, தேகமல்ல., நான் க்ஷேத்ரக்ஞன், க்ஷேத்ரமல்லன்., நான் திரிகுணாதீதன், திரிகுணங்களல்லன்' - எனப்பல முறை சிந்தித்திருத்தல் வேண்டும். அநாதி காலத்திலிருந்தே 'நான் தேகம் என்று நினைத்திருப்பதால் தேக பாவனை நன்றாக ஆழப்பதிந்து போய்விட்டது. ஆத்ம பாவனையை நமக்கு நாமே நன்றாக*

வளர்த்துக் கொள்ள வேண்டும் (Dehypnotisation) கீதாபகவதி ஆணையிடுவது இதுவே. இதனால் மரணபயம் சிதறிப் போகும். கீதை மக்களுக்குச் செய்துள்ள பேருபகாரம் இதுவே.

4. **காமம் முதலான விகாரங்கள் தோன்றும்போது -**

சாதகனின் அழிவுச் சக்தியில் முதன்மையானது காமம். அது எதிர்கட்சித் தலைவர் போன்றது. ஞானமெனும் இரத்தினத்தைப் பறிப்பதற்காக சாதகனின் இதயக் குகையில் முதன்முதலில் கன்னம் வைத்து நுழைவது காமம். அது உள் நுழைந்தபின் உடனேயே குரோதம், லோபம் முதலான பல தீய குணங்களும் தொடர்ந்து உள் நுழையும். 'ஞானினோ நித்ய வைரிணா' (ஞானிக்கு நிரந்தர எதிரி), (துஷ்பூரேணா லேன ச) (அக்னியைப் போன்று ஆகுதிகளால் திருப்தி அடையாதது) என்று இவ்வாறாக ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் காமத்தைக் குறித்து பலவிடங்களில் எச்சரிக்கை செய்து கொண்டே போகிறார். அவ்விஷயத்தில் எச்சரிக்கையுடன் இல்லாவிடின் ஆன்மீக பரத்தில் மனிதன் உன்னத சிகரத்தை எப்போதும் அடைய இயலாது. எனவே அத்தகைய விகற்பமான எண்ணங்கள் ஏற்படும் போது கீதையின் கீழ்க்கண்ட உதாரணங்களை பலமுறை சிந்தனை செய்து அவற்றைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

**"த்யாயதோ விஷயான்பும்ஸஹ் ஸங்கஸ் தேஷூ (உ)பஜாயதே**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காமஹ் காமாத் க்ரோதோ அபிஜாயதே" - (2-62)**

**"ராக த்வேஷ வியுக்தைஸ்து விஷயானிந்த்ரியைஸ்சரன்**
**ஆத்மவச்யையர் விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி" - (2-64)**

காணப்படும் பொருள்களின் மீது கவனம் செல்வதற்குத் தொடங்கியவுடனேயே, அதன் மீது ஆசை தோன்றும். பின்னர் அவ்வாசை ஜீவனின் அழிவிற்கு வழிகோலும் என்று சொல்லப்

படுவதால், பாஞ்ச பௌதீகப் பொருள்களின் அழிவினை, சிறுமையைக் குறித்து நன்றாக மனதில் விசாரித்து அவ்வாறான எண்ணங்களே இதயத்தை அண்டவிடாது செய்தலும் அல்லது அவ்வாறான எண்ணம் தோன்றியவுடனேயே கிள்ளி எறிதலையும் செய்ய வேண்டும்.

2. "சக்னோதீஹைவ யஹ் ஸோடும் ப்ராக் சரீர விமோக்ஷணாத்
காமக்ரோதோத்பவம் வேகம் ஸயுக்தஹ் ஸ ஸுகீ நரஹ" - (5-23)

இந்த சரீரத்தினை எடுப்பதற்கு முன்பாகவே காமக்குரோதம் முதலான துர்க்குணங்களின் வேகத்தினை எவன் தடுத்து நிறுத்த வல்லவனோ அவனே சுகவான்., அவனே முக்தன்" - என்று ஓரிடத்தில் கூறுகிறார். எனவே காமம் முதலானவை பற்றி எண்ணியவுடனேயே,' இது வாழ்க்கைக்கு பெருந்தீமையை விளைவிக்கும் என்றும், வீடுபேற்றின் சுகத்தினின்றும் வெகு துாரத்திற்கு விலக்கி விடுமென்றும் எண்ணி அதனை இதயமாகிய கோயிலினின்றும் விலக்க வேண்டும். எதிரி பக்கத்திலேயே இருப்பின் காமத்தினால் கூட அத்தகைய துன்பம் ஏற்படும். எனவே அதற்கு இடமளிக்கலாகாது.

த்ரிவிதம் நரகஸ்யேதம்த்வாரம் நாசனமாத்மனஹ
காமஹ் க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத்
த்ரயம் த்யஜேத் - (16-21)

காமம், குரோதம், லோபம் - என்ற இம்மூன்றும் நரகத்திற்கு வழியாகும். அவை ஜீவனுக்கு அழிவையுண்டாக்கும். எனவே அவற்றை ஒதுக்க வேண்டும் என்று பகவான் மென்மையாக அறிவுரை கூறுகிறார். காமம் முதலான எண்ணங்கள் தோன்றும்போதெல்லாம் இத்தகைய வாக்கியங்களை மனனம் செய்தல் வேண்டும். காமத்திற்குக் கோடரியைப் போன்ற இன்னும் சில வாக்கியங்கள் கீதையில் உள்ளன. அவற்றைச் சாதகர்கள் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும்.

1. "காம ஏஷ க்ரோத ஏஷ" - ( 3 - 37 )
2. "காமக்ரோத வியுக்தானாம்" ( 5 - 26 )
3. "காமம் க்ரோதம் பரிக்ரஹம் விமுச்ய" ( 18 - 53 )
4. "ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம்"

   ( 3 - 43 )

   ஓ மஹா ஜனங்களே பயங்கரமான இக்காமமெனும் எதிரியை அழித்துவிடுங்கள்.
5. "காம ஸங்கல்ப வர்ஜிதாஹா " ( 4 - 19 )
6. "காமாத்மானஹ ஸ்வர்க்கபரா" ( 2 - 43 )
7. "காமாஸ்தை ஸ்தைர் ஹ்ருத ஞானாஹா" ( 7 - 20 )

காமமெனும் எதிரி நம்மை சூழ்ந்து கொள்ளின் மேற்சொல்லப்பட்ட கீதா வாக்கியங்கள் எனும் அஸ்த்ர சஸ்த்ரங்களால் அவற்றை எதிர்த்து அழிக்க வேண்டும். நிராயுதபாணியாய் இருப்பினும் எதிரியை அருகில் நெருங்கவிடக் கூடாது. ஒருவேளை நெருங்கினாலும் அதனை ஜெயிப்பதற்கு இயலாது, எனவே அநேக ஜன்மங்களாக பலம், சாதனையின் பலன் அனைத்தையும் தன்னிடத்தே சேர்த்துக்கொள்டு, நன்றாக உறுதியாக வேரூன்றி விட்ட காமத்தினை வெற்றி கொள்வதற்கு, சாதகன் கீதா வாக்கியங்கள், உபநிஷத் வாக்கியங்கள், இதர நூல்களினின்றும், உதாரணங்கள் முதலான ஆயுதங்களுடன் தயார்நிலையில் இருத்தல் வேண்டும். அதன் பிறகு காமம் ஏதும் செய்ய இயலாது. 'ஜிதோஸ்மி' என்று சாதகனுக்கு அடிமையாவதை தடுக்க முடியாது. இவ்வாறு காமம் முதலானவை தோன்றும்போது அவற்றை வெல்வதற்கு கீதை எத்துணையோ உதவிபுரிந்திருக்கிறது.

5. மற்றையோரிடத்து பொறாமை, வெறுப்பு இவை தோன்றும் போது:

இவ்வுலகம் பின்னமாகக் காணப்படினும் உண்மையில் ஒன்றே. அலையிலும், நீர்க்குமிழியிலும், நுரையிலும் நீரே

வியாபித்திருப்பதைப் போல, ஜீவகோடிகளனைத்தினும் ஒரே சைதன்யம் வியாபித்துள்ளது. அவ்வாறிருக்கையில் இன்னொருவர் மீது வெறுப்புக் கொள்வது எதற்கு? என்று கீதை கேட்கிறது.

"தத்ர கோ மோஹஹ் கஹ் சோக ஏகத்வமனுபச்யதஹ" என்று உபநிஷத் வாக்கியங்களை எடுத்துக் காட்டி கேட்கின்றது. அனைத்திலும் ஏகத்வத்தை காண்பவனுக்கு மோகம் எங்கிருந்து வரும்? கத்வ அனுபூதியை கீதை பலவிடங்களில் கூறுகிறது. "எதிரி, நண்பர்களிடத்தும், உதாசீனனிடத்தும், உன்னை வெறுப்பவனிடத்தும், பந்துக்கள் இடத்தும், புண்யாத்மாக்களிடத்தும், பாவாத்மாக்களிடத்தும் சமபுத்தியுடன் இருப்பவனே உத்தமன்.

**"ஸுஹ்ருன் மித்ரார்யுதாஸீன மத்யஸ்த்த**
**த்வேஷ்ய பந்துஷு**
**ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸமபுத்திர் விசிஷ்யதே"-(6-9)**

**"ஆத்மௌபம்யேன ஸர்வத்ர ஸமம்**
**பச்யதி யோஅர்ஜுன**
**ஸுகம் வா யதி வா துஹ்கம் ஸ யோகீ பரமோ மதஹ"**
**- (6-32)**

என்று கீதை கோஷிக்கிறது. மற்றும்,

**"அத்வேஷ்டா ஸர்வபூதானாம் ... "**

எந்தப் பிராணியாயினும் வெறுத்தல் கூடாது. அதனிடம் நட்பு, கருணையுடன் இருத்தல் வேண்டும். அத்தகையோனே உண்மையான பக்தன் என்று ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகின்றார். இதுமட்டுமன்று. "உன்னைப் போன்றே பிறரையும் நினை" - (6 - 32) என்ற பரந்த நோக்கினை கீதை புலப்படுத்துகின்றது. அனைத்திலும் விரவி நிற்கும் ஆத்மா ஒன்றே. எனவே ஒருவரை வெறுத்தால் நம்மை நாமே வெறுப்பதைப் போல ஆகும். ஒருவரை நிந்தித்தால் நம்மை நாமே நிந்தித்துக் கொள்வதாகும். பகவான் காட்டிய இப்பரந்த நோக்கினை நாம் நினைவில்

வைத்திருப்பின் பொறாமை, வெறுப்பு இவை மட்டுமின்றி எத்தகைய துர்க்குணமும் நம் வழியில் வராது.

6. செல்வச் செழிப்பினால் செருக்கு ஏற்படும் போது..

இவ்வனந்த கோடி பிரம்மாண்டத்தில் நாம் வசிக்கும் சின்ன பூமி எங்கே? இப்பூமியில் எங்கோ ஒரு மூலையில் ஒட்டிக் கொண்டிருக்கும் நம் தேசம் எங்கே? இத்தேசத்தின் எங்கோ ஒரு கோணத்தில் ஒதுங்கியிருக்கும் நமது உடைமை, இராஜ்யம், செல்வங்கள் எங்கே? பரமாத்மாவின் மகா விபூதியை ஒருமுறை மனதார நினைத்தால் கர்வம், அகங்காரம் இவை விலகிப் போகும்.

"அதவா பஹுனைதேன கிம் ஞாதேன தவார்ஜுன
விஷ்டப்யா ஹமிதம் க்ருத்ஸனம் ஏகாம்சேன ஸ்திதோ
ஜகத்" - (10-42)

"நான் இவ்வுலகமனைத்திலும் ஒரு அம்சத்தால் மட்டுமே வியாபித்திருக்கிறேன்." என்று விபூதி யோகத்தில் பகவான் சொல்லிய வாக்கியம் எத்தகைய பெருமையுடையது. பிரம்மாண்டம் அனைத்தையும் ஒரு பாதத்திலேயே வியாபித்து, இன்னும் மூன்று பாதங்கள் அதனைக் கடந்து பகவான் நிறைந்திருக்கிறார் என்று புருஷ சூக்தம் சொல்கிறது

"பாதோ அஸ்ய விஸ்வா பூதானி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" பகவானின் உலகெங்கும் பரந்திருக்கக் கூடிய அனந்த சக்தியின் எதிரில் மனிதனின் சொத்து-பத்துக்கள் எத்துணை. அவரது பரந்த தன்மை எங்கே? போக பாக்யங்கள் எங்கே? இவையனைத்தையும் வைத்து ஒப்பிட்டால் மனிதனின் சிறுமை புலப்படும். அர்ஜுனன் எத்தகைய பலவான், பௌதீக சக்தியுடையவன், ராஜாதி ராஜன், அவனே பகவானின் சுயரூபத்தைத் தரிசித்தவுடனேயே எத்தகைய அடக்க ஒடுக்கம் பக்தி பாவத்தைக் காட்டினான் என்பது கீதை 11 ஆவது அத்தியாயத்தைப் படித்தவர்க்குப் புலனாகும்.

1. "நமஹ் புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே நமோஸ்துதே
ஸர்வத ஏவ ஸர்வ
அனந்த வீர்யாமித விக்ரமஸ்த்வம் ஸர்வம்
ஸமாப்னோஷி ததோ அஸி ஸர்வ" - (11-40)

2. "ஆட்யோ அபிஜனவானஸ்மி கோ(அ) ன்யோ
(அ)ஸ்தி ஸருசோ மயா
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யக்ஞான
விமோஹிதாஹா " - (16-15)

3. "அநேக சித்த விப்ராந்தா மோஹஜால ஸமாவ்ருதாஹா
ப்ரஸக்தாஹ் காமபோகேஷு பதந்தி நரகே(அ) சுசௌ"

- (16-16)

எனின் சாமான்ய மனிதர்களின் விஷயம் எம்மாத்திரம்? எனவே கர்வம் முதலியவை தோன்றும் போது கீதையில் விபூதியோகம், விஸ்வரூப சந்தர்சன யோகம் இரண்டையும் ஒருமுறை படித்தாலே அவை உடனேயே ஓடிவிடும்.

"நான் மிகவும் உயர்ந்தவன்., நான் பணக்காரன்., என்னைச் சுற்றிப் பலர் இருக்கின்றனர். எனக்குச் சமமானவர் எவர்? இவ்வாறாகப் பெருமை கொள்பவர் அசுர சுபாவம் உடையவர் என்றும், அத்தகையோர் தம் ரஜோ குண, தமோ குணத்தினால் முடிவில் நரகத்தைச் சேர வேண்டிவரும் என்று கீதை 16 ஆவது அத்தியாயத்தில் எச்சரிக்கப் படுகிறது. எனவே, தம் உலகியல் செல்வ செழிப்பிற்குக் கர்வப்படுவோர் கீதையின் 16 ஆவது அத்தியாயத்தை ஒருமுறை படித்து மேன்மையடைதல் நன்று. பகவானின் மிகத்தீவிரமான எச்சரிக்கையைக் கேட்டபின் எத்தகையோனுக்கும் பாவத்தைப் பற்றிய பயம் ஏற்பட்டு, கர்வம் முதலானவை கட்டோடு அழிந்து போகும்.

மேலும், நன்றாக ஆலோசித்தால் கண்ணால் காணப்படுபவை யனைத்தும் அழியக் கூடியவை என்றறிவோம். "யத்த்ரு ஸ்யம் தன்னஸ்யம்" என்பது சாஸ்திர வாக்கியம்.

'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுஹு' - பிறப்பும் இறப்பும் தவிர்க்கவியலாதது என்பது கீதா வாக்கியம்.

"ஆப்ரஹ்ம புவனுல்லோகாஹ் புனராவர்த் தினோ அர்ஜுன
மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே"
- (8-16)

'பிரம்மலோகம் வரையில் உள்ள உலகுகளுக்கு மறுபிறப்பு உண்டு' என்றால் தோற்றமும் மறைவும் கலந்தேயுள்ளது என்பது பொருள். பரமாத்மா ஒருவரே அழிவில்லாதவர். பிறப்பு இறப்பு இல்லாதநிலை பரமாத்மாவினுடையது ஒன்றே. (மாமுபேத்ய து கௌந்தேய புனர் ஜன்ம ந வித்யதே) எனவே போவதும் வருவதுமாய், அழியக் கூடிய பிறப்பு இறப்புக்குக் காரணமாக இருந்து பெரும் ஐசுவரியங்களைக் குறித்து கர்வம் கொள்வது எதற்காக? அகம்பாவம் கொள்வது எதற்காக? எனவே மேற் சொல்லப்பட்ட கீதா வாக்கியங்களைச் சிந்தித்து, அழியக் கூடியவற்றைப் பெரிதாக நினையாது அழிவில்லாதவனான பரமாத்மாவையே நினைத்து நிறைவடைதல் வேண்டும்.

துர்க்குணங்கள் இதயத்தில் நுழையும் போதே உடனேயே அவற்றிற்கு மாற்றான கீதை சுலோகங்களை நினைவுக்குக் கொணர்ந்து, இதயக் கோயிலைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். வியாதி வரும் முன்னரே ஆரோக்யமான நெறி முறைகளை, வைத்திய முறைகளை மேற் கொள்ளுதல் நன்று. ஆயின் எதுவுமின்றி இருப்பின் பவரோகமானது முதிர்ந்து ஜீவனின் பேரழிவிற்குக் காரணமாகக் கூடும். கீதையில் எத்தனையோ மருந்துகள் சொல்லப் பட்டிருக்கின்றன. துர்க்குண நிவாரணத்திற்குப் பரிகாரங்கள் கொடுக்கப் பட்டுள்ளன. பவரோகத்தை அழிக்க நன் முறையில் செயல்பட்டு பல பந்தங்களை அகற்றி, நிர்மலமான ஆத்மாவுடன், நிராமயன் ஆன இறைசொருபத்துடன் இருப்போமாக.

## நமது கடமை.

இதுவரை கீதையின் மகிமைகள் பலவற்றைக் கவனித்தோம். இன்னும் இதனை விரிவாகக் கூறிக் கொண்டே போயினும் அதற்கு முடிவு காண்பதென்பதியலாது. ஏனெனில் கீதையின் அழகை வர்ணிப்பதற்கு ஆயிரம் தலை ஆதிசேஷனாலும் இயலாது. கீதையைக் குறித்து சிறிதளவே அறிந்திருப்பினும் போதும். அதில் திருப்தியடைந்து அதனையே தினமும் தியானிப்பதற்கு முயல வேண்டும். கீதை பாராயணத்தினால் புண்யம், அனுஷ்டானம், வீடுபேறு இவை மனிதனுக்குக் கிடைக்கும். பாராயணத்தில் மட்டுமே மகிழ்ந்துவிடாமல் அதனை வாழ்க்கையில் நடைமுறைக்குக் கொணர்தல் வேண்டும்.

**"கீதா கங்கோதகம் பீத்வா புனர்ஜன்ம ந வித்யதே"**

என்றவாறு கீதையெனும் ஞானகங்கா தீர்தத்தினை அருந்தி பிறப்பு இறப்பெனும் பவ பந்தங்களை அறுத்து எறிதல் வேண்டும். இதுவே நமது கடமை. கீதை போன்ற நன்னூல்கள் கிடைப்பது கூட எப்போதோ நாம் செய்த புண்ய விசேஷம் என்பதை முமுக்ஷுக்கள் அறிதல் வேண்டும். ஏனெனில் மனிதனாய்ப் பிறப்பது, மோக்ஷத்தை குறித்து ஜிஞ்ஞாசை ஏற்படுதல், அதற்கு வழிகாட்டக் கூடிய மகாத்மாக்களின் தொடர்பு ஏற்படுதல், அவர்களின் போதனையில் உருவான சாஸ்திரங்களின் அறிமுகம் கிடைத்தல் ஆகியவை மிகமிக அரிது என்று ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் கூறியுள்ளார்.

**"துர்லபம் த்ரயமேவைதத் தைவானுக்ரஹஹேதுகம்**
**மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷஸம்ச்ரயஹ"**

எனவே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் வாக்கான கீதையின் சேவை செய்யும்பேறு இப்பிறவியிலேயே அடைந்தவர் பெருமைக் குரியவர். அவ்வாறடைந்தவர் இந்தச் சரீரம் அழிவதற்கு முன்பாகவே, (ப்ராக் சரீர விமோக்ஷணாத்) அதன் இலக்கினை அடைய முயற்சி செய்யவேண்டும். தீபம் எரியும் போதே வீட்டைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மனித சரீரம் மறுபடியும் மறுபடியும் கிடைப்பதில்லை. 'சதகோடி ஜன்ம ஸுக்ருதைஹ் புண்யைஹ் விளா லப்யதே' என்று பகவத் பாதர் கூறியபடி எத்துணையோ முற்பிறவிகளின் நற்செயலால் இத்தகைய அறிவுபூர்வமான பிறவி கிடைக்கிறது. எனவே உடல் நலம் நன்றாக இருக்கும் போதே, அதற்கான வாய்ப்பு கிடைக்கும் போதே, வாழ்க்கையின் வசந்த காலத்திலேயே (பால்ய, யௌவனப் பருவங்களிலேயே) கீதை முதலான நன்னூல்களைப் பின்பற்றி, பக்தி, ஞான, வைராக்கியங்களை நன்றாகப் பயின்று சம்சார துக்கவிலங்கினை அறுத்து எறிதல் வேண்டும். கீதையில் 'இஹை வ' (இங்கேயே, இப்பிறப்பிலேயே) என்று பகவான் பலமுறை வலியுறுத்துவதற்கான காரணம் இதுவே.

**இஹைவ தைர்ஜித ஸ்வர்கோ ..........**
**சக்தோன்னஹைவயஸ்ஸோடும் ....."**

இப்பிறப்பிலேயே நாம் இங்கு வந்த வேலையை முடித்துக் கொள்ள வேண்டும் என்பது பொருள்.

எனவே தினமும் நியமம் தவறாது சாப்பிடுவதைப் போல உபநிஷத்துக்களின் சாரமானதும் எல்லா சித்தாந்தங்களின் சுருக்கமானதும் ஆன பகவத் கீதையினை பாராயணம் ஓரளவு செய்து கொண்டு, அதன் பொருளை ஒன்றிய மனத்துடன் சிந்தித்துக் கொண்டிருத்தல் வேண்டும். நம்மை நாமே அர்ஜுனனாகவும், ஸ்ரீகிருஷ்ணர் நமக்கு போதிப்பதாகவும் முழு மனதுடன் பாவித்துக் கொள்ளல் வேண்டும். அர்ஜுனன் குதிரையின் கடிவாளத்தைக் கண்ணனிடம் ஒப்படைத்ததைப் போல நாமும் நம் வாழ்க்கை ரதத்தை அவனிடம் ஒப்படைத்துவிட்டு, நானே கர்த்தா என்ற எண்ணத்தை விட்டு, 'நான்' என்ற அகங்காரத்தைத் தொலைத்து 'நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாசின்' என்றபடி இந்த சம்சார யாத்திரையில் நாம் வெறும் நிமித்த மாத்திரமாக மட்டும் நடந்து கொண்டு வருவோமாயின், துக்கத்திற்கு இடமேது? பந்தங்கள் எங்கே? தடையேதுமின்றி அந்த கிருஷ்ண பரமாத்மாவே நம் வாழ்க்கை ரதத்தை வெற்றி நிலைக்கு அழைத்துச் செல்லக் கூடியவர்.

இவ்வாறாக, கீதையைப் பாராயணம் செய்வதாலும் கீதையில் சொல்லப்பட்டுள்ளவற்றைக் கடைப்பிடிப்பதாலும் மனிதன் தன் வாழ்நாளை பண்படுத்திக் கொண்டு இப்பிறப்பிலேயே, பிரம்மானுபூதியை அடைதல் வேண்டும்.

**கீதைப் பிரச்சாரம்:**

அப்படியென்றால், அத்துடன் நம்வேலை முடிந்து விட்டதா? நாமும் ஈடேறி பிறரையும் ஈடேற்றுதல் சநாதன தர்மம். "ஸ்வயம் தீர்ணஹ் பராம்ஸ்தாரயதி" என்ற, தான் பெற்ற பேரின்பத்தை பிறர்க்கு பகிர்ந்தளிக்க வேண்டும். எந்த கீதையை ஓதியதால் தனது அந்தக்கரணம் தூய்மை அடைந்ததோ, எதன்மூலம் ஆத்மானுபவம் கிடைக்கப் பெற்றதோ, அத்தகைய கீதையைப் பிறருக்கும் அறிமுகம் செய்தல் வேண்டும். பலரும் இச்சம்சாரக் குகையில் சிக்கித் திசை தெரியாது பலவித துன்பங்களையும் அனுபவிக்கின்றனர். அஞ்ஞானம் எனும் பேரிருளில் சிக்கி வழிகாணவியலாமல் பெரும் துன்பங்களை அடைகின்றனர். அவர்களைக் காப்பாற்றுவோர் யார்? செல்வத்தில் முதிர்ந்தவரா? வயதில் முதிர்ந்தவரா? கல்வியில் முதிர்ந்தவரா? இல்லை ஞானியரே காப்பாற்ற வல்லவர். ஆன்மீக, தத்துவ அறிஞர்களே அவர்களை வழிக்குக் கொணர்தல் இயலும். முயற்சியினால் கீதையெனும் ஞான மயமான ஒளிதரும் விளக்கினை தத்தம் இதயத்தில் ஏற்றிக் கொள்பவரே அவரை மீட்க இயலும். எனவே எல்லா சாத்திரங்களின் இணைப்பான கீதையைத் தானும் பின்பற்றி மற்றையவரையும் பின்பற்றச் செய்தல் வேண்டும். தானும் படித்துப் பிறரையும் படிக்கச் செய்தல் வேண்டும். இதுவே ஞான யக்ஞம். அனைத்து யக்ஞங்களையும்விட ஞான யக்ஞம் சாலச் சிறந்தது என்று பகவான் கீதையில் தெரிவித்துள்ளார்.

"ச்ரேயான் த்ரவ்யமயாத் யக்ஞாத்ஜ்ஞானயக்ஞஹ்
பரந்தப
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே"
- (4-33)

எல்லா தானங்களையும் விட ஞானதானம் மிகவும் உயர்ந்தது என்று சாஸ்திரங்களும் ஒரே மாதிரியாகக் கூறுகின்றன.

"வார்யன்ன கோமஹீவாஸ ஸ்தில காஞ்சன ஸர்பிஷாம்

ஸர்வேஷாமேவ தானானாம் ஞானதானம் விசிஷ்யதே"

ஜலதானம், அன்னதானம், கோதானம், பூதானம், நிவாசதானம், சுவர்ணதானம், நெய் தானம் முதலான தானங்கள் அனைத்திலும் ஞான தானம் மிகவும் சிறந்தது. எனவே கீதையைத் தானும் படிப்பதுடன், இயன்றளவு கீதையைப் பிரச்சாரம் கூடச் செய்தல் வேண்டும். இவ்வாறாக கீதையைப் பரப்புவதற்கு முயல்பவன் எனக்கு மிகவும் பிரியமானவன். (ப்ரியக்ருத்தமஹ) என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையின் முடிவில் தெரிவிக்கின்றார். இதனால் கீதாப் பிரச்சாரம் செய்வது அவருக்கு மிகவும் உகந்தது என்பது தெரிகின்றது. அவனுக்குப் பிரியமானதை நாம் ஏன் செய்தல் கூடாது? தானும் நன்மையடைந்து சமூகத்தையும் நன்மையடையச் செய்பவன் உலகத்திற்கு நன்மை புரிந்தவனாவான். எனவே ஒவ்வொரு சிறு கிராமத்திலும், பட்டணங்களிலும் (கீதா சங்கம் அமைத்து, கீதா பவனங்கள் கட்டி, கீதையின் பிரச்சாரம் நன்முறையில் நடத்துவோமாக. ஒவ்வொரு பள்ளியிலும் கீதை போதிக்கப்படட்டும். ஒவ்வொரு வீட்டிலும் கீதையின் ஒலி எதிரொலிக்கட்டும். கீதையின் குழலிசை எங்கும் வியாபித்து செவிகளைப் புனிதமாக்கி எங்கும் ஆனந்த மயமாகச் செய்யட்டும்.

எங்கே கீதையிருக்கிறதோ அங்கே ஸ்ரீ கிருஷ்ணர் இருக்கிறார். எங்கே கிருஷ்ணர் இருக்கிறாரோ அங்கு வெற்றியிருக்கும். ஐசுவரியம் இருக்கும், நீதி தாண்டவமாடும்.

"யத்ர யோகேச்வரஹ் க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்தரஹ

தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர்மதிர் மம"

-(18-78)

எனவே ஒவ்வொருவரும் கீதையை நன்றாகப் பயிலுதல் வேண்டும். பிறருக்கும் போதிக்க வேண்டும். கீதையெனும் கங்கா பிரவாகத்தினால் தத்தம் இதயக் கோயிலைப் பண்படுத்தி விளைவித்துப் பலன் அடைய முயல்வோமாக.

முடிவுரை:

இதுவரை கீதையைக் குறித்த பல விவரங்கள் அளிக்கப்பட்டது. இவையனைத்தையும் ஒன்று திரட்டி அரிமா நோக்குடன் இக்கட்டுரையை முடிக்கக் கருதுகின்றேன். கீதை நாம் நேரில் காணும் பகவத் சொரூபமே. கீதையின் சேவை பகவானுக்குச் செய்யப்படும் சேவையேயாகும். கீதையின் சுலோகங்கள் நாராயணனின் திவ்ய மந்திரமேயாகும். சர்க்கரையில் செய்யப்படும் கிளி அச்சினை எங்கு சுவைத்தாலும் இனிப்பதைப் போல், கீதையின் எப்பாகமாயினும் பிரம்மானந்தமெனும் இனிப்பாய் விளங்குகின்றது. கீதை தர்ம மயமானது. 'தர்மம்' எனும் மரம் கீதையெனும் பழத்தினைத் தந்தது என்பதில் அதிசயமேதுமில்லை. கீதையில் இத்துணை அற்புத சக்தி பொதிந்திருப்பதன் காரணமென்ன? அதனைப் போதித்தவர் 16 கலைகளையும் பெற்ற பரிபூர்ணமான அவதார புருஷனேயானதால். உலகில் உள்ள பல்வேறு சிறந்த மதங்களில் சம்பந்தமுடையவர்கள் "நான் தேவனின் குமாரன்" என்று கூறியுள்ளனர். மற்றும் சிலர், 'நான் தேவதூதன்' என்றும் சிலர் 'நான் தேவனின் தொண்டன்' என்றும் சொல்கின்றனர். ஆயின் கீதையைப் போதித்தவர் 'நானே தேவன்' என்கிறார். எனவே கீதை தேவ வாக்கேயாகும். கீதை வழிவழியாக வந்துள்ள வாக்கல்ல. எனவேதான் இதற்கு அகண்ட ஆன்மீக சக்தியுள்ளது. அர்ஜுனனின் இமயத்தைப் போன்ற மோகம் (அஞ்ஞானம்) கீதையின் பாதியளவு போதனை முடியு முன்பாகவே விலகிப் போவது மிகவும் விசித்திரமான விஷயம்.

"மதனுக்ரஹாய பரமம் குஹ்யமத்யாத்ம ஸம்ஜ்ஞிதம்யத்
வயோக்தம் வசஸ்தேன மோஹோ(அ)யம் விகதோத் மம"
- (11-1)

கீதையின் உலகாதீத ஆற்றலை நிரூபிப்பதற்கு இதைவிட சான்று வேறென்ன வேண்டும்?

"கீ" என்றால் கானம் செய்பவர். "த" என்றால் ஈடேற்ற வல்லது. கல்பதருவைப் போன்று தன்னை அண்டியவரை அது காப்பாற்றும். உதவியற்றோர்க்கு உதவும். குருடனுக்குக் கண்ணாகும். ஊனமுற்றவர்க்கு கால், பலமற்றவர்க்கு பலம், வேட்கையெனும் காட்டுத் தீக்கு மழை போன்றது. அஞ்ஞானியை ஞானியாக, தைரியமற்றவனை சிம்மம் போன்றவனாகவும், மரிப்பவனை மரணமில்லாதவனாகவும் ஒரு விநாடியில் ஆக்கவல்லது. பவரோகத்திற்கு ராமபாண திவ்ய ஔஷதம். மனித சமூகத்திற்கு மிகவும் உயர்ந்த செல்வம். ஒவ்வொருவரையும் கைத்தாங்கலாக மெல்ல மெல்ல எழச் செய்து, தூக்கி நிறுத்தி, ஒவ்வொரு படியாக ஏறச் செய்து முன்னேற்றப் பாதையில் நடக்கச் செய்து, அவரவர் குறைகளைப் போக்கி, அவரவர் அந்தக் கரணத்தில் மறைந்துள்ள ஆத்ம ஒளியினை வெளிக்கொணர்ந்து, உறங்கிக் கொண்டிருக்கும் சக்தியினை தட்டியெழுப்பி, முறையாக கைவல்ய ரூபமான பரந்தாமனிடம் சேர்த்து விடுகிறது.

கர்ம, பக்தி, ஞானம் இம்மூன்றும் பிரவகித்து ஓடிக் கலக்கும் திரிவேணி தீர்த்தம் கீதை. அத்தகைய திரிவேணி சங்கமத்தில் நீராடுவார் புண்ணியம் செய்தவர். கர்மா, பக்தி, தியானம், ஞானம் என்ற இந்நான்கையும் வேறு வேறாகப் பிரித்துப் பார்க்கவியலாது. ஒன்றில் ஒன்று கலந்து நெருங்கிய உறவு ஏற்படுத்திக் கொண்டுள்ளது. அவரவர் மன நிலைக்கேற்ப ஏதேனுமொன்று முக்கியமாகத் தோன்றும். மற்றவை மறைந்திருக்கும். இவ்விரகசியம் தெரியாதவரே அவரவர் வழியே நல்வழி என்று சண்டையிடுவர். கீதை அனைத்திலும் நடுநிலை வகிக்கிறது. எவரும் எதனைப் பற்றியும் குறை கூற இயலாதபடி செய்து கொண்டுள்ளது. அகங்காரத்தை ஒழித்தலே, சுயநலத் தியாகமே எல்லா வழிகளின் முக்கிய இலக்கு என்று போதித்துள்ளது.

கீதைக்குப் பல வியாக்கியானங்கள் இருப்பினும், மிகவும் சிறந்தது ஸ்ரீ கிருஷ்ணரின் வாழ்க்கையேயாகும். கர்ம, பக்தி,

ஞானம் அனைத்திற்கும் கிருஷ்ணரின் வாழ்க்கையிலேயே தகுந்த நிலை கிடைத்துள்ளது. அவரது வாழ்க்கையே அதற்கு எடுத்துக் காட்டு. அவர் பின்பற்றியது அனுஷ்டான வேதாந்தம். கீதையில் உபதேசிக்கப்பட்ட நிஷ்காம கர்மாவையே அவர் செய்து காட்டினார். கீதையின் ஞானத்தை வைத்து மூன்றுலகங்களையும் பற்றற்ற நிலையில் ஆண்டார். இடைவிடாத செயலிலும் தடங்கல் இல்லாத மனச் சாந்தியை அடைதல் அவரது வாழ்க்கையின் சிறப்பம்சம். (Intense rest in intense activity) கீதையின் முக்கியமான போதனையில் இதுவுமொன்று, இரண்டாவது பக்தி. தன் குருவான சாந்திப மகரிஷியிடத்தும், பிற பெரியோர்களிடத்தும், ஸ்ரீ கிருஷ்ணர் மிகுந்த பக்தியைக் காட்டுகிறார். தர்மராஜா நடத்திய ராஜசூய யாகத்தில் பக்தர்களின் பாதங்களைக் கழுவி வினயத்தை, கர்வமற்ற நிலையைக் காட்டுகிறார். இனி யோகத்தைப் பற்றி ஆலோசிப்பமேயானால், அவரே யோகேசுவரனாக இருக்கிறார். ஞானத்தை எடுத்துக் கொண்டால், ஞானத்தினால் வடிக்கப்பட்ட சிலையாகவே அவர் உள்ளார். எக்காலத்தோ சூர்யனுக்கு யோகத்தினையும் ஞானத்தினையும் போதித்தாராம். கர்மா, பக்தி, யோகம், ஞானம் ஆகிய கீதையின் தர்மங்களின் தொகுப்பே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. ஸ்ரீ கிருஷ்ணர் எவ்வாறு தன் வாழ்வையே கீதா மயமாக ஆக்கிக் கொண்டாரோ, அவ்வாறே ஒவ்வொருவரும் தன் தினசரி வாழ்க்கையை கீதையின் மறுபதிப்பாக ஆக்கிக்கொண்டு. மாமிச மயமான சரீரத்தை, மந்திரமயமாக, சச்சிதானந்த திவ்ய ஒளியின் முழுமையான உருவமாக ஆக்கிக் கொள்ளுதல் வேண்டும். இதுவே வாழ்க்கையின் குறிக்கோள். கீதை உபதேசத்தின் சாரம்.

கீதையின் இன்னுமொரு சிறப்பு என்னவெனில் அதன் போதனைகளை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று எவரையும் அது கட்டாயப்படுத்தவில்லை. கீதையில் தர்ம போதனை அனைத்தும் முடிந்தபிறகு, அர்ஜுனனிடம்,

**"இதி தே ஞானமாக் யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா விம்ருச்யைததசேஷேண யதேச்சஸி ததா குரு" -(18-63)**

நான் செய்த இந்த கீதா சாஸ்திரத்தை நன்றாக ஆலோசித்துக் கொண்டு உனக்கு எப்படி விருப்பமோ அப்படியே செய், என்று சொல்வது மற்றுமொரு சான்று. சொல்ல வேண்டுவற்றை தர்மங்களை நான் கூறினேன். இது பள்ளம்., இது மேடு., இது அமிர்தம்., இது விஷம்., இது நல்லது., இது கெட்டது., இது பந்தம்., இது மோக்ஷம்., இது புண்யம்., இது பாவம் என்று அவ்வவற்றைத் தெளிவாகப் பிரித்து நிரூபித்துக் கூறியுள்ளேன் - இனி உனக்கு எது விருப்பமோ அதனையே அடைய முடியும் என்று பகவான் கருணையுடன் கூறுகிறார். பெரியோர்கள் பிறருக்குத் தர்மங்களைப் போதிப்பரேயன்றி, தானே கர்த்தா என்ற எண்ணம் கொள்வதில்லை. அறிவுள்ள மாணாக்கன் குருவின் வார்த்தையில் உள்ள மறைபொருளை அறிந்து அவர் கூறிய தர்மத்தை அவர்களாகவே மனதார ஏற்றுக் கொள்வரேயன்றி ஒதுக்க மாட்டார்கள். அர்ஜுனன் அவ்வாறே செய்தான். அதன் பலனாக அவனது அஞ்ஞானம் மாயமாய் மறைந்தது.

இனி, கீதையின் பொருளனைத்தையும் சுருக்கி நான்கு வாக்கியங்கள் கூற விரும்புகிறேன். ஒவ்வொரு ஜீவியும் உறைந்து போன ஆத்ம ஸ்வரூபமே யன்றி தேகமல்ல. (Each soul is potentially divine) ஆயின் சித்த சுத்தி இல்லாமையினால் மனிதனுக்குப் பர ஞானம் ஏற்படுவதில்லை. அதற்காக நிஷ்காமகர்மாவை தவறாது செய்து வருதல் வேண்டும். ஈசுவரார்ப்பண புத்தியுடன் தானே கர்த்தா என்ற எண்ணமின்றி நிஷ்காம கர்மாவை செய்து வந்தால் சிறிது காலத்தில் சித்தம் நிர்மலத்துவத்தை அடையும். சுத்தமான கண்ணாடியில் சூர்யனின் பிரதிபிம்பம் நன்றாகப் புலப்படுவதைப் போல், அழுக்கற்ற துணியில் சாயம் நன்றாக ஏறுவதைப் போல் நிர்மலமான சித்தத்தால் ஆத்ம ஞானம் நன்கு வெளிப்படும். இதற்கான சாதக நெறி முறைகள் கீதையில் கணக்கில்லாமல் சொல்லப்பட்டிருக்கின்றன. மற்றும் மாயையில் சிக்கியுள்ள மனிதன் தானாகவே மாயையைக் கட்டுதல் கடினமாகையால், மாயாதீதன் ஆன பரமேசுவரனின் அணைப்பை நாட வேண்டியுள்ளது. எனவே பக்தி மிகவும் தேவையான ஒன்றேயாகும். நிர்மல பக்தியுடன் பகவானின்

நாம சங்கீர்த்தனம், ஜபம், பூசை, பிரார்த்தனை இவைகளைச் செய்து வருதல் வேண்டும்.

**"ஸமோ(அ)ஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோ(அ)ஸ்தி ந ப்ரியஹ்**
**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்"**
**-(9-29)**

என்று பகவான் தெரிவித்தபடி எவரெவர் 'பக்தியுடன் ஆராதிக்கிறார்களோ அவர்களுக்கு அவர் அனுகிரகிப்பார். அத்தகைய அனுகிரகத்தினால் சாதகனிடத்து, "புத்தியோகம்" என்ற அபூர்வமான பொருள் வந்து சேரும். (ததாமி புத்தியோகம்) அதனையே ஆத்மஞானம் என்பர். அதனை அடைந்துவிட்டால் வீடுபேறு மிகவும் அருகிலேயே இருக்கும். இவ்விதமாகப் புண்ய காரியங்களைச் செய்தல், நிஷ்காம கர்மா, நிலையான பக்தி முதலானவை படிப்படியாக ஜீவனை ஞானத்தை அடைவதற்கு பெரிதும் துணை புரிகின்றது. ஆயின் வீட்டில் விளக்கு எரியின், ஜன்னலின் வழியாக காற்று வீசினால் அணைந்து போவதைப் போல, இந்திரியங்களின் வழி வேட்கைத் தொடர்பான எண்ணங்கள் மனதில் நுழையின் முயற்சியுடன் ஏற்றிய ஞானதீபம் அணைந்து விடும். எனவே இந்திரியங்களின் கட்டுப்பாடு, வெளி நடப்புக்களில் விரக்தி இவற்றை முதலிலிருந்தே பயிற்சி செய்து வரவேண்டும்.

**"தஸ்மாத் த்வமிந்திரியாண் யாதௌ நியம்ய பரதர்ஷப**
**பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞான விக்ஞான நாசனம்"**
**- (3-41)**

என்று பகவான் இந்திரியக் கட்டுப்பாடு குறித்து அங்கங்கு வலியுறுத்திக் கொண்டே போகிறார். இங்கு 'ஆதௌ' (முதன்முதலில்) என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளதால் இந்த செயல் எப்போதோ செய்வதல்ல, சாதனையின் ஆரம்பத்திலேயே இதனைக் குறித்து யோசிக்க வேண்டும் என்று கீதாச்சார்யன் எச்சரிக்கை செய்கிறார். இவ்வாறு இந்திரியங்களை, சித்தம் இவற்றின் போக்கைத் தடுத்து நிறுத்துதலே ராஜ யோகம் எனப்படுகிறது. இவ்விதமான

நிஷ்காம கர்மா, பக்தி, ராஜ யோகம் இவற்றால் சித்தத்தில் இருக்கும் பயங்கரமான மலங்களை அகற்றி நிம்மதியாக ஆத்ம விசாரணையில் ஈடுபட வேண்டும். "நான் யார்? " என்ற கேள்வியை எழுப்பி, பஞ்ச கோசங்களை புத்தியின் ஆற்றலால் வேறாக்கி, அதற்கு மாறாக இதயத்திலேயே வசிக்கும் சர்வ சாக்ஷியான சோதிஸ்வரூபத்தை (க்ஷேத்ர ஞானி) நன்றாக அனுபவத்திற்கு கொண்டு வருதல் வேண்டும். அப்போது சித்தத்தில் மூன்றாவது தோஷமான 'ஆவரணம்' சிதறிப்போகும். அதன் பிறகு ஜீவன் 'தேஷாம் ஆதித்ய வத்ஞானம்' என்றபடி மேகம் விலகிய சூரியனைப் போன்று வலயம் ஏதுமின்றி சுய ஆத்ம ஸ்வரூப சோதியாக மாறுவான். அதுவே மோக்ஷம். அத்தகைய நிலையை அடைவதே ஜீவனின் இலக்கு. அதனை இப்பிறவியிலேயே சாதித்து அவனருளை அடைதல் வேண்டும்.

கீதையைப் படிப்பதற்குக் குறித்த காலம் எதுவுமில்லை. ஆயினும், சாதாரணமாக காலையில் குளித்து சுத்தமாக வீட்டிலாவது, தீர்த்தங்களிலாவது புனிதமான இடத்திலமர்ந்து கீதா பாராயணம் செய்யும் வழக்கமுள்ளது. ஆயின் மனசுத்தியுடன் புற சுத்தியையும் கவனித்து மேற்கொள்ளுதல் வேண்டும். 'சுசௌ தேசே' என்று கீதையில் சொல்லியிருப்பதால் சாதனை செய்யுமிடம், ஜபிக்குமிடம் இவை சுத்தமாக இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. தினந்தோறும் ஒரு அத்தியாயம் பாராயணம் செய்யக் கூடும். இன்னும் அவகாசமிருப்பின் அதிகமாகச் செய்யக் கூடும். பாராயண முறை நூலிலேயே முதலில் கூறப்பட்டுள்ளது. பாராயணம் முடிந்தபிறகு மகாத்மியத்தில் தவறாது ஒன்றோ, இரண்டோ, சுலோகங்கள் படித்தல் வேண்டும்.

மற்றும் பாராயணம் முடிந்தபின் கீதையைப் பொருளுடன் படித்தற்கு முயற்சி செய்துவருதல் வேண்டும். ஏனெனில் பாராயணத்தினால் புண்ணியம் கிடைப்பினும், சுலோகத்தின் பொருளை மனனம் செய்தால் மாத்திரமே சித்தத்திலுள்ள அழுக்குகள், வாசனைகள் நீங்கி வீடு பேற்றிற்கு வழி கிடைக்கும். பொருள் சரியாக விளங்காவிடின் சுலோகத்தின்

முன் சொல்லியவற்றை முன்பின் புரட்டிப் பார்த்து சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். உதாரணமாக,

**"ப்ரகிருதிம் யாந்தி பூதானி நிக்ரஹஹ் கிம் கரிஷ்யதி"**
**- (3-33)**

என்ற சுலோகத்தில் மக்களனைவரும் அவரவர் குணத்திற்கேற்ப பண்பிற்கேற்ப நடந்து கொள்கின்றனர். இனி எதனை விடுவர்?' என்று கூறப்படுகின்றது. இங்கு பண்பாட்டின் முக்கியத்துவத்தைக் குறிப்பதற்காக அவ்வாறு சொல்லப் பட்டதேயன்றி புலனடக்கம் கூடாது என்பது பொருளல்ல. ஆயினும் உடனேயே,

**"இந்த்ரியஸ்யேந்த்ரியஸ் யார்த்தே ராகத்வேஷௌ**
**வ்யவஸ்திதௌ**
**தயோர் ந வசமாகச்சேத் தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ"**
**- (3-34)**

என்ற சுலோகத்தை பகவான் கூறுகிறார். இதன் பொருள் இந்திரியங்களுக்கு சப்தாதி விஷயங்களில் விருப்புவெறுப்பு ஏற்பட்டுள்ளது. அது ஞானிக்கு எதிரி. எனவே அவற்றிற்கு வசமாகக் கூடாது. இங்கு இந்திரியக் கட்டுப்பாட்டினை தவறாது பழகி வருதல் வேண்டும் என்று ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார். எனவே ஐயத்திற்கிடமான சில சுலோகங்களுக்குப் பொருள் கொள்ளும் போது முன்சொல்லியவற்றைக் கூட கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். சம நோக்குடன் கீதையைப் படித்தல் வேண்டும்.

இவ்வாறு தினமும் ஒருவாறு கீதையைப் படித்து பயிற்சி செய்து வந்து சித்தத்தை நிர்மலமாக்கிக் கொண்டு பகவத் அனுகிரகத்திற்குப் பாத்திரர்களாகி இப்பிறவியின் பயனை அடைதல் வேண்டும். முக்கியமாக மேல் நாட்டு நாகரீக மோகம் மக்களை விழுங்கிவரும் இந்நாளில் கீதையின் உபதேசம் மிகமிக அவசியமாகிறது. உலக போகங்களே கதியென்று நினைக்கும் விவேகமற்றவர்களுக்கு கீதை நல்லமுறையில் நீதி சொல்லி உண்மையான சுகம் எது அது எங்குளது என்பதைக் காட்டுகிறது. அல்பமான சுகங்களுக்குச்

செவி சாய்க்காது பரமானந்தத்தைத் தேடுதல் வேண்டும் என்று அன்புடன் கூறுகிறது. எனவே கீதையின் அன்புமயமான திவ்ய வசனங்களை அக்கறையுடன் கற்று, பின்பற்றி ஆத்மசாம்ராஜ்யத்தின் முடி சூடுவீராக.

கீதையைப் படிப்பதற்குத் தக்க கல்வியற்றவர், படிப்பதற்குச் சிறிதும் இயலாதவர் எவ்வாறு கடைத் தேறுவர் என்ற சந்தேகம் சிலருக்கு எழக்கூடும். அவர்க்கும் வழியுண்டு என்று கிருஷ்ணர் கூறுகிறார்.

"அன்யே த்வேவமஜானந்தஹ் ச்ருத்வான்யேப்ய
உபாஸதே
தே(அ) பி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ச்ருதி பராயணாஹா"
- (13-25)

பெரிய யோகங்களைக் குறித்த அறிமுகம் ஏதுமில்லையாயினும் பிறரிடம் அப்போதனைகளைக் கேட்டறிந்து, சிரத்தையுடன் கடைப்பிடித்து, அவர்களும் சம்சார பந்தத்தினைத் தாண்டவியலும் என்று பகவான் சொல்கிறார். கல்வி கற்பது மேல், ஒரு வேளை கல்வி இல்லாவிடின் பிறரிடம் கேட்பதன் மூலம் ஆத்மஞானம் படிப்படியாக வந்து சேரும் என்பது பொருள்.

ஏனெனில் கேட்டபின் மனனம், மனனத்தின்பின் தியாசம் செய்து மனிதன் படிப்படியாக இலக்கினைச் சாதித்து அடையமுடியும். ஆயின் விடாமுயற்சி, சிரத்தை இவை கண்டிப்பாக இருத்தல் வேண்டும். இதனையே கிருஷ்ணர் (வெறுப்பின்றி சிரத்தையுடன் எவர் கீதையைக்) கேட்கிறார்களோ, அத்தகையோர் பாவத்தினின்றும் மீண்டு, புண்யவான்களின் உலகத்தில் சேரக் கூடும் என்று தெளிவாகக் கூறுகிறார்.

"ச்ரத்தாவானனஸூயஸ்ச ச்ருணுயாதபி யோ நரஹ
ஸோ(அ)பி முக்தஹ் சுபான் லோகான் ப்ராப்னுயாத்
புண்யகர்மணாம்" - (18-7'

எனவே கீதையைப் படிக்க இயலாதவர் கூட கவலையில் மனம் சோர்ந்து விடாமல், கீதை பிரசங்கங்கள் நடக்கும் இடத்திற்குச் சென்று கேட்டறிந்து, கடைப்பிடித்துக் கடைத் தேறுதல் இயலும். ஆயினும் சமயம் கிடைத்த போதெல்லாம் தானே படிக்கும் சக்தியைச் சம்பாதித்துக் கொள்ளுதலே மிகவும் சிறந்தது, கீதையைப் படிப்பதற்காக வேனும் சம்ஸ்கிருத மொழியைக் கற்றுகொள்க என்று காந்தி மகாத்மா ஒரு முறை கூறியுள்ளதை இச்சந்தர்ப்பத்தில் நினைவிற்கு கொணர்க.

கீதை முடிந்தது. ஸ்ரீ கிருஷ்ணர் திவ்ய ஔஷதத்தைக் கொடுத்து முடித்தார். அர்ஜுனனின் வியாதி அக்கணமே நீங்கிப் போயிற்று. ஆயினும் வைத்தியனின் கடமை இன்னும் இருந்தது. 'உன் உடல் நிலை இப்போது எவ்வாறிருக்கிறது?' என்று வியாதியஸ்தனை விசாரிப்பதே அக்கடமை. சிறந்த மருத்துவரான ஸ்ரீ கிருஷ்ணர் இத்தகைய விசாரணையைச் செய்தவுடன் 'நஷ்டோமோஹஹ' என்று உடனேயே பதில் கிடைத்தது. 'மகாத்மா என் அஞ்ஞானம் தொலைந்தது. நீண்ட சம்சாரமெனும் வியாதி தீர்ந்தது. தன்யோஸ்மி இவையனைத்தும் உன் அனுகிரஹத்தின் பலனே என்று கூறினான். கீதையெனும் முதல் பிரயோகத்திலேயே (அர்ஜுனனிடத்து) பலன் கிடைத்தது. உடனேயே சஞ்சயன் அந்த மருந்தினை அருந்தி,

"ஹ்ருஷ்யாமி ச புனஹ் புனஹ.
ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹுஹு"

என்று ஆனந்தத்துடன் கூத்தாடினான். பிரம்மஞானத்தின் உடன்வரும் பலன்களான சோகமின்மை, மிக்கமகிழ்ச்சி என்ற இரண்டும் அர்ஜுனனைப் போன்றே சஞ்சயனுக்கும் கிடைத்தது. எனவே கீதையெனும் மருந்தின் இரண்டாவது பிரயோகத்திலும் (சஞ்சயன் மீது) வைத்தியனுக்கு வெற்றி கிடைத்தது. இவ்வாறு கீதையைக் கேட்டதால் அர்ஜுனன், சஞ்சயன் இருவரும் ஒருவர்பின் ஒருவராக கடைத்தேற மற்றையோரும் இவ்வாறு ஈடேறுவர் என்பதில் ஐயமேது? அவர்களும் தப்பாது ஈடேற்றம் காண்பர். எனவே அனைவரும்

கீதையை ஓதுவதற்கு நிச்சயித்துக் கொள்ள வேண்டும். ஆயின் சிரத்தை மிகவும் அவசியம்.

இவ்விதமாக கீதை அர்ஜுனனுக்கேயன்றி, சஞ்சயனுக்கே யன்றி, மற்றைய பிராணிகோடிகள் அனைவர்க்கும் சாந்தியை அளிக்கக்கூடியது. கீதையெனும் கல்பதரு பல கிளைகளுடன் விரிந்து பரவி, நிழல் அளித்துக் கொண்டிருக்கையில், கனிகளைக் கொடுத்துக் கொண்டிருக்கையில், சம்சார கடலில் அநாதிகாலத்திலிருந்தே சுழன்றுழலும் தாபத் திரயத்தினின்றும் விடுதலை கோரும் ஜீவர்கள் அத்தருவினை அண்டி அதன் நிழலில் இளைப்பாறி, ஏன் சுகமாய் இருத்தல் கூடாது? புனிதமான கீதா மகரந்தத்தை அருந்தி ஏன் பரமானந்தம் அடைதல் கூடாது? கீதையை ஓதி, சிறந்த ஞானயக்ஞம் புரிந்து நிர்வாண சுகத்தினை ஏன் அடைதல் கூடாது? சர்வேசுவரனின் கிருபையாலும், பரம காருண்ய மூர்த்திகளான மகரிஷிகளின் கிருபையாலும் மக்களிடையே கீதையின் சக்தி வளர்ந்து ஆன்மீக வித்தையில் அறிமுகம் பெறுவீராக! கீதையின் தத்வத்தை தஞ்சம் புகுவதால் மக்களின் பவபந்தங்கள் உருத்தெரியாமல் போவதாக. கீதையின் உருவான ஆன்மீகப் பொருள் எனும் அமுதத்தின் மழைச் சாரல், மக்களின் இதய வயல்களைப் பசுமையடையச் செய்து நிர்வாணமென்ற பயிரை விளைவிக்கட்டும். கீதையெனும் சங்கின் அரவம் திசையெங்கும் ஒலித்து மக்களை அஞ்ஞான மெனும் நித்திரையிலிருந்து எழுப்பி விடட்டும். கீதையெனும் கங்கைப் பிரவாகத்தில் களைப்பு தீர ஸ்நானம் செய்து சம்சார அழுக்குகளை நீக்கி உயிரினங்கள் நிரதிசய சுகத்தினை அனுபவிப்பாராக இறையருளினால் கீதையின் தத்வ அனுபூதியால் மக்கள் தத்தம் இதய இருளையகற்றி பிரம்மானந்தக் கடலில் முழுகி வாழ்க்கையில் நிறைவடைவாராக.

ஓம்தத்ஸத்

ஓம் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து



ஓம்

ஸ்ரீ கிருஷ்ண பரபிரம்மணே நமஹ
ஸ்ரீ சத்குரு பரமாத்மனே நமஹ - சர்வமகரிஷிப்யோ நமஹ

கீதா மகரந்த வியாக்கியானத்துடன் கூடிய

# ஸ்ரீ பகவத் கீதை

## முதலாம் அத்தியாயம்
## அர்ஜுன விஷாதயோகம்

## அர்ச்சுனனின் துயரம்

**அத்தியாயத்தின் பெயர் விளக்கம்:**

'அர்ஜுன விஷாத யோகம்' - யோகமென்றால் கூடுதல், ஜீவாத்மா பரமாத்மா ஒன்றுதல் யோகமெனப்படும். அத்தகைய ஒன்றுதல் சித்திக்கச் செய்யும் வழிமுறைகளையும் யோகமென்றே கூறப்படும். ஜீவன் பிரம்மா ஆகிய இரண்டும் ஒன்றுதல் நிஷ்காம கர்மா, பக்தி, தியானம், ஞானம் ஆகிய இவற்றின் எதன் மூலமாகவும் சிந்திக்கக் கூடும். எனவேதான் அவற்றிற்கான நெறிமுறைகள், சாதனைகளுக்கு கர்மயோகம், பக்தியோகம், தியானயோகம், ஞானயோகமென்று வெவ்வேறாகப் பெயர்கள் அமைந்தன. ஆனால் 'விஷாதம்' என்பதும் யோகமெனக்கூடுமா? 'விஷாதம்' என்றால் துக்கம். துக்கம் எப்படி யோகமாகும்? இவ்வுலகம் பொருட்களுக்காக,

போக போக்கியங்களுக்காக துக்கப்படுதல் யோகமல்ல. தெய்வத்திற்காகத் தர்மத்திற்காக, துக்கப்படுதல் யோகமேயாகும். துக்கம் யோகமல்ல ஆயின் அர்ஜுனனின் துயரம் யோகமேயாகும். ஏனெனில் அர்ஜுனன் மூவுலக ஆட்சியையும் துச்சமாக எண்ணி உலக சுகங்களை, இன்பங்களை வெறுத்து, தர்மத்திற்காக பெரிதும் பரிதவித்தான். இத்தகைய நிலை முமுக்ஷுக்களுக்கு மிகவும் தேவையான ஒன்று. அர்ஜுனனுக்கு ஏற்பட்ட வைராக்ய உணர்வு, தர்மத்தை அறியும் ஆவல், தீவிரமான இரக்கவுணர்வு ஆகியவை ஞானத்தை அடைவதற்கு, இறைவனுடன் ஒன்றுதற்கு வழிகாட்டக் கூடியதாகையால் அவனது துக்கமும் ஒரு யோகமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. அதனைப்பற்றி விவரிப்பதாகையால் இந்த அத்தியாயத்திற்கு அர்ஜுன் விஷாத யோகமென்ற பெயர் ஏற்பட்டது.

இவ்வத்தியாயத்தின் முக்கிய செய்திகள்:-

1. இருபக்கங்களிலுமுள்ள போர் வீரர்களின் வருணணை *(1-11)*
2. அப்படைகளின் சங்கநாதம் *(12-19)*
3. அர்ஜுனன் படைகளைப் பார்வையிடுதல் *(20-27)*
4. பாசத்தின் வயப்பட்ட அர்ஜுனனின் துக்கம் நிறைந்த பேச்சு *(28-47)*

முன் சரித்திரத்திற்கும் இவ்வத்தியாயத்திற்கும் உள்ள தொடர்பு:-

மகாபாரத யுத்தம் தொடங்கி பத்து நாட்கள் கடந்தன, பீஷ்மர் போர்க்களத்தில் இறந்து விட்டார். அந்நிகழ்ச்சியை உடனேயே சஞ்சயன் திரிதராஷ்டிரனுக்கு எடுத்துரைக்க, அவரும் பலவாறாக வருந்தி, யுத்தம் ஆரம்பித்தது முதலாக அதுவரை நடந்தவற்றைத் தெரிவிக்குமாறு சஞ்சயனைக் கேட்டார். உடனே சஞ்சயனும் இருபக்க சேனைகளும் போருக்குத் தயாராக இருத்தல், களத்தில் ஸ்ரீ கிருஷ்ண

பரமாத்மா அர்ஜுனனுக்கு உபதேசம் செய்தல் முதலிய செய்திகளனைத்தையும் விரிவாக திருதராஷ்டிரனுக்கு எடுத்துரைத்தார். அதுவே இந்த கீதா சாஸ்திரம்.

**முன்னுரை:**

யுத்தத்தைக் குறித்து திருதராஷ்டிரன் சஞ்சயனை கேட்டது.

திரிதராஷ்டிரன் கூற்று:-

**தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவஹ।**
**மாமகாஹ் பாண்டவாஸ் சைவ கிமகுர்வத ஸஞ்சய॥ (1)**

**சொற்பொருள்:**

த்ருதராஷ்டிர உவாச - திருதராஷ்டிரன் சொன்னது; சஞ்சய - ஸஞ்சயா! தர்மக்ஷேத்ரே - தர்ம பூமியான; குருக்ஷேத்ரே - குருக்ஷேத்திரத்தில்; யுயுத்ஸவஹ - யுத்தம் செய்ய விரும்புவோர்கள்; சமவேதாஹ - திரண்ட; மாமகாஹ் - என்னவர்கள்; பாண்டவாஹ்ச - பாண்டவர்களும்; கிம் - என்ன; அகுர்வத - செய்தார்கள்?

**கருத்துரை:**

திருதராஷ்டிரன் இவ்வாறு கூறினார். ஓ ஸஞ்சயா! என்னவர்களாகிய துரியோதனன் முதலானோரும், பாண்டு புத்திரர்களாகிய தர்மன் முதலானோரும் யுத்தம் செய்ய விரும்பி திரண்டு புண்ய பூமியான குருக்ஷேத்திரத்தில் என்ன தான் செய்தார்கள்?

**விளக்க உரை:**

"தர்மம்" என்ற சொல்லோடு கீதை தொடங்குகிறது. அது மங்களச் சொல். 'தர்மம்' என்ற சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியதன் மூலம் வியாசர் மகரிஷி கீதைக்கு மங்களசாசனம் செய்துள்ளார். ஏனெனில் பகவான் தர்மமே உருவானவன். தர்ம சப்தத்தை உச்சரிப்பதன் மூலம் வியாச

முனிவர் பகவானையே புகழ்ந்துரைப்பதாயிற்று. கீதைப் பேருரையின் குறிக்கோள். அதன் சாரம் என்னவென்பது இந்த முதல் சொல்லிலேயே தெளிவாக்கப்பட்டுள்ளது. அதுவே தர்மம். அத் தர்மத்தை நிலைநாட்டவே பகவான் உலகில் அவதரித்தார். திருதராஷ்டிரன் என்றால் (ராஷ்டிரம் - மாநிலம்) மாநிலங்களையுடையவன் என்பது பொருள். தனக்குரிமை இல்லாத மாநிலங்களையும் தனக்குரியதாகக் கருதுபவன் திருதராஷ்டிரன். இவ்வுலகம், உடல், இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவை காட்சிப் பொருள்கள். அவை நாம் அல்ல, காணவேண்டியது ஆன்மா மட்டுமே நாமேயன்றி. உடல் முதலானவை காணக் கூடியவையல்ல. ஆயின் அஞ்ஞானி தனதல்லாத, அதாவது ஆன்மாவினின்றும் வேறுபட்ட உடல் முதலான காட்சி பொருள்களை தன்னுடையதாகக் கருதி அதன் மீது நான் எனது என்ற எண்ணம் கொள்கிறான். எனவே அவன் திருதராஷ்டிரன். அஞ்ஞானிகள் அனைவரும் திருதராஷ்டிரர்களே. கீதை ஞானத்தை கேட்பதால் அத்தகைய அஞ்ஞான இருளை முழுதுமாக அகற்றுதல் ஒவ்வொருவரின் கடமையுமாகும்.

குருக்ஷேத்ரம் மிகப் பெரிய புண்ணியத்தலம். பஞ்சாப் மாநிலத்தில் அம்பாலா என்னும் பட்டினத்திற்கு தெற்கில் தில்லிக்கு வடக்கே இது உள்ளது.

மஹாபாரதத்தில் வனபருவத்தில் **83**ஆவது அத்தியாயத்திலும் சல்ய பர்வம் **53** ஆவது அத்தியாயத்திலும் இந்த க்ஷேத்திரத்தின் மகிமை நன்கு விவரிக்கப்பட்டுள்ளது. முன்பொருகால் பிரம்மதேவன். இந்திரன், அக்னி முதலானோர் இங்கு தவம் செய்துள்ளனர். கௌரவ பாண்டவர்களின் முன்னோரான குரு மகராஜன் அந்தப் பகுதியில் பற்பல வேள்விகள் செய்துள்ளனர். குரு மகராஜன் அந்தப் பகுதியை உழுததால் அதற்கு குருக்ஷேத்திரம் என்று பெயர் பெற்றது. அந்த க்ஷேத்திரத்தில் எவர் தவம் செய்கிறார்களோ அவர்கள் மேல் உலகத்தை அடைவர் என இந்திரன் குரு மகாராஜாவிற்கு வரமளித்தார். முன்பொருகால் பரசுராமரும் அங்கேயே பித்ரு தர்ப்பணம் செய்துள்ளார்.

எத்துணையோ மகான்கள் பலவிதமான தரும காரியங்களை செய்துள்ளனர். எனவே அது தர்மக்ஷேத்திரமென்ற பெயர் பெற்றது.

அத்தகைய தர்மக்ஷேத்திரத்தில் நுழைந்ததாலோ என்னவோ, அதன் இயல்பால், துரியோதனன் முதலானவர்களின் இரத்தத்தில் சிறிதளவு தயை முதலான சத்குணங்கள் உதயமாயிற்று. தர்மராஜன் முதலானோர் இயற்குணமான அகிம்சை முதலான நற்குணங்கள் வெளிப்பட்டு போர் நிறுத்தத்திற்குரிய எண்ணம் அவர்களிடையே தோன்றியிருக்கலாமோ என்ற ஐயப்பாடு எழ, திருதராஷ்டிரன் யுத்தகளத்தில் அவர்கள் என்ன செய்தார்கள் என்று கேட்டிருக்கக் கூடும்.

"மாமகாஹ" 'என்னவர்' என்று கௌரவர்களைச் சிறப்பாகக் குறிப்பிட்டதால், நெருங்கிய உறவினர்கள் ஆன பாண்டவர்களிடம் திருதராஷ்டிரனுக்கு இருந்த ஓரவஞ்சனை தெரிகிறது.

'சஞ்சயன்' - 'சம்யக் ஜெயம்' உள்ளவன் சஞ்சயன். இந்திரியங்களை நன்குக் கட்டுப்படுத்தியவன் என்று பொருள். அவ்வாறாக இந்திரியங்களை வென்றவர், மனமாசு அற்றவர்க்கே கீதையின் ஞானத்தை கேட்பதற்கு, பின்பற்றுதற்கு, போதிப்பதற்கான வாய்ப்பு ஏற்படும் என்பதை சஞ்சயனின் வரலாறு எடுத்துக் காட்டுகின்றது. மற்றும் கீழ் சாதியில் பிறந்திருந்தும் தன்னுடைய தகுதியாலும், இதயத் தூய்மையாலும் வியாசர் முதலான மகரிஷிகளின் அருளைப் பெற்றவனானதாலும் நேருக்கு நேர் கீதையைக் கேட்டல், விசுவரூபக் காட்சி முதலிய மாபெரும் பேறுகள் சஞ்சயனுக்கு வாய்த்ததை நோக்க ஒருவனது உயர்வுக்கு சாதி, மதம், குலம் முதலியன தடைகள் அல்ல என்பது தெளிவாகிறது.

துரியோதனனின் வெற்றி குறித்து தெரிந்து கொள்ள வேண்டி திருதராஷ்டிரன் கேட்ட, 'தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே . . . . . கிமகுர்வத சஞ்சய' என்ற கீதையின் முதல் சுலோக வடிவான கேள்விக்கு சஞ்சயன், 'யத்ர

யோகேஸ்வரஹ, கிருஷ்ணஹ - த்ருவா நீதிர்மதிர் மம' (18-78) - எங்கு கிருஷ்ணரும் அர்ஜுனனும் இருக்கிறார்களோ அங்கே வெற்றி உறுதி எனும் கீதையின் கடைசி சுலோகத்தை விடையாகச் சொல்லக் கருதி அந்தக் கருத்தை போற்றும் விதமாக இடையில் நடந்தவற்றை 'திருஷ்ட்வாது பாண்டவானீகம்' முதலான சுலோகங்களின் வழி சொல்லத் தொடங்கினான்.

திருதராட்டிரன் வினாவிற்கு விடையாகச் சஞ்சயன் பின்வருமாறு கூறலானான்.

**ஸஞ்சய உவாச:**

**2. த்ருஷ்ட்வாது பாண்டவனீகம் வ்யூடம் துர்யோதனஸ்ததா।**
**ஆசார்யமுபஸங்கம்ய ராஜா வசனமப்ரவீத்॥ (2)**

**சொற்பொருள்:**

சஞ்சய உவாச: சஞ்சயன் சொன்னது. ததா - அப்போது; ராஜா - அரசனான; துரியோதனஹ - துரியோதனன்., வ்யூடஹ - வியூகமாக அணிவகுத்து நின்று; பாண்டவா நீகம் - பாண்டவர்களுடைய படையை; திருஷ்ட்வாது - பார்த்த பிறகு; ஆசார்யம் - துரோணாச்சார்யாரை; உப சங்கம்ய - அணுகி., வசனம் - பின்வரும் வசனத்தை., அப்ரவீத் - சொல்லத் தொடங்கினான்.

**கருத்துரை:**

திருதராஷ்டிரனிடம் ஸஞ்சயன் இவ்வாறு கூறினான். அப்போது அரசனனான துரியோதனன் அணிவகுத்து நின்ற பாண்டவ சேனையைப் பார்த்து துரோணாசாரியாரை நெருங்கி இவ்வாறு சொன்னான்.

**விளக்கவுரை:**

பாண்டவ சேனாதிபதி திருஷ்டத்யும்னன் யுத்த சாஸ்திரத்திற்கு ஏற்பத் தன் படையை வச்சிர வியூகமாக அமைத்திருந்தான். பாண்டவ சேனையின் அற்புதமான வியூக

அமைப்பு துரியோதனனுக்கு வியப்புண்டாக்க, அதைவிடைச் சிறப்பாகத் தன் படையை திட்டமிடும் கருத்துடனே, அந்த கருத்தை குருவாகிய துரோணாச்சாரியாரிடம் எடுத்துரைக்க அவரை அனுகினான்.

துரியோதனன் அரசன் அரசவையில் மிக முக்கியமான உன்னத நிலையில் உள்ளவன். அவ்வாறிருக்கையில் தன்னைவிட கீழ்நிலையிலுள்ள படைத்தலைவனிடம் தானே சுயமாகப் போக வேண்டிய வேலை என்ற ஐயம் தோன்றும் இதற்கான காரணம் இவையாக இருக்கக் கூடும்

(1) பாண்டவர் படைகள், அதிலும் பீமனைப் பார்த்து பயந்து துரியோதனன் அஞ்சியிருக்கக் கூடும். (ஆரம்பத்திலேயே அரசன் தைரியத்தை இழத்தல் அபசகுணம்)

(2) துரோணாச்சாரியார் சேனைத் தலைவர்களுள் ஒருவர் ஆதலால் அவரை அவரது நிலையிலிருந்து அகற்றினால் படையெல்லாம் சிதறிப்போக வாய்ப்புண்டு.

(3) துரோணர்ச்சாரியார் வயோதிகர்; ஞானி. மேலும் குருவாகவும் உள்ளவர். அத்தகையோரிடம் பணிவுடன் இருத்தல் தர்மம்.

(4) ஏதோ ஒரு வகையில் துரோணாச்சாரியாரை தன் வழிக்குத் திருப்பி தன் சுயநலத்திற்காக பயன்படுத்த எண்ணியிருக்கக் கூடும். - இக்காரணங்களால் துரியோதனன் ஆசாரியாரைத் தன்னிடம் அழைக்காமல் தானே அவரிடம் சென்று விண்ணப்பித்துக் கொண்டான்.

பீடிகை துரியோதனன் துரோணாச்சாரியாரை அணுகி இவ்வாறு விடையிறுத்தான்

**3. பச்யைதாம் பாண்டுபுத்ராணமாசார்ய மஹதீம் சமூம்।**
**வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவசிஷ்யேண தீமதா॥ (3)**

**சொற்பொருள்:**

*ஆசார்ய! குருவே! தவ-உமது; சிஷ்யயேண - சிஷ்யனும்; தீமதா-சிறந்த புத்திவானும் த்ருபத புத்ரேண - துருபதன் புத்திரனுமாகிய; த்ருடத்யுயுத்மனனால் வியூடாம் - அணிவகுக்கப்பட்ட; பாண்டவ புத்ராணாம் - பாண்டுவின் புதல்வர்களுடைய; ஏதாம் - இந்த; மகதீம் - மாபெரும், சமூம் - படையை; பச்ய - பாரும்.*

**கருத்துரை:**

*தலைசிறந்த குருவே! புத்திசாலியும் உன் மாணாக்கனுமாகிய திருஷ்டத்யும்னானால் அணிவகுக்கப் பட்ட பாண்டவர்களின் மாபெரும் படையை வந்து பாருங்கள்.*

**விளக்கவுரை:**

*இந்த சுலோகத்தில் துரியோதன உவாச' என்றிருக்க வேண்டும். ஆனால் இல்லை. பாவியான அவன் பெயரைப் புண்ணியவான்களாகிய கீதையைப் படிப்பவர்கள் பலமுறை உச்சரிக்கக் கூடாதென்றெண்ணியோ என்னவோ அவனது பெயர் அங்கு இடம்பெறவில்லை.*

*துரியோதனன் சிறந்த அரசியல் சாதுரியம் உள்ளவன். காரியம் கைகூடுவதற்காக தன் பதவியைக் கூட எண்ணிப்பாராது இறங்கி வந்து படைத்தலைவனிடம் (துரோணாச்சாரியாரிடம்) பேசுவது மட்டுமின்றி, எதிரிகளிடத்து அவருக்குக் கோபம் ஏற்படும் வண்ணம் செய்தான்.*

*துருபதன் புதல்வனும், உன் சிஷ்யனுமாகிய திருஷ்டத்யும்னன் பாண்டவ சேனையை நன்கு அமைத்துள்ளான் என்று சொல்வதனால் துரோணாசாரியாருக்கும் துருபதனுக்கும் ஏற்கனவே உள்ள பகையை நினைவுறுத்தினான். உம் மாணவனாகிய அவனே*

பகைப்புலத்தில் தலைவனாகி குருவாகிய உம்மையே எதிர்க்கிறான் என்று சொல்லி துரோணாச்சாரியாருக்குத் தீவிரமான தன்மானவுணர்ச்சியைத் தூண்டி விடுகிறான். பகைப்படைத் தலைவனைப் புகழ்ந்து கூறி, தன் படைத்தலைவனிடம் பகைமையுணர்வினைத் தூண்டுதல் துரியோ தனனின் எண்ணம்.

'தீமாம்' என்று சொல்லப்படுவதால் திருஷ்டத்யும்னன் வியூகம் அமைப்பதில் மிகவும் கைதேர்ந்தவன் என்பது தெரிகிறது. அதனாலாயே பாண்டவர்கள் அவனைப் படைத்தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர்.

**முன்னுரை:**

துரியோதனன், பாண்டவர்களின் பக்கம் உள்ள முக்கிய வீரர்களின் பெயர்களை துரோணாச்சாரியாரிடம் தெரிவிக்கிறான்.

4. **அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுன ஸமாயுதி ।**
**யுயுதானோ விராடஸ்ச த்ருபதஸ்ச மஹாரதஹ ॥** (4)

5. **த்ருஷ்டகேது ஸ்சேகிதானஹ காசிராஜஸ்ச வீர்யவான் ।**
**புருஜித் குந்திபோஜஸ்ச சைப்யஸ்ச நரபுங்கவஹ ॥** (5)

6. **யுதாமன்யுஸ்ச விக்ராந்த உத்தமௌஜாஸ்ச வீர்யவான் ।**
**ஸௌபத்ரோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வ ஏவ மஹாரதாஹ ॥** (6)

**சொற்பொருள்:**

அத்ர-இங்கு பாண்டவ சேனையில் மஹேஷ்வாஸா- சிறந்த வில்லாளிகளாகவும், யுத்தி - யுத்தத்தில்; பீமார்ஜுன ஸமாஹ் - பீமன் அர்ச்சுனனுக்குச் சமானமானவருமான; சூராஹ் - வீரர்கள் ஸ்ரந்தி - இருக்கிறார்கள். (அவர்கள் எவரெனின்) துருபதஸ்ச - துருபதன், த்ருஷ்ட கேதுஹ் - திருஷ்டகேது சேகிதானஹ் - சேகிதான்; வீர்யுவான் - பராக்கிரமம் நிறைந்த; காசி ராஜஸ்ச - காசிராஜாவும்; புரோஜித் - புரோஜித் என்பவனும்; குந்திபோஜஸ்ச - குந்திபோஜனும்; நரபுங்கவஹ்-மனிதரில் முதன்மை யானவனுமான சைப்யஹ்ச - சைபியன் என்பவனும்; விக்ராந்தஹ -

பேராற்றலுடைய யுதாமன்யுஹ்ச - யுதாமன்யுவும்; வீரவான் - வல்லமைபொருந்திய; உத்தமௌஜஸ் - உத்தமௌஜஸ் என்பவனும்; சௌபத்ர - அபிமன்யுவும் - திரௌபதேயாஸ்ச - திரௌபதியின் புதல்வர்களும்; ஸர்வே - அனைவரும் மஹாரதாஹ ஏவ - மகாரதர்களேயாவர்.

**விளக்கவுரை:**

மேலே குறிப்பிட்ட வீரர்களை பீமன், அர்ச்சுனனுக்குச் சமமானதாகச் சொல்லியதால் அவர்கள் தலைசிறந்த வீரர்கள் என்பதும் துரியோதனனுக்கு அச்சம் தருபவர்கள் என்பதும் தெளிவாகிறது.

துரியோதனன் தன் பக்கத்து வீரர்களைப் பற்றிக் குறிப்பிடாது, எதிரிகளின் வீரர்களைக் குறிப்பிட்டதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன.

1. துரோணாச்சாரியாருக்கு எதிரிகளின் படைமீது ஆவேசம் தோன்றச் செய்தல்.

2. தன் படை பலத்தில் அதைரியம் கொண்டிருத்தல் அல்லது மாற்றார் படை தன் படையைவிட பலமானது என்று கருதுவதாகும்.

'மகாரதன்' என்றால் பத்தாயிரம் வீரர்களோடு தனி ஒருவனாக நின்று போர் செய்ய வல்லவன்; ஆயுத சாஸ்திரத்தில் வல்லன்.

**"ஏகோதச ஸஹஸ் ராணி யோதயேத்யஸ்து தன்விநாம்**
**சஸ்த்ரசாஸ்த்ரப்ரவீணஸ்ச மஹாரத இதி ஸ்மருதஹ"**

யுயுதானன் - இவனுக்கு சாத்யகி என்ற பெயரும் உண்டு

த்ருஷ்டகேது - சேதி தேச அரசன், சிசுபாலனின் புத்திரன்.

புருஜித், குந்திபோஜன் - குந்திதேவியின் சகோதரர்கள்.

திரௌபதேயர் - திரௌபதியின் குமாரர்கள் ஆகிய உப பாண்டவர்கள்.

1. பிரதிவிந்தியன்
2. சுருதசோமன்
3. சுருதகீர்த்தி
4. சதாநீகன்
5. சுருதசேனன்

இவர்கள் முறையே தருமர், பீமர் முதலியவர்க்குத் திரௌபதி வழி தோன்றிய குமாரர்கள்.

**முன்னுரை:**

பாண்டவர் பக்கமுள்ள வீரர்களைப் பற்றிக் கூறி, தன் பக்கமுள்ள தலை சிறந்த போர் வீரர்களை வருணிக்கின்றான்.

**7. "அஸ்மாகம் து விசிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம!**
**நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஞார்த்தம் தான் ப்ரவீமி தே॥"**
**(7)**

**சொற்பொருள்:**

த்விஜோத்தம! - பிராம்மணர்களில் உத்தமரே! அஸ்மாகம் - நம்மவர்களுல் ஏ - யார் விசிஷ்ட சிறந்தவர்களோ; மம - எனது; சைன்யஸ்ய - என் சேனையின் நாயகாஹ் - தலைவர்கள்; தான் - அவர்களை; தே - உனக்கு; ஸம்ஞார்த்தம் - ஞாபகத்திற்காக ப்ரவீமி - சொல்லுகிறேன்.

**கருத்து:**

ஓ பிராம்மணோத்தம! நம் படையில் சிறந்தவர்கள் தானைத் தலைவர்கள் யார் இருக்கிறார்களோ அவர்களை உமக்கு நினைவுபடுத்துவதற்காகச் சொல்கிறேன் கேளுங்கள்!

**விளக்கவுரை:**

மாற்றார் படையிலுள்ள வீரர்களை மட்டுமே தெரிவித்தால் துரோணாச்சாரியாருக்கு ஒருவேளை அதைர்யம்

ஏற்பட்டுவிடுமோ என்றெண்ணி தன்பக்கத்து வீரர்களையும் கூட துரியோதனன் தெரிவிக்கத் துவங்கினான்.

8. **"பவான் பீஷ்மஸ்ச கர்ணஸ்ச க்ருபஸ்ச ஸமிதிஞ்சயஹ|**
**அச்வத்தாமா விகர்ணஸ்ச சௌமதத்திர் ஜயத்ரதஹ||" (8)**

9. **"அன்யேச பஹவஹ்சூரா மதர்த்தே த்யக்தஜீவிதாஹ|**
**நானாசஸ்த்ரப்ரஹரணாஹ் ஸர்வே யுத்தவிசாரதாஹ||" (9)**

**சொற்பொருள்:**

பவான் - நீங்களும் பீஷ்மஸ்ச - பீஷ்மரும்; கர்ணஸ்ச - கர்ணனும்; சமிதம் ஜெய - போர்முனையில் வெற்றியே காணும்; க்ருபஸ்ச - கிருப்பாச்சாரியாரும், அச்வத்தாம - அசுவத்தாமாவும்; விகர்ணஸ்ச - விகர்ணனும் ததைவச - அவ்வாறே - ; சௌமதத்தி - சோமதத்தன் குமாரனாகிய பூரிசிரவஸும், மதர்த்ததே - என்பக்கம்; த்யக்தஜீவிதா - உயிரை கொடுக்கவும் தயாராகவுள்ள; பஹவஹ - பலரும்; அன்யேச - மேலும் மற்றையோரும் - ; சூராஹ - சூரர்களும்; நாநாசஸ்த்ரப்ரஹரணஹ் - பலவித ஆயுதங்களையும் அம்புகளையும் உடையவராய்; ஸர்வே - இவர்கள் யாவரும்; யுத்த விசாரதாஹ - யுத்தத்தில் மிகத் தேர்ந்தவர்களாக இருக்கின்றனர்.

**கருத்துரை:**

தாங்கள், பீஷ்மர், கர்ணன், போரில் எப்போதும் வெற்றி வாகை சூடும் கிருபாசாரியார், அசுவத்தாமன், விகர்ணன், பூரிசிரவஸ், இன்னும் எனக்காகத் தம் உயிரையே விடத்துணிந்துள்ள பல சூரர்களும், அனைவரும் யுத்தத்தில் மிகத் தேர்ந்தவர்களாய் பலவிதமான ஆயுதங்கள் தாங்கி இங்குள்ளனர்.

**விளக்கவுரை:**

துரியோதன் வீரர்களைப்பற்றிக் குறிப்பிடுகையில் தன் படைத் தலைவரான பீஷ்மர் பெயரை முன் குறிப்பிடாது,

துரோணாச்சாரியார் பெயரை எதற்கு முன் சொல்லவேண்டி வந்தது? எதிரேயுள்ள துரோணாச்சாரியார் என்ன நினைத்துக் கொள்வாரோ என்று ஐயுற்றோ, குருவை முதன் முதலில் நினைப்பதே உரியது என்றோ, துரோணாச்சாரியரை உற்சாகப்படுத்தும் நோக்கமாகவோ இருக்கக் கூடும்.

இரண்டு சேனைகளிலும் உள்ள வீர சூரர்களைத் துரோணாச்சாரியார் அறிந்திருந்தாலும் அவருக்குச் சொல்லும் போக்கில் துரியோதனன் தன்பக்கம் உள்ளவர்களையும் நினைவுறுத்திக் கொண்டு படைபலத்தை ஆராய்ந்தான்.

'த்யக்தஜீவிதாஹ' - (உயிரை இழந்தவர்கள்) என்னும் சொல் துரியோதனன் வாக்கில் வருவதைக் கண்டால், தன் பக்கம் உள்ளவர்கள் எல்லோரும் அழிந்துபோவார்கள் என அவனது அந்தராத்மா ஒலித்திருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. அவ்விதமாக சொற்கள் வாக்கில் வருதல் துரியோதனனுக்கு துர்நிமித்தக் குறிப்பு என்பது சிலரது கருத்து.

**முன்னுரை:**

துரியோதனன் இவ்வாறு தன் படைவீரர்களைப் புகழ்ந்த பிறகு இருபக்கத்துச் சேனையையும் சீர்தூக்கிப் பார்த்துத் தன் படையே மிக்க வலிமையுடையது என்று சொல்வான்.

**10. அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம்।**
**பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம்॥ (10)**

**சொற்பொருள்:**

தத் - அத்தகைய; அஸ்மாகம் - நம்முடைய; பலம் - படை; பீஷ்மாபிரக்ஷிதம் - பீஷ்மரால் நன்கு காப்பாற்றப்பட்டு அபர்யாப்தம் - அளவில் அடங்காதது; ஏதேஷாம் - இந்த பாண்டவர்களுடைய; இதம் பலம் து - இந்த சேனை -; பீமா பிரக்ஷிதம் - பீமனால் காக்கப்படுகின்ற; பர்யாப்தம் - ஓரளவேயுள்ளது.

**விளக்கவுரை:**

இந்த சுலோகத்தில் 'அபர்யாப்தம்', 'பர்யாப்தம்' என்ற சொற்களின் பொருளில் பயன்படுத்துவதில் வேறுபாடு காணப்படுகிறது. ஆனந்தகிரி, சங்கரானந்தர் முதலானவர்கள் 'அபர்யாப்தா' என்னும் சொல்லுக்கு அளவில் அடங்காத என்னும் பொருள் தந்துள்ளனர். ஸ்ரீதரன் முதலானோர் 'குறைவுடைய', 'வலுவில்லாத' என்னும் கருத்தைக் கொண்டுள்ளனர். ஆயின் இங்கு முதற் சொன்ன பொருளே பொருத்தமாகத் தோன்றுகிறது. ஏனெனில் துரியோதனன், இதற்கு முன் உத்யோகபர்வத்தில் திருதராஷ்டிரனுடன் (54-60, 70), பீஷ்மபர்வத்தில் துரோணச்சாரியாருடன், (51, 54, 56) தன் படையின் பெருமையை மிகுதியாகப் பாராட்டிப் பேசியுள்ளான். அவர்களை உற்சாகப்படுத்தும் விதமாக அவ்வாறு சொல்லியுள்ளான். இங்கும் அதே சூழ்நிலையே ஆதலால் வேறோர் விதமாக சொல்லியிருக்கமாட்டான். தன் படையைத் தாழ்த்திக் கூறவேண்டிய சூழ்நிலை இங்கு இல்லை. தன் பக்கம் படையின் சிறப்பையே இங்கு எடுத்துரைப்பதால் 'நம் படை மிகுதியாக இல்லை. பாண்டவர் படை நிறைந்துள்ளது' என்னும் பொருள் பொருந்துவதாக இல்லை. பீஷ்மபர்வ சுலோகத்தை இங்கு நினைவுகூர்தல் வேண்டும்.

'பீமா பிரக்ஷிதம்' - கௌரவ படைக்கு பீஷ்மர் தளபதி ஆனாற்போல, பாண்டவர் படைக்கு திருஷ்டத்யும்னன் தளபதி என்று சொல்லாமல் பீமனால் பாதுகாக்கப்படுகின்றது என்று ஏன் குறிப்பிடப்பட்டுள்ளது? இதற்குரிய காரணங்கள் இவை ஆகலாம். (1) பீமன் திருதராஷ்டிரன் புதல்வர்கள் அனைவரையும் அழிக்கும் சபதம் மேற்கொண்டவன் ஆகையால் துரியோதனின் சிந்தனை எப்போதும் அவன் மீதே இருப்பதால் பீமனால் காக்கப்பட்ட படை என சொல்லியிருக்கலாம். (2) திருஷ்டத்யும்னன் பாண்டவ படைக்குத் தளபதியாயினும் பீமன் படைகளைக் காப்பதற்கு நியமிக்கப்பட்டான். (3) முதல் நாள் யுத்தத்தில் பாண்டவர்களால் அமைக்கப்பட்ட வச்சிர வியூகத்தில் காப்பாளனாக முன்பகுதியில் பீமன் இருந்தான். எனவே

ாப்பாளனாக பீமனே துரியோதனன் கண்ணிற்கு
ு-ருக்கக் கூடும்.

விதமாக தன் படைகளை வெற்றி கொள்ளவல்லது
ணித்து அதன் பின் வீரர்களனைவரையும் பீஷ்மரைக்
று எச்சரிக்கை விடுக்கிறான்.

**ஷு ச ஸர்வேஷு யதாபாகமவஸ்திதாஹ|**
**மேவாபிரக்ஷந்து பவந்தஹ ஸர்வ ஏவ ஹி||** **(11)**

தஹ - நீங்கள் அனைவரும்; சர்வஏவ - ஒவ்வொரும்
க; ஸர்வேஷு - எல்லா இடங்களிலும்; அயனேஷு
ாவ்யூக அமைப்புகளில் எல்லாம்; யதா பாகம் -
க்குரிய இடங்களில் அவஸ்திதா - நின்றுகொண்டு;
ஏவ - பீஷ்மரையே; அபிரக்ஷந்து ஹி - எல்லா
ரிலும் பாதுகாப்பீராக!

ர:

களனைவரும் வியூகத்தின் நுழைவுப் பகுதிகளில்
ர்க்குரிய நிலைகளில் இருந்து, பீஷ்மரை எல்லா
லும் பாதுகாக்க வேண்டும்.

**ரை:**

மர் மகாபராக்கிரமசாலி, தன்னைத் தானே காத்துக்
ா வல்லவர். அப்படியாயின் பீஷ்மரையே எல்லா
லும் காப்பாற்றுக என்று துரியோதனன் ஏன்
னான்? இதற்கு ஒரு காரணம் உண்டு. துருபதன்
னாகிய சிகண்டி முதன் முதலில் பெண் வடிவம்
டிருந்ததால் அவனோடு யுத்தம் செய்யமாட்டேன்
பீஷ்மர் சபதம் செய்துள்ளார். அதனால் பாண்டவர்
ள்ள சிகண்டி எதிரில் வரின் பீஷ்மர் யுத்தம்
ாட்டார். அந்த வாய்ப்பை பயன்படுத்தி எதிரிகள்
ரக் கொன்றுவிடக் கூடும், இந்த இரகசியத்தையறிந்த

வீரர்களனைவரையும் பீஷ்மனை எதிர்க்க சிகண்டி எதிர்ப்படாதவாறு எல்லா வகையிலும் காக்க வேண்டுமென ஆணையிட்டான். பீஷ்மர் ஒருவர் நன்றாக இருப்பின் - (எதிரிகள் அனைவரையும் அழிக்கும் ஆற்றல் அவரிடம் இருப்பதால்) - தன் சைன்யம் அனைத்தும் நன்கு காப்பாற்றப்படும் என்ற எண்ணத்துடனேயே துரியோதனன் மேற்சொன்னவாறு ஆணையிட்டான்.

**முன்னுரை:**

இவ்விதமாக துரியோதனன் பற்றிய செய்திகளைக் கூறி போர்க்களத்தில் அதன்பின் நடந்த நிகழ்ச்சிகளை சஞ்சயன் விவரிக்கின்றார்.

**12. "தஸ்ய ஸஞ்ஜையன் ஹர்ஷம் குருவ்ருத்தஹ் பிதாமஹஹ!**
**ஸிம்ஹநாதம் விநத்யோச்சைஹி சங்கம் தத்மௌ**
**ப்ரதாபவான் II (12)**

**சொற்பொருள்:**

ப்ரதாபவான் - பராக்கிரமம் நிறைந்தவன்; - குருவ்ருத்தஹ - கௌரவர்களில் பெரியார்; பிதாமஹஹ - பாட்டனார் ஆன பீஷ்மர்; தஸ்ய - அத் துரியோதனனுக்கு; ஹர்ஷம் - உற்சாகத்தை சந்தோஷத்தை, ஸஞ்ஜனயன் - ஊட்டுவதற்கு; உச்சைஹி - உரக்க; சிம்ஹநாதம் - சிம்மத்தின் கர்ஜனை போன்ற ஒலியை; விநத்ய - உண்டாக்கி சங்கம் - சங்கை; தத்மௌ - ஊதினார்.

**கருத்துரை:**

பராக்கிரமசாலியும், குருவம்சத்தில் வயோதிகருமான பாட்டனார் ஆன பீஷ்மர் துரியோதனனுக்கு உற்சாகமூட்டும் வகையில் பெரிதாக சிம்மநாதம் போன்று சங்கை ஊதினார்.

**விளக்கவுரை:**

'ப்ரதாபவான்' - பரசுராமர் போன்ற மகாசக்தி வாய்ந்தவர்களையும்கூட வெற்றி கொள்ளக்கூடிய மிக்க பேராற்றல் படைத்தவர் ஆனதால் பீஷ்மர் இங்கு 'ப்ரதாபவான்'

என்று சொல்லப்படுகின்றார்.

அரசனாகிய துரியோதனன், எதிரிப் படையைக் கண்டு ஒருவாறாக மனக் கலக்கம் அடைந்ததைக் கண்ணுற்று அவன் மனதை உற்சாகப்படுத்தும் எண்ணத்துடன் படைத் தலைவரான பீஷ்மர் சங்கை உரக்க ஊதினார். படைத் தலைவன் சங்கை ஒலித்தல் போர் ஆரம்ப அறிகுறி. குருவ்ருத்தஹ - குருவம்சத்தில் அப்போதிருந்தவர்களில் பாஹ்லிகன் பிறகு வயதில் பெரியவர் பீஷ்மரே. எனவேதான் பாட்டனார் எனப்படுகிறார்.

**முன்னுரை:**

பீஷ்மரின் யுத்தம் செய்யும் உற்சாகத்தைக் கண்டு மற்றைய சேனைத் தலைவர்களும் சங்க நாதத்தை முழங்கினர் என்று சஞ்சயன் கூறுகிறார்.

**13. ததஹ சங்காஸ்ச பேர்யஸ்ச பணவானககோமுகாஹ।**
**ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ சப்தஸ்துமுலோ அபவத்॥ (13)**

**சொற்பொருள்:**

ததஹ- அதன்பிறகு; சங்காஸ்ச - சங்குகளும்; பேர்யஸ்ச - பேரிகைகளும் பணவாண ககோமுகாஹ் - தாரை, தப்பட்டைகளும்; பறைகளும், கொம்புகளும்; ஸஹஸைவ - திடிரென்று, அக்கணமே; அப்யஹன்யந்த - முழங்கின; ஸ சப்தஹ - அவ்வொலி; துமுலஹ - நான்கு திசைகளிலும் பரவி அபவத் - ஒலித்தது.

**கருத்துரை:**

பீஷ்மர் சங்கொலி செய்தபின், கௌரவ சேனையில் மற்றையவரும், சங்கம், பேரிகை, பறை, கொம்பு இவற்றை உடனேயே முழக்கினர். அவ்வொலி திசையெங்கும் பரவிற்று.

**விளக்கவுரை:**

சேனாதிபதியின் சங்க நாதம், சிம்ம நாதம் ஏனைய படைவீரர்களிடையே உற்சாகம் ஏற்படுத்தியதால் அவர்களும் ஒரே சமயத்தில் பலவித போர் வாத்தியங்களை முழங்கினர்.

'என்னவர்', பாண்டவர்கள் யுத்தத்தின் என்ன செய்கிறார்கள், என்று திருதராஷ்டிரனின் கேள்விக்கு பதிலாக சஞ்சயன் இதுவரை கௌரவர்களைப் பற்றிய செய்திகளைக் கூறினான். இனி இங்கிருந்து ஐந்து சுலோகங்கள் பாண்டவர்கள் பக்கச் செய்திகளைப் பற்றிக் கூறுகிறான்.

**முன்னுரை:**

கிருஷ்ணார்ஜுனர்கள் தத்தம் சங்கை ஊதினர் என்ற செய்தியைச் சொல்கிறார்.

**14. ததச்வேதைர்ஹயைர்யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ|**
**மாதவஹ பாண்டவஸ்சைவ திவ்யௌ சங்கௌ ப்ரதத்மதுஹு||**

**(14)**

**கருத்துரை:**

ததஹ - பிறகு; ச்வேதைஹி - வெண்மையான; ஹயைஹி - குதிரைகளோடு; யுக்தே - பூட்டிய; மஹதி - சிறந்த; ஸ்யந்தனே - தேரில்; ஸ்திதௌ - வீற்றிருந்த; மாதவஹ - ஸ்ரீ கிருஷ்ணரும், பாண்டவஸ்சைவ - அர்ஜுனனும்; திவ்யௌ - தெய்வீக; சங்கௌ - (தத்தம்) சங்குகளை; ப்ரதத்மதுஹு - உரக்க ஊதினார்கள்.

**கருத்துரை:**

அதன்பின் வெள்ளைக் குதிரைகளைப் பூட்டிய சிறந்த தேரில் வீற்றிருந்த கிருஷ்ணனும், அர்ஜுனனும் தத்தம் தெய்வீகச் சங்குகளை உரக்க ஊதினார்கள்.

**விளக்கவுரை:**

கீதையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அரங்கத்திற்கு வருவது இவ்விடத்தில் தான். வெள்ளைக் குதிரைகளுடன் கூடிய மிக அற்புதமான தெய்வீக ரதத்தின் மேலேறி நர நாராயணர்களான கிருஷ்ணார்ஜுனர்களின் உருவமாக தோன்றினார்கள். வெண்மை சாந்தவருணத்தைக் குறிப்பது. இதனை

வைத்துத்தான் தர்மமும்; (அதனால்) வெற்றியும் பாண்டவர்கள் பக்கமே நேரும் என்று தெரிவிக்கிறது.

அர்ஜுனனுக்கு இந்த தெய்வீக ரதத்தையும், காண்டீபம் எனும் வில்லையும் முன்பொருகால் காண்ட தகனத்திற்கு மெச்சி அக்னி தேவன் கொடுத்தருளினார். எனவே அவை மகாசக்தி உடையவை. வெள்ளைக் குதிரைகள் நான்கும் கந்தர்வ ராஜாவான சித்ரரதன் வெகுமதியாகக் கொடுத்த நூறு குதிரைகளைச் சேர்ந்தவை. அவை பூமி, ஆகாயம் ஆகிய எல்லா இடங்களிலும் சஞ்சரிக்கக் கூடியவை. இந்த நான்கு குதிரைகளையும், நால்வேதங்கள் என்றும், கிருஷ்ணார்ச்சுனர்கள் முறையே பரமாத்மாவும் ஜீவாத்மாவும் என்றும் கூறுவர்.

'மாதவஹு' - 'மா' என்றால் இலக்குமி, 'தவ' என்றால் கணவன்; லக்ஷ்மிபதியான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா சங்கை ஊதி கௌரவர் பக்கத்தினின்றும் ராஜ்ய லக்ஷ்மியை பெற்றுக் கொண்டார் என்று சஞ்சயன் மறைமுகமாகக் கூறுகிறார் எனலாம்.

கௌரவர்கள் பக்கத்தில் பீஷ்மர் முக்கியமானவர். எனவே முதலில் அவரே சங்கை முழங்கினார். அவ்வாறே, பாண்டவர் பக்கம் ஸ்ரீ கிருஷ்ணரே சங்கை முழங்கியதால் அவரே இப்பக்கம் முதன்மையானவர் என்பதும் மற்றையோர் வெறும் நிமித்த மாத்திரர்களே என்றும் வெளியாகின்றது. 'பாண்டவஹு' - அர்ஜுனன் - 'பாண்டவானாம் தனஞ்ஜயஹு' என்று சொல்லப்பட்டிருப்பதால், 'பாண்டவ' என்ற சொல்லுக்கு அர்ஜுனன் என்பதே இங்கு பொருத்தம்.

**முன்னுரை:**

இனி நான்கு சுலோகங்களில் பாண்டவ வீரர்களையும், அவர்கள் ஊதிய சங்கங்களையும் கூறுகிறார்.

**15. பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தனஞ்சயஹு|**
**பௌண்ட்ரம் தத்மௌ மஹாசங்கம் பீமகர்மா வ்ருகோதரஹு|| (15)**

16. அனந்தவிஜயம் ராஜா குந்தீபுத்ரோ யுதிஷ்டிரஹ|
நகுலஹ் ஸஹதேவஸ்ச ஸுகோஷமணிபுஷ்பகௌ|| (16)

17. காச்யஸ்ச பரமேஷ்வாஸஹ் சிகண்டி ச மஹாரதஹ|
த்ருஷ்டத்யும்னோ விராடஸ்ச ஸாத்யகிஸ்சாபராஜிதஹ|| (17)

18. த்ருபதோ த்ரௌபதேயாஸ்ச ஸர்வசஹ ப்ருதிவீபதே|
ஸௌபத்ரஸ்ச மஹாபாஹுஹ் சங்கான்தத்முஹு ப்ருதக்
ப்ருதக்|| (18)

**சொற்பொருள்:**

ப்ருதிவீபதே - ஓ திருதராஷ்டிர மஹாராஜா! ஹ்ருஷிகேசஹ - ஸ்ரீ கிருஷ்ணர், பாஞ்சஜன்யம் - பாஞ்சஜன்யம் எனும் சங்கை; தனஞ்ஜயஹ - அர்ஜுனன்; தேவதத்தம் - தேவதத்தம் எனும் சங்கை; பீமகர்மா - பயங்கரமான செயல்களை புரிபவனான, வ்ருகோதரஹ - பீமசேனன்; பௌண்ட்ரம் - பௌண்ட்ரம் எனும்; மஹாசங்கம் - பெரிய சங்கை, தத்மௌ - ஊதினர். (அவ்வாறே) குந்தீபுத்ரஹ - குந்தியின் புதல்வனான, ராஜா - ராஜாவான; யுதிஷ்ட்ரஹ - தர்மராஜா, அனந்த விஜயம் - ஆனந்த விஜயம் எனும் சங்கை; நகுலஹ - நகுலனும் சஹாதேவஸ்ச - சகாதேவனும், சுகோஷ மணி புஷ்பகௌ - சுகோஷத்தையும், மணிபுஷ்பகத்தையும் தத்மதுஹு - ஊதினார்கள். (அதேவிதமாக) பரமேஷ்வாஸஹ - சிறந்த வில்லையுடைய, காச்யஹ்ச - காசிராஜாவும், மஹாரதஹ - மகாரதனான சிகண்டி - சிகண்டியும், த்ருஷ்டத்யும்னன்ஹ - திருஷ்டத்யும்னனும், விராடஸ்ச - விராட தேசத்தரசனும், அபராஜிதஹ - தோல்வியைக் கண்டிராதவனும், வெல்லப்படாதவனும் சாத்யகிஸ்ச - சாத்யகியும் ; த்ருபத ஹ - த்ருபதனும், த்ரௌபதேயாஸ்ச திரௌபதியின் குமாரர்களான உபபாண்டவர்களும் மஹாபாஹுஹு - பெருந்தோளுடைய, சௌபத்ரஸ்ச - அபிமன்யுவும், ஸர்வசஹ - சேனைகள் அனைவரும் ப்ருதக் ப்ருதக் - தனித்தனியே, சங்கான் - தத்தம் சங்கங்களை, தத்முஹு - ஊதினார்கள்.

**கருத்துரை:**

கிருஷ்ணர் பாஞ்ச சன்யத்தை ஊதினார். அர்ஜுனன் தேவதத்தத்தை ஊதினார். பயங்கரமான காரியங்களை செய்யக் கூடிய பீமன் பௌண்ட்ரம் எனப்படும் மிகப் பெரிய சங்கை ஊதினார். தர்மராஜன் அனந்த விஜயத்தை, நகுலன் சுகோஷத்தை, சகாதேவன் மணிபுஷ்பத்தை ஊதினார்கள். அவ்வாறே சிறந்த வில்லையுடையவனான காசிராஜன், மஹாரதன் ஆன சிகண்டி, திருஷ்டத்யும்னன், விராட தேசத்தரசன், தோல்வியையே அடையாத சாத்யகிதுருபதன், திரௌபதி புத்திரர்களாகிய உப பாண்டவர்கள், பெருந்தோளுடைய அபிமன்யு, சேனையில் அனைவரும் வெவ்வேறாக தத்தம் சங்குகளை ஒலித்தனர்.

**விளக்கவுரை:**

கிருஷ்ணன் முதலியவர்கள் ஊதிய பாஞ்சஜன்யம் முதலான சங்குகள் சாமான்யமானவையல்ல, தெய்வீகமானவை என்று இதற்கு முன்பே சொல்லப்பட்ட.

**பாஞ்சஜன்யம்:**

பஞ்சஜனன் என்ற இராட்சஸனின் எலும்புகளால் ஏற்பட்டதாகையால் ஸ்ரீ கிருஷ்ணரின் சங்கிற்கு பாஞ்சஜன்யம் என்று பெயர். ஹ்ருஷீகேசன் - ஹ்ருஷீகம் என்றால் இந்திரியங்கள். ஈசன் என்றால் அதிபதி இந்திரியங்களுக்கு அதிபதியாய், ஸர்வ சாட்சியான பரமாத்மா என்பது பொருள். ஆனந்தத்திற்கு நிலையமானவன் என்ற மற்றொரு பொருளும் உண்டு.

''தனஞ்ஜயஹ'' - ராஜசூய யாகத்திற்காக பல அரசர்களிடமும் செல்வத்தை சம்பாதித்துக் கொணர்ந்ததால், அல்லது தனத்தைப் பற்றிய - செல்வத்தைப் பற்றிய ஆசையை வென்றவன் ஆதலால் அர்ஜுனனுக்குத் தனஞ்ஜயன் என்ற பெயர் ஏற்பட்டது.

வ்ருகோதரஹ - வ்ருகம் என்றால் ஓநாய். அதனைப் போன்ற வயிற்றை உடையவன் ஆதலால், அல்லது

அனைத்தையும் ஜீரணிக்கக்கூடிய ஜாடராக்னியை உடைய வயிற்றைக் கொண்டவன் ஆதலால் விருகோதரன் என்ற பெயர் ஏற்பட்டது.

**முன்னுரை:**

அடுத்து பாண்டவ பக்கமுள்ள வீரர்களின் சங்கநாதங்களால் ஏற்பட்ட பலனை விவரிக்கிறார்.

**19. ஸகோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத்।**
**நபஸ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யனுநாதயன்॥ (19)**

**சொற்பொருள்:**

துமுலஹ - எங்கும் பரவிய, ஸகோஷஹ - அப்பெரு முழக்கம்; நபஸ்ச - ஆகாயத்தை, ப்ருதிவீம்சைவ - பூமியை; வ்யனுநாதயன் - சேர்ந்தொலிக்கச் செய்வதாய், தார்த்தராஷ்ட்ராணாம் - துரியோதனாதிகளின்; ஹ்ருதயானி - இதயத்தை, வ்யதாரயத் - கிழித்தது.

**கருத்துரை:**

பாண்டவ வீரர்களின் சங்கங்களின் பெருமுழக்கம் பூமியையும் ஆகாசத்தையும் நடுங்கச் செய்து துரியோதனாதிகளின் இதயத்தைப் பிளந்தது.

**விளக்கம்:**

ஶ்ரீ கிருஷ்ணர் முதலானோரின் சங்கநாதத்தின் ஒலி துர்யோதனன் முதலானோரின் இதயத்தை தைத்தது என்பதால் அப்போதே அவர்களது பாதி உயிர் போய்விட்டது என்றும், உற்சாகமிழந்தனர் என்பதும் தெரிகிறது.

**முன்னுரை:**

முதலில் அர்ஜுனன் மிகுந்த உற்சாகத்தோடு ஶ்ரீகிருஷ்ணரிடம் சொன்னவற்றை சஞ்சயன் அடுத்த (நான்கு சுலோகங்களில்) தெரிவிக்கிறார்.

**20 அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்தாஷ்ட்ரான் கபித்வஜஹ|
ப்ரவ்ருத்தே சஸ்த்ரஸம்பாதே தனுருத்யம்ய பாண்டவஹ||
ஹ்ருஷீகேசம் ததா வாக்ய மிதாமாஹ மஹீபதே| (20)**

**சொற்பொருள்:**

*மஹீபதே - திருதராஷ்டிரனே! அத - அதன்பிறகு, சஸ்த்ர சம்பாதே - ஆயுதப் பிரயோகம்; ப்ரவர்த்தே - (சதி) - ஆரம்பிக்க இருக்கையில்; கபித்வஜஹ - அனுமாரின் கொடியையுடைய, பாண்டவஹ - அர்ஜுனன். வ்யவஸ்திதான் - போர்துவங்கத் தயாராயுள்ள; தார்த்தராஷ்ட்ரான் - கௌரவர்களையும் த்ருஷ்ட்வா - பார்த்து, தனுஹு - வில்லை உத்யம்ய - கையில் ஏந்தியததா - அச்சமயத்தில் ஹ்ருஷீகேசம் - ஸ்ரீ கிருஷ்ணரை நோக்கி இதம் - இந்த, வாக்யம் - சொல்லை ஆஹ - உரைத்தான்.*

**கருத்துரை:**

*திருதராஷ்டிர மகாராஜாவே! அதன்பிறகு போர்க்களத்தில் ஆயுதங்களை பிரயோகிக்க ஆரம்பிக்க இருக்கையில், குரங்குக் கொடியுடையோனாகிய அர்ஜுனன், போர்துவக்கத் தலைப்பட்டிருந்த கௌரவர்களைப் பார்த்து, வில்லைக் கையிலேந்தி ஸ்ரீ கிருஷ்ணரிடம் இவ்வாறு கூறினார்.*

**விளக்கவுரை:**

*'கபித்வஜன்' - அர்ஜுனனின் ரதத்தின் கொடியின் மேல் அனுமன் இருப்பதால் அர்ஜுனனுக்கு கபித்வஜன் என்ற பெயர் ஏற்பட்டது. பீமனின் பிரார்த்தனைக்கு இணங்கி ஆஞ்சநேயர் யுத்தத்தில் பாண்டவர்கள் வெற்றி காண்பதற்காக அர்ஜுனனின் ரதத்தின் மேல் தான் அமர்ந்திருப்பதாக வரமளித்தார். (பாரதம் - ஆரண்யகாண்டம் 1512)*

**அர்ஜுனஉவாச:-**

**21 ஸேனயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மேஅச்யுத|| (21)**

**22. யாவதேதாந்நிரீக்ஷே அஹம் யோத்துகாமான வஸ்திதான்।**
**கைர்மயா ஸஹயோத்தவ்ய மஸ்மின் ஏண ஸமுத்யமே॥ (22)**

*அர்ஜுனன் சொன்னது:-*

**சொற்பொருள்:**

அச்யுத - ஓ கிருஷ்ணா! அஸ்மின் - இந்த; ரணஸமுத்யமே - போரின் துவக்கத்தில்; மயா - என்னால்; கைஸ்ஸஹ - எவருடன்; யோத்தவ்யம் - யுத்தம் செய்ய வேண்டுமோ, யோத்து காமான் - யுத்தம் செய்ய விரும்பி, அவஸ்திதான் - (இங்கு) நிற்பவர்களை, ஏதான் - (அத்தகைய) இவர்களை, யாவத் - இப்போது, அஹம் - நான், நிரீக்ஷே - காண்கிறேனோ, (தாவத் - அப்போது), உபயோஹ்ஸேனயோர் - இரண்டு சேனைகளினுடைய, மத்யே - இடையில், மே - எனது; ரதம் - ரதத்தை; ஸ்தாபய - நிறுத்து.

**கருத்துரை:**

அச்யுதனே! இந்த யுத்த ஆரம்பத்தில் நான் எவருடன் போர் புரிய வேண்டுமோ, போரை விரும்பி எவர் முன்னிற்கிறார் என்பதையும், நான் எங்கிருந்தால் நான் சரியாகப்பார்க்க முடியுமோ அங்ஙனம் இருபடைகளுக்கு இடையில் என் தேரை நிறுத்துக!

**விளக்கவுரை:**

எதிரிகளின் மீது மோதுவதற்கு முன்பாக, எதிரிகள் பக்கம் எவ்வளவு பேர் இருக்கின்றனர், எவரெவர் இருக்கின்றனர், எவ்வாறு நிற்கின்றனர் என்பதனைத்தையும் கவனித்தல் நல்ல போர்வீரனின் கடமை. எனவே தான் அர்ஜுனன் அவர்களை நன்றாகக் கவனித்தற்கு ரதத்தை இரு படைகளுக்கிடையில் நடத்துமாறு ஸ்ரீ கிருஷ்ணருக்குச் சொன்னான். 'அச்யுதா' - 'ச்யுத' - அழிவில்லாதவன் அச்யுதன் அல்லது தன் நிலையினின்றும் மாறாதவன் - என்று பொருள், அல்லது தன்னை அண்டியவர்க்கு சம்சாரக் கடலில் ஆழ்ந்துவிடாமல் பார்த்துக் கொள்பவன் எனவும் சொல்லக்கூடும். தத்தம்

ஆன்மீக சாதனையில் அழிவு (குறை) ஏற்படா வண்ணம் இருப்பவர் மாத்திரமே அச்யுதனைச் சேரவல்லவர். எனவே அச்யுதனை சேரவிரும்புவோர் தம் சாதனைகளில் எத்தகைய குறையும் நேராத வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

**23. யோத்ஸ்யமானானவேக்ஷே அஹம் ய ஏதே ஸமாகதாஹ|**
**தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர்யுத்தே ப்ரயசிகீர்ஷவஹ|| (23)**

**சொற்பொருள்:**

துர்புத்தேஹே - துஷ்டபுத்தியையுடைய தார்தராஷ்ட்ரஸ்ய - துரியோதனனுக்கு, யுத்தே - யுத்தத்தில்; ப்ரியசிகீர்ஷவஹ - அன்பு செய்ய விருப்பம் உடையவர்களாய்; ய ஏதே - எந்த வீரன், அத்ர - இவ்விடத்து; சமாகதாஹா - கூடியிருக்கிறார்களோ, (தான் - அவர்கள்) யோத்ஸ்யமானான் - யுத்தம் செய்யப் போகிறவர்களை; அஹம் - நான்; அவேக்ஷே - பார்க்கிறேன்.

**கருத்துரை:**

துஷ்ட புத்தியுடைய துரியோதனனுக்கு தன் பிரியத்தைக் காட்டும் வகையில் இங்கு யுத்தம் செய்யக் கூடியிருப்பவர்களை நான் காண வேண்டும்.

**விளக்கவுரை:**

'துர்புத்தேஹே' - துரியோதனன் பாண்டவர்களுக்கு இதுவரை எத்துணையோ இன்னல்களைச் செய்துள்ளான். கடைசியில் நியாயமாக அவர்களுக்குச் சேரவேண்டிய இராஜ்யத்தைகூட தான் எடுத்துக் கொண்டு பலவித இன்னல்களையும் செய்தான். இதனை மன்தில் நினைத்தே அர்ஜுனன் அவனை துர்புத்தி என்று பெயரிடுகிறான். 'புத்திநாசாத் விநசயதி' - புத்தி கெட்டால் மனிதன் நாசமடைவான் என்று கீதையில் பகவான் தெரிவித்துள்ளார். இதை வைத்தே துரியோதனனுக்கு முன்பே நடக்கவிருக்கும் அழிவை 'துர்புத்தி' எனும் சொல்லால் குறிப்பாகக் காட்டுகின்றார் எனலாம். மற்றும் எவரெவர் புத்தி தூய்மையின்றி கெட்ட குணங்களுடன் இருக்குமோ, அவரது

வாழ்க்கையில் துரியோதனின் வாழ்க்கையைப் போன்று, தோல்வி, விநாசம் இவை தவறாது ஏற்படும். எனவே தூயபுத்தியைக் கொள்ள வேண்டுமே தவிர துர்புத்தியை அல்ல. "ப்ரியசிகீர்ஷவஹ" - துஷ்ட நடவடிக்கையுடைய துரியோதனனுக்குப் பிரியமானதை செய்ய எண்ணியவர் களனைவரும் யுத்தத்தில் சேர்ந்தனர். பாவத்தைத் தூண்டுவதுகூட மகாபாவம். எனவே துர்யோதனன் போன்ற துர்புத்தியைக் கொண்டிருத்தலேயன்றி, அப்புத்தியுடை வர்களுக்குத் துணை போதலும் தகாது.

**முன்னுரை:**

அர்ஜுனனின் இவ்வாக்கியங்களைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ணர் என்ன செய்தார் என்பது தெரிவிக்கப்படுகிறது.

**ஸஞ்சய உவாச:**

**24. ஏவமுக்தோ ஹ்ருஷீகேசோ குடாகேசேன பாரத|**
**ஸேனயோருபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம்|| (24)**

**25. பீஷ்மத்ரோணப்ரமுகதஹ ஸர்வேஷாம்ச மஹீக்ஷிதாம்|**
**உவாச பார்த்த பச்யைதான் ஸமவேதான் குரூனிதி|| (25)**

*ஸஞ்சயன் சொன்னது:*

**சொற்பொருள்:**

பாரத - பரதவம்சத்தில் பிறந்த ஓ திருதராஷ்டிர மஹாராஜா! - ஏவம் - இவ்வாறாக, குடாகேசேந - அர்ஜுனனால், உக்தஹ - சொல்லப்பட்ட, ஹ்ருஷீகேசஹ - ஸ்ரீ கிருஷ்ணர், உபயோஹோ ஸேனயோஹோ - இரண்டு சேனைகளினுடைய, மத்யே - இடையில்; பீஷ்மதுரோணா ப்ரமுகதஹ - பீஷ்மதுரோணர்களுக்கு எதிரிலும் ஸர்வேஷாம் மஹீக்ஷிதாம் ச - எல்லா அரசர்களுக்கு எதிராகவும், ரதோத்தமம் - சிறந்த ரதத்தினை; ஸ்தாபயித்வா - நிறுத்தி, பார்த்த - அர்ஜுனனே!, ஸமவேதான் - கூடியுள்ள, ஏதான் - இந்த, குரூன் - கௌரவர்களை, பச்ய - பார்; இதி - என்று உவாச - சொன்னார்.

**கருத்துரை:**

சஞ்சயன் இவ்வாறு கூறினார் - திருதராஷ்டிர மஹாராஜா! அர்ஜுனன் இவ்வாறு சொன்னவுடன் ஸ்ரீ கிருஷ்ணர் மிக உத்தமமான ரதத்தினை இரண்டு சேனைகளுக் கிடையில் பீஷ்மர் துரோணர்களுக்கும், ஏனைய அரசர்களுக்கும் எதிரில் நிறுத்தி, 'அர்ஜுனா! இங்கு கூடியுள்ள கௌரவர்களைப் பார்' என்று சொன்னார்.

**விளக்கவுரை:**

'குடாகேசஹ' - உறக்கத்தை வென்றவன், தமோகுணத்தை அறவே தொலைத்தவன். மிகவும் எச்சரிக்கையாயிருப்பவன் என்று பொருள். ஆன்மீக போதனையைக் கேட்பதற்கு, இடையில் தடங்கல்கள் இன்றி ஒருமுனைப்பாடு மிகவும் அவசியம். கீதா போதனையெனும் தெய்வீக வித்தையை கேட்பதற்கான அத்தகைய நற்குணங்கள் அர்ஜுனனிடம் உண்டு என்பதை 'குடாகேச' என்னும் சொல் காட்டுகிறது. "குரூன் - கௌரவர்களைப் பார்! என்று ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்குச் சொல்கிறார். கௌரவர்கள் அனைவரும் அர்ஜுனனுக்கு மிக நெருங்கிய உறவினர்களே. எனவே எந்த உறவினர்களைப் பார்த்து அர்ஜுனனின் சித்தம் கலங்கியதோ அத்தகையோருக்கு எதிராகவே பரமாத்மா ரதத்தை நிறுத்தினார். கீதா உபதேசத்திற்கான இடம் இங்கேயே தயாராகின்றது. ரதத்தை நிறுத்துவதன் மூலம் கீதாசாஸ்திரம் தோன்றுவதற்கு சரியான நிலையில் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனை நிலைநிறுத்தினார். கீதையின் தோற்றம் சர்வ ஜீவர்களின் மகாபாக்கியமல்லவா?

**முன்னுரை:**

ஸ்ரீ கிருஷ்ணரின் இவ்வாக்கியத்தைக் கேட்டு அர்ஜுனன் என்ன செய்தான் என்பதை ஸஞ்சயன் சொல்கிறான்.

**26. தத்ராபச்யத் ஸ்திதான் பார்த்தஹ் பித்ரூனத பிதாமஹான்।**
**ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான் பௌத்ரான்**
**ஸகீன்ஸ்ததா॥ (26)**

**27. ச்வசுரான் ஸுஹ்ருதஸ்சைவ ஸேனயோருபயோரபி॥ (27)**

**சொற்பொருள்:**

அத - பிறகு, பார்த்தஹ - அர்ஜுனன் தத்ர - அங்கே, உபயோஹ் சேனயோஹ் அபி - இரண்டு சேனைகளின் முன்பும் ஸ்திதான் - இருக்கின்ற, பித்ருன் - தகப்பன்மார்கள் - பிதாமஹான் - பாட்டன்மார்கள், ஆசார்யான் - குருமார்கள், மாதுலான் - மாமன்மார்கள், ப்ராத்ருன் - சகோதரர்கள், புத்ரான் - புத்திரர்கள். பௌத்ரான் - பேரன்மார்கள், ஸகீன் - தோழர்கள், ததா - அவ்வாறே, ச்வசுரான் - மாமனார்கள், சுஸ்ருதஸ்சைவ - நன்மையை நாடும் அன்பர்கள், அபச்யத் - பார்த்தான்.

**கருத்துரை:**

அர்ஜுனன் அங்கே இரண்டு சேனைகளிலும் நிற்கும் தந்தைமார், பாட்டான்மார், ஆசாரியார், மாமன்மார், சகோதரர்கள், புத்திரர்களையும், மாமானார்கள், நண்பர்கள், அன்பர்கள் அனைவரையும் பார்த்தான்.

**விளக்கவுரை:**

| | |
|---|---|
| தந்தையர் | - பூரிச்ரவஸ் முதலானோர். |
| பாட்டன்மர்ர் | - பீஷ்மர் " |
| குருமார் | - துரோணாச்சாரியர் " |
| மாமன்மார் | - சல்யன் " |
| அண்ணன்தம்பிமார் | - துரியோதனன் " |
| மகன்கள் | - துர்யோதனன் புத்திரர்களான லக்ஷ்மணன் முதலானோர். |
| பேரர்கள் | - லக்ஷ்ணபுத்ரன் முதலானோர் |
| நண்பர்கள் | - அசுவத்தாமா " |
| மாமனார்கள் | - த்ருபதன் " |
| அன்பர்கள் | - க்ருதவர்மா " |

'உபய சேனைகளினிடையில்' என்று சொல்வதால் தன் சேனைகளையும் அர்ஜுனன் பார்த்தான் என்றாகிறது.

**முன்னுரை:**

இவ்வாறாக இருபக்கத்திலும் சேனைகளையும் பார்த்து அர்ஜுனன் என்ன செய்தான் என்பதைக் கூறுகிறார்.

**27. தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேயஹ ஸர்வான்**
**பந்தூனவஸ்திதான்॥ (27)**

**28. க்ருபயா பரயா ஆவிஷ்டோ விஷீதன்னிதமப்ரவீத்॥ (28)**

**சொற்பொருள்:**

ஸ கௌன்தேயஹ - அர்ஜுனன், அவஸ்திதான் - (யுத்தத்திற்கு ஆயத்தமாக) நிற்கின்ற, தான் - அந்த, ஸர்வான் பந்தூன் - பந்துக்கள் அனைவரையும்; ஸமீக்ஷ்ய - உற்றுப் பார்த்தான், பரயா - ஆழ்ந்த(மிக்க), க்ருபயா - இரக்கத்தினால், ஆவிஷ்டஹ - நிரம்பப் பெற்றவனாய், விஷீதன் - துக்கித்து, இதம் - இனி சொல்லப்போகும் வாக்கியத்தை அப்ரவீத் - பகர்ந்தான்.

**கருத்துரை:**

அர்ஜுனன் யுத்த பூமியில் நின்றுள்ள தன் உற்றார் உறவினர்களை நன்றாக உற்றுப் பார்த்து, பேரிரக்கம் கொண்டவனாய், துக்கம் மேலிட்டு இவ்வாறுகூறினான்.

**விளக்கவுரை:**

'க்ருப' என்றால் தயை, கருணை, இரக்கம் என்று பொருள். அது சிறந்த நற்குணமே, ஆயின் அதை எங்கு காட்டவேண்டுமோ அங்கு காட்டினால் தான் அதற்கு மதிப்புண்டு. அதர்மத்தைக் கடைப்பிடித்த கௌரவர்களின் மீது அர்ஜுனன் இரக்கம் கொண்டான்.

'இவர்களனைவரும் என்னவர், என் சுற்றத்தார்' என்று எனது என்ற மமத்வ புத்தி அவனுக்குத் தோன்றியது. 'இவர்களை எவ்வாறு கொல்வேன்" என்று மனக் கலக்கம் ஏற்பட்டது. க்ஷத்திரியன் ஆன அர்ஜுனனுக்கு

போர்க்காலத்தில் இரக்கம் எனும் நற்குணம் பொருந்தவில்லை ஏனெனில், இரக்கத்தைக்காட்டக் கூடாதவர்களிடத்து காட்டுவதற்குக் கூடாத சமயத்தில் அர்ஜுனன் காட்டுவதற்குத் தொடங்கினான். இந்த தோஷத்தையே கீதாதத்வ போதனையால் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனின் இதயத்தினின்றும் விலக்கினார்.

"விஷீதன்" - 'துக்கம் மேலிட்டு' என்பதால், எத்தகைய தேக பலம், சக்தி, ஆற்றல் இவை இருந்தும் அவித்தை விலகினால் அன்றி மனிதன் ஒரு கணநேரத்திலேயே கலக்கமடைவான் என்பது இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது. அர்ஜுனன் மகாசக்திவான். மிகப் பெரிய தெய்வீகமான அஸ்திரசஸ்திரங்கள் உடையவன். எனினும் அஞ்ஞானம் தோன்றினால் சிறிய பிள்ளை போல் சக்தியற்று துக்கம் மேலீட்டால் வருந்தினான். எனவே ஆத்ம ஞானத்தால் அவித்தை முழுவதுமாக மறைந்த போதே ஜீவனுக்கு நிரதிசயானந்தம் துக்கமற்ற நிலை, சித்திக்கும். அர்ஜுனன் போன்றவர்களே அவித்தையால் பலமிழக்கையில் சாமான்யர்களின் விஷயம் எவ்வாறிருக்கும் என்பதை சொல்ல வேண்டுமா? எனவே ஆன்மிக வித்தையின் வழி மனதை வெற்றிகொண்டு, அதன்மூலம் மனசாந்தி அடைதல் ஒவ்வொரு ஜீவிக்கும் முதன்மையான கடமையாகும். அர்ஜுனனின் தீனமான நிலையைக்கண்டு இத்தகைய ஆத்மவித்தையையே ஸ்ரீ கிருஷ்ணர் அவருக்கு போதித்தார்.

**முன்னுரை:**

அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்விடம் தன் தீனமான நிலையை விண்ணப்பித்துக் கொள்கிறான்

**அர்ஜுன உவாச:**

**28. த்ருஷ்ட்வேமம் ஸ்வஜனம் கிருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம்। (28)**

**29. ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிசுஷ்யதி।**
**வேபதுஸ்ச சரீரே மே ரோமஹர்ஷஸ்ச ஜாயதே॥ (29)**

**30. காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே।**
**நச சக்னோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மனஹ॥ (30)**

**அர்ஜுன உவாச -**

*அர்ஜுனன் சொன்னது:*

**சொற்பொருள்:**

*க்ருஷ்ண - கிருஷ்ணா! யுயுத்ஸம் - யுத்தம் செய்தற் பொருட்டு, ஸமுபஸ்திதம் - சேர்ந்து கூடியுள்ள, இமம் - இந்த, ஸ்வஜனம் - உற்றாரை, திருஷ்ட்வா - பார்த்து, மம என்னுடைய, காத்ராணி - அவயவங்கள், ஸீதந்தி - சோர்வடைகின்றன, முகம்ச - வாயும், பரிசுஷ்யதி - வறண்டு போகின்றது. மே - எனது சரீரே - சரீரத்தில்,வேபதுஸ்ச - நடுக்கமும், ரோமஹர்ஷஸ்ச - மயிர்க்கூச்சமும், ஜாயதே - ஏற்படுகின்றது. காண்டீபம் - காண்டீவம் என்கின்ற என்னுடைய வில்; ஹஸ்தாத் - கையினின்றும், ஸ்ரம்ஸதே - நழுவுகிறது. த்வக்சஏவ - சருமமும் பரிதஹ்யதே - எரிகின்றது. அவஸ்தாதும் - நிற்பதற்கும், ந ச சக்னோமி - சக்தியற்றவனாய் இருக்கின்றேன். மே - எனது மனஹ - மனது ப்ரமதீவ ச - குழப்பமடைந்து 'கிர்ரென்று' சுற்றுகிறது.*

**கருத்துரை:**

*அர்ஜுனன் சொன்னான் - கிருஷ்ணா! யுத்தம் செய்வதற்கென இங்கு கூடியுள்ள இந்த சுற்றத்தாரைப் பார்த்து; என் அவயவங்கள் நடுங்குகின்றன. நா உலர்ந்து போகின்றது; சரீரம் நடுங்குகின்றது; மயிர் சிலிர்க்கின்றது; காண்டீவம் கை நழுவுகின்றது; சருமம் பற்றி எரிவது போல் இருக்கின்றது; நிற்பதற்கும் எனக்குச் சக்தியில்லை; மனது குழப்பமடைந்து கிர்ரென்று சுற்றுகிறது.*

**விளக்கவுரை:**

*இச்சுலோகத்தில் அர்ஜுனனுக்கு அந்த சமயத்தில் ஏற்பட்ட சரீர, மன விகாரங்கள் (மாற்றங்கள்) காட்டப் படுகின்றன. இவையனைத்தும் பயம், அதைரியம், உற்சாகமின்மை இவற்றிற்கான சின்னங்கள். போர்*

என்றாலோ, எதிரிகளை கொல்வதிலாகட்டும், பொருட்படுத்தாத அர்ஜுனன், எத்துணையோ போர்முனைகளில் வெற்றியடைந்துள்ள, அர்ஜுனன் இச் சமயத்தில் ஏன் உற்சாகமிழக்க வேண்டும்? அவனது சரீர பௌதிக சக்திக்கு எவ்விதமான குறையுமில்லை. ஆயின் மனதால் அவன் பெரிதும் பாதிக்கப்பட்டான். எதனால்? 'இவர்கள் என்னவர்' (ஸ்வஜனம்), இவர்களை எவ்வாறு கொல்வேன்? . . . என்று மனதில் எண்ணியதால். இதுவே மமகாரம் என்பது. இந்த மமகாரம் அர்ஜுனனை பீடித்ததால் தான் 'ஸ்வஜனம்' 'ஸ்வஜனம்' என்று பலமுறை சொல்லி கலவரமடைந்தான். 'த்ருஷ்டவேமம் ஸ்வஜனம் கிருஷ்ண; ஹத்வாஸ் வஜன மாஹவே; ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா . . . . " இந்த மமகாரமே அர்ஜுனனுக்கு பிடித்த வியாதி. அதற்கு ஆத்ம ஞானமே சரியான மருந்து. அதனையே ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு இப்போது கொடுக்கப் போகிறார்.

**முன்னுரை:**

யுத்தத்தை நிறுத்துவதற்கான தன் காரணத்தை ஸ்ரீ கிருஷ்ணருக்கு அர்ஜுனன் சொல்கிறார்.

**31. நிமித்தானி ச பச்யாமி விபரீதானி கேசவ|**
**நச ச்ரேயஹ அனுபச்யாமி ஹத்வா ஸ்வஜனமாஹவே|| (31)**

**சொற்பொருள்:**

கேசவ! - கேசவா! விபரீதானி - விபரீதமான, நிமித்தானிச - சகுனங்களைகூட, பச்யாமி - பார்க்கிறேன். ஆஹவே - யுத்தத்தில், ஸ்வஜனம் - சுற்றத்தார், ஹத்வா - கொன்று, அனு - அதன் பின், ச்ரேயஹ - எந்த நன்மையையும், ந பச்யாமி - காண்கின்றேனில்லை.

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! நிறைய அபசகுனங்களைப் பார்க்கிறேன். யுத்தத்தில் சுற்றத்தாரை கொன்று பின் நான் அடையக்கூடிய லாபம் (நன்மை) எதுவும் என் கண்ணுக்குப் புலப்படவில்லை.

**32. ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானிச।
கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா॥ (32)**

**சொற்பொருள்:**

*ஏ கிருஷ்ணா! விஜயம் - வெற்றியை ந காங்க்ஷே - கோரமாட்டேன், ராஜ்யம்ச - ராஜ்யத்தையும், சுகானிச - சுகத்தையும், ந காங்க்ஷே - கோரமாட்டேன்; கோவிந்த - ஓ கிருஷ்ணா, நஹ - நமக்கு, ராஜ்யேன - ராஜ்யத்தினால், கிம் - ஆவதென்ன? (என்ன பலன்)? போகைஹி - போகங்களால், ஜீவிதேனவா - இல்லை, வாழ்வதிலாவது, கிம் - ஆவதென்ன? (என்ன பலன்?)*

**கருத்துரை:**

*கிருஷ்ணா! நான் வெற்றியையோ, ராஜ்யத்தையோ, சுகங்களையோ, விரும்பமாட்டேன். ராஜ்யத்தினாலோ, போகத்தினாலோ, வாழ்க்கையினாலோ நமக்கென்ன பலன்?*

**விளக்கவுரை:**

*வைராக்கியம் உடையவர்க்கே ஆத்மஞானம் (பிரம்ம ஞானம்) போதிக்கப்படவேண்டும் என்பது சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட நியமம் உள்ளது. அப்படியாயின் ஆத்மஞானத்திற்கு, கீதா சாஸ்திரத்தைக் கேட்பதற்கு, அர்ஜுனனுக்கு அத்தகைய வைராக்கியம் உள்ளதா? அவன் ஞானத்திற்கு அதிகாரியா? என்ற ஐயம் இச் சுலோகத்தினால் தீர்க்கப்படுகின்றது. ஏதோ ஒரு விதமாக, அர்ஜுனனுக்குத் தீவிரமான விரக்தி ஏற்பட்டது. உலக சுகங்களில், வெறுப்பு ஏற்பட்டது. ராஜ்யத்தை, போகங்களை, அவன் துச்சமாக மதித்தான். மூவுலகங்களையும் தனக்கு சமர்பிக்கப்பட்டாலும் எனக்குத் தேவையில்லை, "அபி த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோஹ்கிம் ந மஹீக்ருதே" - (1-35) என்ற நிர்ணயத்திற்கு வந்து விட்டான். இத்தகைய தீவிரமான வைராக்யம் ஏற்பட்ட காலேமே பிரம்ம வித்யா போதனைக்கு தக்க சுபவேளை. எனவேதான் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு இதுவரை எக்காலத்தும் போதிக்காது, வைராக்யம், போகங்களை ஒதுக்குதல், இதயத்தில் நன்றாக வேரூன்றிய அந்த யுத்த*

சமயத்திலேயே அவர் பரமார்த்த தத்துவத்தைப் போதித்தார்.

**33. யேஷாமர்த்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகாஹ் ஸுகானிச|**
**தஇமே அவஸ்திதா யுத்தே ப்ராணான்ம் த்யக்த்வா**
**தனானிச|| (33)**

**34. ஆசார்யஹ் பிதரஹ் புத்ராஸ்ததைவ ச பிதாமஹாஹா|**
**மாதுலாஹ் ச்வசுராஹ் பௌத்ரா ஸ்யாலா ஸம்பந்தினஸ்ததா||**
**(34)**

**சொற்பொருள்:**

நஹ - நமக்கு, ராஜ்யம் - ராஜ்யமும், போகாஹா - போகமும், சுகானிச - சுகங்களும், யேஷாமர்த்தே - எவருக்காக? காங்க்ஷிதம் - விரும்பப்பட்டதோ, தே - அத்தகைய, ஆசார்யாஹா - ஆசார்யார்கள், பிதரஹ - தந்தையர், புத்ராஹா - மக்கள், ததைவச - அவ்வாறே பிதாமஹாஹா - பாட்டான்மார், மாதுலாஹா - மாமன்மார்கள், ச்வசுராஹா - மாமனார்கள், பௌத்ராஹா - பேரன்மார்கள், ச்யாலாஹா - மைத்துனர்கள், ததா - அவ்விதமாகவே சம்பந்தினஹா - சம்பந்தம் ஏற்பட்டவர்கள், இமே - இவர்கள் எல்லோரது, ப்ராணான் - பிராணன்களையும், தனானிச - தனங்களையும், த்யக்த்வா - துறந்துவிட்டு, யுத்தே - யுத்தத்தில் அவஸ்த்தா - நிற்கிறார்கள்.

**கருத்துரை:**

எவர் பொருட்டு, இந்த ராஜ்யம், போகங்கள், சுகங்களையும் நாம் விரும்புகிறோமோ, அத்தகைய ஆசாரியர், தந்தையர், மக்கள், பாட்டன்மார், மாமன்மார், மாமனார்மார், பேரர், மைத்துனர், சம்பந்திகள் முதலானோர் பிராணங்களின் மீதும் செல்வத்தின் மீதுமுள்ள ஆசைகளைத் துறந்துவிட்டு, இப்போர்க்களத்தில் வந்து நிற்கிறார்கள்.

**35. ஏதான்ன ஹந்துமிச்சாமி க்னதோஅபி மதுஸூதன|**
**அபித்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோரஹோ கிம்நு மஹீக்ருதே||**
**(35)**

**சொற்பொருள்:**

மதுசூதன! - கிருஷ்ணா! க்னதஹ அபி - நான் கொல்லப்பட்டாலும் ஏதான் - இவர்களை, த்ரைலோக்ய ராஜ்யஸ்ய ஹேதோஹோ - மூன்று லோகங்களின் ராஜ்யாதிபத்யத்தின் பொருட்டாயினும், ஹந்தும் - கொல்ல, நேச்சாமி - விரும்பமாட்டேன், மஹீக்ருதே - பூலோக ராஜ்யத்திற்காக, கிம் நு - இனி சொல்வதற்கு என்ன இருக்கிறது?

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! என்னைக் கொன்றாலும், மூன்று உலகங்களின் இராஜ்ய அதிகாரம் அளித்தாலும் இவர்களைக் கொல்ல விரும்பமாட்டேன். இனி பூலோக ராஜ்யத்திற்காக வேறாகச் சொல்ல இனி என்ன இருக்கிறது.

**விளக்கவுரை:**

“மதுசூதனஹ” மது என்ற அரக்கனை கொன்றதால் ஸ்ரீ கிருஷ்ணருக்கு மதுசூதனன் என்ற பெயர் வந்தது.

**36. நிஹத்ய தார்தராஷ்ட்ராந்நஹ கா ப்ரீதிஹ் ஸ்யாஜ்ஜநார்தன।**
**பாபமேவாச்ரயேதஸ்மான் ஹத்வைதானாததாயினஹ॥ (36)**

**சொற்பொருள்:**

ஜனார்தன - ஏ கிருஷ்ணா! தார்தராஷ்ட்ரான் - துரியோதனாதியர், நிஹத்ய - கொன்று, நஹ - நமக்கு, காஹப்ரீதி - என்ன இன்பம், ஸ்யாத் - இருக்கப்போகிறது. ஆததாயிநஹ - (துர்மார்கள்) - கெட்டவர்களான ஏதான் - இவர்களை, ஹத்வா - கொன்றாலும், அஸ்மான் - நம்மை பாபமேவ - பாவமே ஆஸ்ரயேத் - வந்தடையும்.

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! துரியோதனாதியரைக் கொல்வதால் நமக்கு என்ன இன்பம் வரப் போகிறது? கெட்டவர்களாயினும் இவர்களைக் கொல்வதால் நமக்கு பாவமே வந்து சூழும்.

**விளக்கம்:**

*'ஆததாயினஹ' - மகா பாவங்களைச் செய்பவர் - அவர்கள். (1) ஒருவன் குடியிருக்கும் வீட்டில் தீ வைத்தல் (2) விஷம் வைப்பவன் (3) ஆயுதங்களோடு ஒருவனை இம்சிப்பவன். (4) ஒருவனுடைய செல்வத்தைத் திருடுதல். (5) பூமியை ஆக்ரமிப்பவன் (6) மாற்றான் மனைவியை அபகரிப்பவன் ஆகிய அறுவரு 'ஆததாயி' எனப்படுவர்.*

**அக்னிதோ கரதன்ஸச்வ சஸ்திராபாணிர்தநாபஹி**
**க்ஷேத்ரதாராபஹர்த்தா ச ஷடேதே ஹ்யாததாயினஹ**
**(வசிஷ்டஸ்மிருதி 3-16)**

*துர்யோதனன் இந்த ஆறுவித பாவங்களையும் செய்தவனே.*

**37. தஸ்மான்நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான்।**
**ஸ்வஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகினஹ் ஸ்யாம மாதவ॥(37)**

**சொற்பொருள்:**

*மாதவ - ஏ கிருஷ்ணா! தஸ்மாத் - ஆகையினால், ஸ்வபாந்தவான் - நம் சுற்றத்தாராகிய, தார்த்தராஷ்ட்ரான் - துரியோதனாதியரை, ஹந்தும் - கொல்ல, வயம் - நாம், நார்ஹாஹா - தகுந்தவரல்லர்; ஸ்வஜனம் - நம்மவரைக், ஹத்வா - கொன்று, ஸுகினஹ் - சுகத்தையுடையவர், கதம் - எவ்வாறு, ஸ்யாமஹி - ஆவோம்?*

**விளக்கவுரை:**

*ஏ கிருஷ்ணா! எனவே நம் சுற்றத்தாரான துரியோதனாதியரை கொல்வது நமக்குத் தகுந்ததல்ல. நம்மவரைக் கொன்று நாம் இன்புற்றிருத்தல் எங்ஙனம்?*

**விளக்கவுரை:**

'ஸ்வ' 'ஸ்வ' என்று அர்ஜுனன் கவலைப்படுகிறான் (ஸ்வபாந்தவான், ஸ்வஜனம்) 'எனது' என்ற மமகார எண்ணம் அவனுக்கு நன்றாக ஊன்றிவிட்டது 'நான்' 'எனது' (அகங்கார, மமகாரம்) என்ற இரண்டும் ஜீவனை மோக்ஷ மார்க்கத்திற்குச் செல்லவிடாது கட்டுப்படுத்துபவை. 'இந்த தேகமே நான்' என்று நாம் நினைக்கும் வரையில் இத்தகைய எண்ணம் மக்களுக்கு தோன்றிக்கொண்டே தான் இருக்கும். எனவேதான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை இந்த தேகாபிமானத்திற்கு 'நீ ஆத்மாவேயன்றி தேகமல்ல' என்று விரிந்த ஞானோபதேசம் மூலம் விளக்குகிறார்.

**38. யத்யப்யேதே ந பச்யந்தி லோபோபஹததசேதஸஹ|**
**குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம்|| (38)**

**39. கதம் ந ஜ்யேமஸ்மாபிஹ் பாபாதஸ்மாந் நிவர்திதும்|**
**குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபச்யத்பிர் ஜநார்தன|| (39)**

**சொற்பொருள்:**

ஜனார்த்தன - ஏ கிருஷ்ணா! லோபோபஹத சேதஸஹ - மிக்க பேராசையால் கெட்ட மனத்தையுடைய, ஏதே - இந்த துரியோதனாதியர், குலக்ஷயக்ருதம் - குலநாசத்தால் உண்டாகும், தோஷம் - தோஷத்தை, மித்ரதுரோகி - மித்ர துரோகத்தால், பாதகம்ச - பாவத்தினால், யத்யபிந பச்யந்தி - அறிந்து கொள்ளாவிடினும், அஸ்மாபிஹி - நம்மால், அஸ்மாத் பாபாத் - இந்த பாவத்தினின்றும், நிவர்த்திதும் - தவிர்க்க கதம் - எவ்வாறு, நஜ்ஞேயம் - தெரிந்து கொள்ளலாகாது?

**கருத்துரை:**

ஓ கிருஷ்ணா! மிக்கப் பேராசையால் கெட்ட எண்ணம் கொண்ட துரியோதனாதியர் குல நாசத்தை உண்டாக்குவதால் ஏற்படும் தோஷத்தை, மித்ர துரோகத்தால் விளையக் கூடிய

பாவத்தை அவர்கள் நினைக்காவிடினும், அவற்றைப்பற்றி நன்றாகத் தெரிந்த நாம் இந்த பாவத்தினின்றும் நாம் ஏன் விலகிக் கொள்ளக் கூடாது என்பது எனக்குப் புரியவில்லை.

**விளக்கவுரை:**

'லோபோபஹதசேதஸஹ' - பேராசையால் பீடிக்கப்பட்ட சித்தமுள்ளவன். (துரியோதனாதியர்) காமம், குரோதம், லோபம், என்ற தீய குணங்கள் மூன்றிலும், லோபம் ஒன்று. இவை மூன்றும் நரகத்தின் வாயிலாக பின்பு கிருஷ்ண பகவான் வர்ணிக்கின்றார்.

**(த்ரிவிதம் நரகஸ்யெதம் த்வாரம் நாசனமாத்மனஹ|**
**காமக்ரோதஸ்த்ததா லோபஸ் தஸ்மாதேதத்தரயம் த்யஜேத்)**
**(16-21)**

இந்த துர்க்குணங்கள் சித்தத்தில் அழுக்கை ஏற்படுத்துகிறது. லோபம முதலானவற்றை கொண்டதால் துர்யோதனாதியர் மனம் நன்றாக கெட்டுவிட்டது. எனவே தான் 'லோபோபஹதசேதஸஹ' என அழைக்கப்பட்டனர். எனவே நன்மையை விரும்புவோர், இத்துர்க்குணங்களை நம்மிடையே சேர்த்துக் கொள்ளுதல் ஆகாது.

**முன்னுரை:**

அர்ஜுனன் தன் வாதத்தை நிலைநாட்டுகிறான்.

**40. குலக்ஷயே ப்ரணச்யந்தி குலதர்மாஹ் ஸநாதநாஹா|**
**தர்மே நஷ்டேகுலம் க்ருத்ஸ்னமதர்மோ அபிபவத்யுத|| (40)**

**41. அதர்மாபிபவாத்க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குலஸ்த்ரியஹ|**
**ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸங்கரஹ||**
**(41)**

**42. ஸங்கரோ நரகாயைவ குலக்நானாம் குலஸ்ய ச|**
**பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்த பிண்டோதகக்ரியாஹா|| (42)**

**சொற்பொருள்:**

குலக்ஷயே - குலம் அழிந்தால், ஸநாதனஹ - அநாதியாக (வம்ச வம்சமாக) வந்து கொண்டிருக்கும் குலதர்மாஹா - குலதர்மம், ப்ரணஸ்யந்தி - அழிந்து போகின்றன, தர்மே நஷ்டே - தர்மம் அழிந்தால், க்ருத்ஸ்னம் - முழுவதுமாக, குலம் - குலத்தை. அதர்மஹ - அதர்மம், அபிபவத் உத - சூழ்ந்து கொள்கிறதல்லவா! கிருஷ்ணா - ஏ கிருஷ்ணா!, அதர்மாபிபவாத் - அதர்மம் மிகுதலால், குலஸ்த்ரியஹ - குலஸ்திரீகள் ப்ரதுஷ்யந்தி - கற்பிழப்பார்கள். வார்ஷ்னேய - வ்ருஷ்ணி குலத்துதித்தவரே, ஸ்த்ரீஷு துஷ்டாஸு - ஸ்திரீகள் கற்பிழப்பதால் வர்ணஸங்கரஹ - வர்ணக் கலப்பு ஜாயதே - உண்டாகிறது, குலக்நானாம் - குலநாசம் செய்தவர்களுக்கும், குலஸ்யச - குலத்திற்கு நரகாயைவ - நரகமே ஏற்படுகிறது ஏஷாம் - அவர்களுடைய, பிதரஹ - பித்ருதேவர்கள் லுப்த பின்டோதக க்ரியாஹா - பிண்டம், நீர்கிரியைகளை (சிரார்த்தம், தர்ப்பணங்கள்) இழந்து, பதந்தி - வீழ்கிறார்கள்.

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! குலம் நாசம் அடைவதால் என்று மிருப்பவையான குலதர்மங்கள் அழிகின்றன. தர்மம் அழிவதால் குலம் முழுவதையும் அதர்மம் சூழ்கிறது. அதர்மம் மிகுதலால் குலப் பெண்கள் மிகவும் கெட்டுப்போகிறார்கள், ஸ்த்ரீகள் கெட்டுப் போவதால் வர்ணக் கலப்பு ஏற்படுகிறது. வர்ணக் கலப்பினால், கெட்ட குடும்பங்களின் குலம் கூட நரகத்தையே அடைகின்றது. அவர்களது பித்ரு தேவதைகள் சிரார்த்தம், தர்ப்பணம் இன்றி அதோகதியை அடைகிறார்கள்.

**43. தோஷைரேதைஹி குலக்நானாம் வர்ணசங்கரகாரகைஹி।**
**உத்ஸாத்யந்தே ஜாதிதர்மாஹா குலதர்மாஸ்ச சாச்வதாஹா॥**
**(43)**

**44. உத்ஸன்னகுலதர்மாணாம் மனுஷ்யாணாம் ஜனார்தன।**
**நரகே நியதம் வாஸோ பவதீத்யனுசுச்ரும॥ (44)**

**சொற்பொருள்:**

குலக்நானாம் - குல நாசம் செய்பவர்களுடைய, வர்ண சங்கரகாரகைஹி - வர்ணக் கலப்பையுண்டு பண்ணும், ஏதைஹி - இந்த, தோஷைஹி - தோஷத்தினால், சாச்வதாஹி - நிரந்தரமாயுள்ள; ஜாதிதர்மஹி - ஜாதி தர்மங்களும், குல தர்மாஸ்ச - குலதர்மங்களும், உத்ஸாத்யந்தே - அழிக்கப்படுகின்றன, ஜனார்த்தன - ஏ கிருஷ்ணா! உத்ஸன்ன குல தர்மாணாம் - குல தர்மத்தையிழந்த; மனுஷ்யானாம் - மனிதர்களுக்கு, நரகே - நரகத்தில்; நியதம் - எப்போதும், வாஸஹ - வசித்தல், பவதி - ஏற்படுகின்றது. இதி - என்று, அனுசுஸ்ரும - (பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கின்றோம்)

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! குலநாசகர்களுடைய வர்ணக்கலப்பிற்குக் காரணமான இந்த தோஷங்களினால் ஜாதி தர்மம், குலதர்மம், நசித்துப் போகிறது. குலதர்மம் அழிந்த மனிதர்களுக்கு சாசுவதமாக நரகத்தில் வசிக்க நேர்கிறது என்பதை நாம் கேட்டிருக்கிறோம்.

**45. அஹோ பத மஹத்பாபம் கர்தும் வ்யவஸிதா வயம்|**
**யத்ராஜ்யஸுகலோபேன ஹந்தும் ஸ்வஜனமுத்யதாஹா|| (45)**

**சொற்பொருள்:**

அஹோ! - என்ன ஆச்சரியம்! பத - அந்தோ! யத் - எந்த காரணத்தினால், வயம் - நாம், ராஜ்யசுகலோபேன - ராஜ்ய சுகத்தில் ஆசை வைத்துள்ளோமோ, ஸ்வஜனம் - சுற்றத்தாரை, ஹந்தும் - கொல்வதற்கு, உத்யதாஹா - முயல்கிறோமோ, தத் - அந்த காரணத்தினால், மஹத்பாபம் - பெரிய பாவம், கர்தும் - செய்வதற்கு, வ்யவஸிதாஹா - முன் வந்துள்ளோம்.

**கருத்துரை:**

அரச சுக ஆசையினால் நாம் பந்துக்களை கொல்வதற்குத் தலைப்பட்டு மஹா பாவத்தை செய்வதற்குத் துணிந்தோம்! ஐயகோ!

**46. யதி மாமப்ரதீகாமசஸ்த்ரம் சஸ்த்ரபாணயஹ|**
**தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ்தன்மே க்ஷேமதரம் பவேத்|| (46)**

**சொற்பொருள்:**

அசஸ்த்ரம் - ஆயுதமில்லாமலும், அப்ரதிகாரம் - எதிர்க்காமலும், மாம் - என்னை, ரணே - யுத்தத்தில், சஸ்த்ர பாணயஹ - கையில் ஆயுதம் ஏந்தியுள்ள, தார்தராஷ்ட்ராஹா - துரியோதனாதியர், ஹன்யுஹு யதி - கொல்வார்களானால், தத் - அது, மே - எனக்கு, க்ஷேமதரம் - மிகவும் க்ஷேமமுடையது, பவேத் - ஆகும்.

**கருத்துரை:**

ஆயுதங்கள் தரிக்காமலும், எதிர்க்காமலும் இருக்கிற என்னை, ஆயுதங்கள் ஏந்திய துரியோதனாதிகள் என்னைக் கொல்லுவார்களானால் அதுவே எனக்குப் பெரு நன்மையாகும்.

**விளக்கவுரை:**

"க்ஷேமதரம்" - ஆயுதங்களற்றிருந்த தன்னை எதிரிகள் கொன்றால் நலமாக இருக்கும் என்று அர்ஜுனன் கீழ்க்கண்ட காரணங்களால் சொல்லியிருக்கக் கூடும்.

1. குலநாசம் செய்து புதிதாக பாவத்தை சம்பாதித்துக் கொள்வதை விட அதனைத் தடுத்து இதற்கு முன்பு செய்த புண்ணியத்தை காப்பாற்றிக் கொள்ளமுடியும்.
2. சுற்றத்தாரை வதை செய்வதால் ஏற்படும் பாவம் தடுத்து நிறுத்தப்படும்.
3. பந்துக்களின் உயிர் நிலைக்கும்.
4. அவர்களைக் காப்பாற்றுவதால் புண்யமும் சேர்ந்து மோக்ஷ சாதனைக்கு உதவிபுரியும்.

**முன்னுரை:**

அர்ஜுனன் இவ்வாறாக தனது மனக் கலக்கத்தை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிற்கு சொல்லி கடைசியில் என்ன செய்தான் என்பதை சஞ்சயன் சொல்கிறார்.

**சஞ்சய உவாச:-**

**47. ஏவமுக்தவா அர்ஜுனஹ ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத்।**
**விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்னமானஸஹ॥ (47)**

*சஞ்சயன் சொன்னது.*

**சொற்பொருள்:**

ஸங்க்யே - யுத்த பூமியில் அர்ஜுனஹ - அர்ஜுனன், ஏவம் - இவ்வாறாக, உக்த்வா - சொல்லி, சோகசம்விக்ன மானஸஹ - துக்கத்தினால் மிகுந்த தவிப்பிற்கு உள்ளான மனத்துடன், ஸசரம் - அம்புடன் கூடிய, சாபம் - வில்லை, விஸ்ருஜ்ய - எறிந்துவிட்டு, ரதோபஸ்தே - தேர்த்தட்டில், உபாவிசத் - சோர்ந்து உட்கார்ந்தான்.

**கருத்துரை:**

சஞ்சயன் சொன்னான் - (ஓ திருதராஷ்டிர) மஹாராஜா! யுத்த பூமியில் அர்ஜுனன் இவ்வாறு சொல்லி சோகத்தால் கலங்கின சித்தத்தை உடையவனாய், அம்புடன் கூடிய வில்லை எறிந்துவிட்டு சோர்ந்து உட்கார்ந்து விட்டான்.

**விளக்கவுரை:**

"சோகஸம்விக்நமானஸஹ" - அர்ஜுனன் சோகம் நிறைந்த சித்தத்துடன் வில் அம்புகளை கூட நழுவ விட்டான். அர்ஜுனனின் வாழ்க்கையில் இதுவரை இவ்வாறு உற்சாகமிழந்து காண்டீபத்தை நழுவவிட்டமை ஒருமுறை கூட நிகழவில்லை. எனவே இதற்கான வலுவான காரணம் ஒன்று இருந்திருக்க வேண்டும். சுற்றத்தாரைப் பற்றிய கவலையே அது. அந்தக் கவலை துக்கமாக மாறிற்று. அதனால் அவன் ராஜ்யத்தை, போகத்தை ஒதுக்கி தள்ளினான், யுத்தத்தை

ஒதுக்கினான். அர்ஜுனனுக்கு இத்தகைய மிகப் பெரிய விரக்தியைக் காரணமாக வைத்து கொண்டு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவனுக்கு ஆத்ம ஞானத்தை உபதேசித்தார். அர்ஜுனனின் விஷாதம் (சோகம்) விஷாதமாக இல்லாமல் விஷாதயோகமாக மாறியது. ஏனெனில் அர்ஜுனன் உலக சுகங்களின் மீது. ராஜ்ய போகங்களின் மீது, விரக்தி ஏற்பட்டு தர்மத்தைத் தெரிந்து கொள்வதற்காக பரிதவித்தான். (தர்ம ஸ்ம்மூட சேதாஹா) அத்தகைய பரிதாபம் முமுக்ஷுக்களுக்கு மிகவும் தேவை. தெய்வத்திற்காக, தர்மத்திற்காக ஏற்படும் பரிதாபம் (விஷாதம்) யோகத்திற்கு வழி ஏற்படுத்தும். ஒன்றின் மேல் விரக்தி (விஷய போகங்களின் மேல்) இன்னொன்றின் மேல் ஆசை (தர்மத்தின்மேல்) மோக்ஷத்திற்கு மிகவும் தேவையானது. அப்படியானால் உலக வைபவங்களில் விரக்தி, தர்மத்தின்மேல், தெய்வத்தின்மேல் ஆசை இருந்தால்தான் பரமார்த்த பதத்திற்கு ஜீவன் விரைவாக முன்னேற முடியும். அர்ஜுனனுக்கு இரண்டும் சேர்ந்தது. எனவேதான் அவனது அருகதையைக் கருதி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உடனேயே நல்ல ஞான உபதேசத்தைச் செய்தார். அர்ஜுனனைப் போன்றே எவராயினும் காட்சிப் பொருள்களின் மேல் விரக்தி ஏற்பட்டு தர்மத்திற்காக அலைப்புற்றால், பகவத னுகிரகத்தினால் அவனுக்கு ஞானோதயம், பரம சாந்தி இவை தவறாது கிடைக்கும்.

**இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே.**

**ஸ்ரீ கிருஷ்ணார்ஜுனஸம்வாதே அர்ஜுனவிஷாதயோகோ நாம ப்ரதமோஅத்யாயஹசச**

இது பிரம்ம வித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத் கீதை என்னும் உபநிஷத்தின் கண் உள்ள அர்ஜுன விஷாத யோகம் என்ற முதல் அத்தியாயம்.

